# பொதுமறை அமுது

(திருக்குறள் விளக்கம்)


கவிரத்தின

நலங்கிள்ளி





**பூவழகி பதிப்பகம்**

29/2, சீனிவாச பெருமாள் சன்னதி தெரு

இராயப்பேட்டை, சென்னை-600 014

# அணிந்துரை

டாக்டர்

**சிலம்பொலி சு. செல்லப்பனார் M.A., Ph.D.,**

இயக்குநர், உலகத் தமிழ் ஆராய்ச்சி நிலையம், சென்னை.

மனித இனத்திற்கு வழிகாட்டும் ஒளிவிளக்காய்ப் போன்றாப் புகழ் பெற்று விளங்குவது திருக்குறள் எனும் தமிழ் மறையாகும். கி. பி. பத்தாம் நூற்றாண்டில் இயற்றப் பெற்ற 'கல்லாடம்' எனும் தமிழ் நூலிலே திருக்குறள் எனும் பெயர்

'தேரான் றெளியெனுந் திருக்குறள் புகுத்துங்'
(கல்லாடம்—60)

என்று முதன்முதலில் வழங்கப் பெற்றுள்ளது.

இதற்கு முன்னர் 'முப்பால்' எனும் பெயராலேயே இந்நூல் அழைக்கப்பட்டதைத் 'திருவள்ளுவ மாலையில்' இடம் பெற்றுள்ள செய்யுள்கள் சிலவற்றால் அறியலாம். அறம், பொருள், இன்பம் எனும் மூவகைப் பேறுகளைப் பற்றிய முப்பெரும் பகுதிகளைக் கொண்ட நூல் எனப் பொருள்படும்.

திருக்குறளை முப்பெரும் பிரிவுகளாகவும், ஒவ்வொரு பிரிவிலும் பல இயல்களாகவும் பாகுபடுத்தியவர் யார்

எனும் ஐயப்பாடு காலந்தோறும் அறிஞர்களிடையே நிலவி வருகின்றது. எனினும் திருக்குறளின் இயல் பாகுபாடும் அதிகார அமைப்பும் பரிமேலழகர் எனப் புகழ்பெற்ற உரையாசிரியர் அமைத்த முறைமையைப் பின்பற்றியன வாகத் தோன்றுகின்றன.

பரிமேலழகர் திருக்குறளின் முதல் பிரிவான அறத்துப் பாலை இல்லறவியல், துறவறவியல், ஊழியல் என வகைப் படுத்தி, முதல் நான்கு அதிகாரங்களை நூலிற்குப் பாயிர மாக விளங்குவன என்று கூறுகிறார். அடுத்துப் பொருட் பாலை அரசியல், அங்கவியல், ஒழிபியல் என்று அவர் மூவகையாகப் பாகுபடுத்தியுள்ளார்.

பிறகு காமத்துப்பாலை களவியல், கற்பியல் எனக் கைகோள் அடிப்படையில் வகைப்படுத்தியுள்ளார். மேலும் காமத்துப்பாலில் இடம்பெறும் அதிகாரங்களை ஆண்பாற் கூற்று, பெண்பாற் கூற்று இரு பாலாரின் கூற்று என்றும் நுட்பமாகவும் வகைப்படுத்தியுள்ளார்.

ஆனால் பரிமேலழகருக்குக் காலத்தால் முற்பட்ட திருவள்ளுவமாலைச் செய்யுள்கள், சில பரிமேலழகரின் இயல் பகுப்பு முறையிலிருந்து வேறுபட்ட வகைப் பாட்டைக் கூறுகின்றன.

''பரிமேலழகர் அறத்துப்பாலைப் பகுத்துள்ள முறை யின்படி இல்லற இயலில் 24 அதிகாரங்களும், துறவற இயலில் 14 அதிகாரங்களும் ஆக 38 அதிகாரங்கள் இடம் பெற்றுள்ளன'' என்று டாக்டர் சு. த. திருநாவுக்கரசு கூறுகின்றார். ஆனால் திருவள்ளுவமாலை செய்யுள் (25) அறத்துப்பாலின் 38 அதிகாரங்களையும் நான்கு பகுதிகளாக வகைப்படுத்திக் காட்டுகிறது.

பாயிரம் நான்கில் லறமிருபான் பன்மூன்றே
தூய துறவறமொன் றூழாக—ஆய
அறத்துப்பால் நால்வகையர் ஆய்ந்துரைத்தார் நூலின்
திறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து

என்பதனால் இதனை அறியலாம். இச்செய்யுளால் பாயிரம் 4 அதிகாரம்; இல்லறம் 20 அதிகாரம்; துறவறம் 13 அதிகாரம்; ஊழ் ஓர் அதிகாரம் ஆக 38 அதிகாரங்களையும் இவ்வாறு நான்கு இயல்களாகப் பிரித்துள்ளனர் என்பது புலப்படுகிறது.

இவ்வாறு திருக்குறளின் பழைய அமைப்பை ஏன் மாற்றி அமைக்க வேண்டும் என்ற எண்ணம் எழலாம். தற்காலத் திறனாய்வு அணுகுமுறைகளில் ஒன்றாக வளர்ந்துவரும் கட்டமைப்பு நீக்கத்தை எல்லா இலக்கியங்களிலும் செய்ய முடியாது. அவ்வாறு மாற்றி அமைத்தாலும் அதனால் விளையும் பயன் சிறந்ததாகவும் உயர்ந்ததாகவும் இருத்தல் வேண்டும். இவ்வாறு செய்வதன் மூலம் பழைய மரபிற்குப் புத்துயிர்ப்பு அளிக்கப்படும். அமைப்பில் ஒரு முறைமை இடம் பெறும். அதனால் தெளிவு உண்டாகும். காலத்தின் தேவைக்கு ஏற்ப மூல நூலின் அமைப்பையும் பயன்பாட்டையும் மிகுதிப்படுத்தலாம். புதிய சிந்தனைப் போக்கிற்கு இடம் தருவதன் மூலம் பரந்து பட்ட கண்ணோட்டத்தைப் புதிய சமுதாயம் பெறுமாறு தூண்டலாம்.

தமிழறிஞர் டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் பரிமேலழகரின் அறம், பொருள், இன்பம் என்ற திருக்குறளின் வைப்பு முறையை மாற்றி அமைத்தார். அவர் காமத்துப்பால், பொருட்பால், அறத்துப்பால் என்ற முறையிலே 'திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்' என்ற நூலை எழுதியுள்ளார். காதலும் பொருளும் வாழ்க்கையின் படிகள். அறமே வாழ்க்கையின் உயிர்நிலை. மனம் பண்படும் இடம் காதல் வாழ்க்கை; மனம் பயன்படும் இடம் பொது வாழ்க்கை; மனம் வாழும் இடமே தனிவாழ்க்கை எனத் தாம் அமைத்த திருக்குறள் வைப்பு முறையினை டாக்டர் மு. வரதராசனார் விளக்குகின்றார். இந்நூலுக்கு முன்னுரை அளித்துள்ள திரு. வி. க. அவர்களும் இந்த வைப்பு முறையை ஏற்றுக்கொண்டு பாராட்டியுள்ளார்.

திரு. நலங்கிள்ளி அவர்களின் 'பொதுமறை அமுது' எனும் இந்நூல் 1330 குறட்பாக்களையும் எளிய முறையில் விளக்குகின்றது. திருக்குறளின் 133 அதிகாரங்களின் வைப்பு முறையில் சிற்சில மாற்றங்கள் இந்நூலில் செய்யப் பட்டுள்ளன.

'பொதுமறை அமுது' எனத் திருக்குறளுக்குப் பெயர் வைக்கப்பட்ட இந்நூலில் முதலதிகாரமாகக் கடவுள் வாழ்த் தும், அடுத்து வான்சிறப்பும் அமைய, அதையடுத்து மழையின் பயனாய 'உழவு' எனும் அதிகாரம் இடம் பெற்றுள்ளது. உழவையடுத்து இல்வாழ்க்கையும், வாழ்க் கைத் துணைநலமும் இடம் பெற்றுள்ளன. இதையடுததுக் காமத்துப்பாலின் 25 அதிகாரங்களும் இடம் பெற்றுள்ளன.

காதல் வாழ்க்கையின் பயனாகிய மக்கட்பேறும் அதன் தொடர்பாக மனிதன் நல்வாழ்வு வாழ வேண்டிய முறை களைக் கூறும் இல்லற இயலின் பகுதிகள் யாவும் அமைக்கப் பட்டுள்ளன.

இதைத் தொடர்ந்து சமுதாய ஒழுங்கினை, அமைப்பை, தனிமனிதன் பொது வாழ்க்கை முறையை, அவன் வாழ்வும் மனமும் பண்படும்படியான பொருட்பால் அதி காரங்கள் எளிமையாக விளக்கப்பட்டுள்ளன.

இறுதியாக, துறவற இயலும் அதையடுத்து ஊழியலும் பெற்று இந்நூல் நிறைவு பெறுகிறது. 'கள்ளுண்ணாமை' என்ற திருக்குறள் அதிகாரம்'சூது', 'வரைவின் மகளிர்' என வரும் அதிகாரத் தலைப்பினைப் போன்று 'கள்ளுண்ணல்' என்று தலைப்பிடப்பட்டுள்ளது.

'எல்லாப் பொருளும் இதன்பால் உள' என்னும் பெருமையினைப் பெற்றது வள்ளுவரின் திருக்குறள். இதனால் இந்நூலுக்கு உரை காண்போர்க்கும் பல்துறை அறிவும் வேண்டும் என்பது தேற்றம். இத்துணைச் சிறப்பு வாய்ந்த திருக்குறளுக்கு உரைகண்டவர் பலர். திறனாய்வு

செய்தவர் சிலர். உரையும் ஆராய்ச்சியும் காலத்திற்கு ஏற்றவாறு பிறப்பன. மக்களுக்குரிய பொழுதும் நேரமும் விரைவாகக் குறைந்து கொண்டே வருகின்ற இக்காலத்தில் குறைந்த கால அளவில் தெளிவுபட திருக்குறளின் உட்பொருளை உயிர்நாடியைப் புரிந்து கொள்ள இந்தப் 'பொதுமறை அமுது' என்ற நூல் உறுதுணையாகும்.

வான் மழை இல்லையேல் வையகமில்லை. எனவே திருவள்ளுவர் மழையை அமிழ்தம் என்கிறார்.

''வான்நின்று உலகம் வழங்கி வருதலால்
தான்அமிழ்தம் என்றுணரற் பாற்று''

—குறள் 11

உரையாசிரியர் பரிமேலழகர், ''அமிழ்தம் உண்டார் சாவாது நிலை பெறுதலின், உலகத்தை நிலைநிறுத்துகின்ற வானை அமிழ்தமென்றார்'' எனக் குறிப்பிடுகின்றார். எல்லிசுதுரை அவர்கள் ''மழையையே உண்மை அமிழ்தமாகக் கொள்ள வேண்டும்; வேறு அமிழ்தம் இல்லை என்பது திருவள்ளுவர் கொள்கையாக இருக்கும்'' என்கிறார். மழை அமிழ்தமாகக் குறிக்கப்படுவதை ''அமிழ்து திகழ் கருவிய கண மழை'' என்று பதிற்றுப் பத்துச் சொற்றொடராலும் அறிய முடிகின்றது. மழையே அமிழ்து எனக் குறிப்பிட்டுப் பாரதிதாசன் பாடுகின்றார்.

''வான்நின்று மண்ணில் வந்து
மக்களைக் காக்கும்; அஃது
தேன் அன்று கரும்பும் அன்று;
செந்நெலின் சோறும் அன்று;
ஆன்அருள் பாலும் அன்றே;
அதன்பெயர் அமிழ்தாம்; தொன்மை
ஆனபே ருலகைக் காக்க
அமிழ்வதால் மழைஅஃதே யாம்''

—குடும்ப விளக்கு, மகப்பேறு

விண் நின்று அமிழ்வதால் மழைத்துளி 'அமிழ்தம்' எனப்படுவதாகப் பாவேந்தர் பாரதிதாசனார் கூறுகின்றார். இருவகையுணவாய் விளங்கும் மழையே அமிழ்தம் எனப் பெயர் பெற்றுள்ளது என்பதை 'அமிழ்தம் என்றது சாவா மருந்தாகிய இருவகையுணவை' என மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் புலப்படுத்துகிறார். உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத சோறும் நீரும் தொடர்ந்து பசிதகை(தாக)யால் நேரும் சாவைத் தவிர்த்தலால் இரு வகையுணவை இரு மருந்து என விளக்கி, தம் கருத்துக்கு அரணாக 'இருமருந்து விளைக்கும் நன்னாட்டுப் பொருநன்' என்ற புறநானூற்று வரியையும் அவர் மேற்கோள் காட்டு கிறார். வெந்து மலர்ந்த சோற்றுப் பருக்கை, அவிழ் எனப்படும் என்று குறிப்பிட்டு இந்த அவிழ் என்ற சொல்லே, அவிழ்—அவிழ்து. அவிழ்தம்—அமிழ்தம் என்றாகிறது எனப் பாவாணர் அவர்கள் விளக்குகிறார்கள். வள்ளுவர் கருத்துப்படி 'அமிழ்து' என்று நாம் உணரத்தக்க வகையில் இருப்பது மழையேயாம். அமிழ்து என்பது தேவருலகத்தது என்ற வழக்குமுண்டு. அது எதுவேயாயினும் இனிமை ஆனது—உயர்வானது என்பதில் எண்ண வேறுபாடு ஏதுமில்லை.

திருக்குறள் தமிழே ஓர் அமிழ்து, இந்த அமிழ்தினை உண்ணுகின்ற பேறு பெற்ற நாம் வேறு எந்த அமிழ்து பற்றி யும் எண்ணத் தேவையில்லை. இத்தகைய சாவா இலக்கியங்கள் தமிழிலிருப்பதாற்றான்,

''இருந்தமிழே உன்னால் இருந்தேன்—வானோர்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்''

என்று தமிழ்விடுதூது ஆசிரியர் தருக்குடன் குறிப்பிடு கின்றார். ''திருக்குறட் கருத்து உண்ண உண்ணத் தெவிட் டாதது. குறட்சுவை அமுதச் சுவையினும் சிறந்தது. எவ்வாறெனில் அமிழ்தச் சுவையைத் தேவர்கள் மட்டுமே அறிவர். ஆனால் திருக்குறட் சுவையை எல்லா உலகமு

மறிந்து போற்றுகிறது'' எனத் திருவள்ளுவ மாலையில் புலவர் ஆலங்குடிவங்கனார் குறிப்பிடுகின்றார்.

''வள்ளுவர் பாட்டின் வளம் உரைக்கின் வாய்மடுக்கும்
தெள்ளமுதில் தீஞ்சுவையும் ஒவ்வாதால்—தெள்ளமுதம்
உண்டறிவார் தேவர் உலகடைய உண்ணுமால்
வண்டமிழின் முப்பால் மகிழ்ந்து.''

—திருவள்ளுவ மாலை, 53

இப்பாடலுக்கு உரை எழுதியுள்ள திருத்தணிகைச் சரவணப் பெருமாளையர், ''அமிழ்தம் வாயுள் பெய்தவழி நாவில் பட்ட சிறிது பொழுது அளவே தீஞ்சுவை பயப்பது. இப்பாட்டு (குறள்) நெஞ்சின்கண் நிலைபெற்று ஒழிவின்றித் தீஞ்சுவை பயத்தலில் இஃது அமிழ்தினும் சிறந்ததாயிற்று'' என்பார்.

அமிழ்தினும் உயர்ந்த பொதுமறையாம் திருக்குறளை நாம் துய்த்து நலம் கொள்ள வேண்டுமெனும் நன்னோக்கோடு இந்நூலை யாத்துள்ள கவிஞர் நலங்கிள்ளி அவர்களைப் பெரிதும் பாராட்டி மகிழ்கிறேன். இது போன்று இன்னும் பல அரிய நூல்களை அவர் தொடர்ந்து வெளியிட வேண்டுமென விழைகிறேன்.

அன்புடன்,

சு. செல்லப்பன்

19-10-90

அருட்பெருஞ் ஜோதி! அருட்பெருஞ் ஜோதி!
தனிப்பெருங் கருணை! அருட்பெருஞ் ஜோதி!

# அணிந்துரை

நண்பர் திரு. நலங்கிள்ளி தாமியற்றிய 'பொதுமறை அமுது' என்னும் நூலுக்கு என்னை ஓர் அணிந்துரை வழங்குமாறு கேட்டுக் கொண்டார்.

''பிணைஏர் மடநோக்கும் நாணும் உடையாட்கு
அணி எவனோ ஏதில தந்து''

என்பது குறள்.

அன்பர் இயற்றிய நூலே அழகிற் சிறந்து பொலிகையில் அணிந்துரை என்ற போர்வையால் அதன் அழகைக் குறைப் பானேன்? எனினும் மரபு பற்றி இரண்டொன்று கூற விரும்புகிறேன்.

திருவள்ளுவர் யாத்த உலகப் பொதுமறையாம் திருக்குறள் நூலை உரையாசிரியர்கள் தம் கருத்துக்கேற்ப அறம் 38, பொருள் 70, இன்பம் 25 என்று இயல் வகுத்தனர்.

ஆனால் திரு. நலங்கிள்ளி அவர்கள் வாழ்க்கைத் துணை நலத்தோடு கடைசியிலுள்ள 25 அதிகாரங்களையும் இணைத்துள்ளார்.

இது மேற்போக்காகப் பார்க்கையில் ஒரு புரட்சிபோல் தோன்றினும் இதுவே உண்மை.

உண்மையில் அறம் என்பது இல்லறமே! இதுவே திருவள்ளுவர் கருத்துமாகும். என்னை?

''அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை' என்று அவர் கூறுவது காண்க.

70 அதிகாரங்களில் பொருள் பற்றிக் கூறுகிறார். 'திறனறிந்து தீதின்றி வந்த பொருளையே பொருள்' எனக் கருதுகிறார்.

இவற்றில் ஈதலே இன்பம் என்னும் பொருளில்,

''ஈத்துவக்கும் இன்பம் அறியார் கொல்
தாமுடைமை வைத்திழக்கும் வன்கணவர்''

என்பார்.

மனிதன் அறவழியில் பொருளீட்டி, தனக்கொத்த ஒரு மனைவியோடு வாழ்ந்து, விருந்தினர்ப் பேணி காமம் வெகுளி மயக்கம் இவைகளின் நீங்கி வாழும் வாழ்க்கையே இல்+அற வாழ்க்கை;

இரண்டொரு அறிவறிந்த மக்களைப் பெற்ற பிறகு, வாழ்க்கை நிலையாமை ஓர்ந்து, பொறி புலன்களை கட்டுப் படுத்தி அவா அறுத்து பேரா இயற்கைநிலை விழைந்து தவமியற்றி விடுபேறு அடைவதே வழிமுறை.

திருவள்ளுவர் குறள் நெறி மதம், மொழி நாடு காலம் கடந்திருப்பதைப் போலவே அதிகார வைப்பிற்கும் அது அடங்கவில்லை,

காட்டாக

''பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்று ளெல்லாம் தலை''

இது இல்லற அறம். ஆனால் உரையாசிரிகள் இதை துறவறவியல் கொல்லாமை அதிகாரத்துள் வைத்துள்ளனர், இன்னும் பல காட்டலாம்,

பாயிரம் உள்ளிட்ட அறத்துப் பாலில் இல்லறமும், துறவறமும் வீடு பேறும்; பொருட்பாலில் மனித மனம் பண்படுவதற்கான சுகை ஒப்புரவறிதல், பண்புடைமை, சான்றாண்மை ஆகிய அதிகாரங்களும்; இன்பத்துப் பாலில் ''அறிதோறறியாமை கண்டற்றால்'', ''தம்மில் இருந்து தமது பாத்து உண்டற்றால்'' என்னும் அறிவுரைகளும் விரவி வருகின்றன. ஆக திருக்குறள் நூல் முழுவதும் எல்லார்க்கும் எல்லாவிதமான அறவுரைகளும் அறிவுரைகளும் தன்னுள் அடக்கியுள்ளது.

ஆகவே நலங்கிள்ளி அவர்களும் தம் நூலில் தாம் கூறப் புகும் கருத்திற்கேற்ப அதிகார வைப்பில் சிற்சில மாற்றம் செய்துள்ளார்கள். இதுவே அறிவார் தொழில்.

மற்று, 'செயற்கரிய செய்வர் பெரியார்' என்பதற்கு இதுவரையில் உரையாசிரியர்கள் செய்வதற்கு அருமையான செயல்கள் என்று சொன்னார்களே தவிர எது செய்வதற்கு அரிய செயல் என்று சுட்டிக்காட்டவில்லை. இந்நூலாசிரியர் ஒருவரே பொறிபுலன்களைக் கட்டியாள்வதே செயற்கரிய செயல் என்று காட்டியது அவரது நுண்மாண் நுழைபுலனுக்குச் சான்று.

இன்னும் நூலில் பல நுட்பங்கள் உள, விரிவஞ்சி விடுத்தனம்.

இந்நூல் இளமையில் தமிழைப் புறக்கணித்து முதுமையில் திருக்குறளைக் கற்க விரும்புவோர்க்கும், மாணவர்களுக்கும் குறட்பாவைப் படித்துப் புரிந்துகொள்ள மாட்டார்க்கும் ஒரு வரப்பிரசாதம். தமிழர் அனைவரும் படித்துப் பயன் பெறுக!

திருக்குறள் நம்பி ஊ. வ. தட்சிணாமூர்த்தி
தலைவர், பிரம்மஞான சமரச சன்மார்க்க சங்கம்
அரக்கோணம் வடார்க்காடு மாவட்ட சன்மார்க்க சங்கம்
வேலூர் துணைத் தலைவர் மாநில சன்மார்க்க சங்கம்
தமிழ்நாடு திருக்குறள் திருவருட்பா விரிவுரையாளர்.

# முன்னுரை

உலகப் பொதுமறை அருளிய திருவள்ளுவர் கி.மு. 31-ல் பிறந்ததாக, ஆய்வாளர்கள் கருதுகின்றனர். எனவே திருக்குறள் முதல் நூற்றாண்டைச் சார்ந்தது.

தமிழ நாகரிகம் அக்காலத்திலேயே மிக உயர்ந்து விளங்கி இருந்தது என்பதற்குச் சங்க நூல்களே சான்று. ஆயினும் வடமொழிக் கலாச்சாரத்தின் ஊடுருவல், சிறிது சிறிதாகத் தமிழ் மொழியினும் தமிழ்க் கலாச்சாரத்திலும் மெல்ல நுழைய முற்பட்டு விட்டது என்பதை நமது உலகப் பொது மறையாம் திருக்குறளிலேயே காணலாம்.

அக்காலத் தமிழர்கள் காதலை அகம் என்றும் அறம் பொருள் இரண்டையும் புறம் என்றும் வகுத்தனர். பின்னர் வடமொழிக் கலாச்சாரத் தாக்கம் ஏற்பட்டதன் விளைவாக அவ்வடவர் பகுப்பாகிய, தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் என்பதை நந்தமிழர் அறம் பொருள் இன்பம் வீடு எனப் பேரிட்டு ஏற்றுக் கொண்டனர்.

இந்த வகையில் வள்ளுவப் பெருந்தகை, புறத்திணையில் பண்டு அடக்கப்பட்டவற்றை அறம் பொருள் என இருபகுப் பாக்கி இன்பத்தை அதை அடுத்து வைத்து, முப்பாலாக்கித் தமிழ் மறை அருளினார். (வீட்டை விட்டு விட்டார்.)

ஆயினும் வள்ளுவர் அவ்வடமொழியாளர்கள் கூறிய நான்கு நிலைகளாம் பிரம்மசரீயம், கிருகஸ்தம், வானப் பிரஸ்தம், சந்நியாசம் எனும் நான்கு நிலைகளையும் அப்படியே ஏற்றுக் கொள்ளாமல் தமிழ் மரபுப்படி, இல்லறம் துறவறமெனும் இரு நிலைகளாகவே வைத்து விளக்கியுள்ளார்கள். மேலும் வடமொழியாளர் வகுத்துள்ள குலாச்சாரத் தர்மத்தை அறவே விலக்கி விட்டார்.

திருக்குறள் உரையாசிரியருள் தலை சிறந்தவரான பரிமேலழகர் தம் திருக்குறள் உரையிலே அறம் பொருள் இன்பமென்னும் வைப்பு முறைக்கு பின்வரும் காரணம் காட்டியுள்ளார்.

1. இம்மை மறுமை வீடு மூன்றும் பயப்பது அறம்.
2. இம்மை மறுமை இரண்டையும் பயப்பது பொருள்.
3. இம்மை ஒன்றை மட்டுமே பயப்பது இன்பம்.

இந்த வைப்பு முறையை மாற்றி, காமம், பொருள், அறமென்னும் முறையிலே, Dr. மு. வ. அவர்கள் திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கமெனும் நூலைத் திட்டியுள்ளார்.

இந்நூலுக்கு முன்னுரை தந்துள்ள திரு. வி. க அவர்கள், "திருக்குறள் பால் வைப்பைப் பார்ப்போம். அஃது அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்ற வைப்பைப் பெற்றிருக்கிறது. இவ்வைப்பைத் தலைகீழாக்கு கிறார் வரதராசனார்..............நூலின் தோற்று வாயி லேயே புரட்சி வீறுகிறது" என இவ்வைப்பு முறையைத் தாம் ஏற்றுக் கொள்ளுகிறார்.

அதிகாரத்துக்கு ஒரு கட்டுரையாக அமைந்த பொது மறை அமுது எனும் இந்நூல் 1330 குறட்பாக்களையும், எளிய முறையில் விளக்கி எழுதப்பட்டது. இதனது 133 அதிகாரங்களையும் வைப்பு முறையில் சிற்சில மாற்றங் களோடு அமைத்துள்ளேன். மாற்றங்களை வரவேற்று, அதற்குரிய காரணங்களை பேரறிஞர் டாக்டர் சிலம்பொலி செல்லப்பனார் அவர்கள் தம் அணிந்துரையில் தந்துள்ள விளக்கம் போற்றத்தக்கது.

> "இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
> அன்பொடு புணர்ந்த ஐந்திணை"
>
> (தொல். கள, 1)

—எனும் தொல்காப்பிய சூத்திரமும் ஈண்டு நோக்கத்தக்கது.

இந்நூல் திருமலை—திருப்பதி தேவஸ்தான நிதி உதவி யுடன் வெளியிடப்படுகிறது. நிதி வழங்கிய T.T. தேவஸ் தானத்தார்க்கும் நிதி உதவி வழங்கப் பரிந்துரை வழங்கிய அறிஞர் பெருமக்கட்கும் என் உளமார்ந்த நன்றி.

என் வேண்டுகோளுக்கிணங்கி, பல்வேறு அலுவல்கட் கிடையேயும் இந்நூலை ஆய்ந்து, அரியதொரு

அணிந்துரையை, அன்பு கூர்ந்து வழங்கிய, என் மதிப்புக் குரிய பேரறிஞர், டாக்டர் சிலம்பொலி சு. செல்லப்பனார் அவர்கட்கு நான் மிக மிக நன்றி பாராட்டக் கடமைப் பட்டுள்ளேன்.

என் கையேட்டுப் பிரதியை அழகுறப் பெயர்த்தெழுதிய தோடு, அரிய பாராட்டுரையும் வழங்கிய மதிப்புக்குரிய பெரியார் திருக்குறள் நம்பி வேலூர் ஊ.வ. தட்சிணா மூர்த்தி முதலியார் அவர்கட்கு என் வணக்கமும் நன்றியும் உரியது.

இந்நூல் அச்சாகு முன் கைப்பிரதியைச் செப்பஞ் செய்து தந்தந ண்பர் புலவர் திரு. E. முனிசாமி M.A., அவர்கட்கு என் நெஞ்சார்ந்த நன்றி.

என் மாணவச் செல்வங்கள், புலவர் திரு. வ. தங்கவேல னார் M.A. B.Ed., திரு. சீனிநடராசன் M.A. B.Ed., கவிஞர் திரு. Dr. நாதன் மூவரும் தாம் தம் தேர்வெழுதுங் கால் இந்நூலின் கைப்பிரதி பெரிதும் பயன்பட்டதெனக் கூறி இதை வெளியிட்டால் தமிழ் மாணவ உலகுக்குப் பெரிதும் பயன்படுமென எண்ணைப் பெரிதும் தூண்டி ஊக்குவித்தனர், அவர்கட்கு என் நன்றி.

இதை அழகுற அச்சிட்டு வெளியிட்ட, நண்பர் இலக்கியச் செல்வர் திரு. மூவேந்தர் முத்து அவர்கட்கும், புருப் திருத்திய அவர்தம் மகளார் செல்வி தமிழரசி (M.A.) அவர்கட்கும் அழகான முறையில் ஓவியம் உருவாக்கித் தந்த ஓவியர் திரு. ஜமால் அவர்கட்கும் என் நன்றி.

தமிழ்கூறு நல்லுலகம் எனது இச்சிறு நூலையுமேற்று ஆதரவளித்து, என்னை மேலும் தமிழ்ப்பணியில் ஈடுபட ஊக்குவிக்கும் எனப் பெரிதும் நம்புகிறேன்.

அன்பன்,
நலங்கிள்ளி

அரக்கோணம்
19.10.90

# பொது மறை அமுது

## 1. கடவுள் வாழ்த்து

எழுத்துக்கள் எல்லாம் 'அ' என்னும் எழுத்தையேதான் முதலாகக் கொண்டு இயங்குகின்றன. அதுபோல் இவ்வுலகமும் இறைவனையே தனக்கு முதலாக உடையதாம்.

அவ்விறைவனோ தூய உண்மை அறிவுடையவன். அவனுடைய நலம்தரும் அடிகளைத் தொழாதவர்கள் பல நல்ல நூல்களைக் கற்றிருந்தபோதிலும் அதனால் அவர்களுக்குப் பயன் ஏதும் இல்லை. அவன் நினைப்போர் இருதயத் தாமரைமீது விரைந்து சென்று வீற்றிருப்பவன். அவனுடைய பெருமைமிக்க அடிகளைச் சேர்ந்தவரோ நீடூழி நல் வாழ்விலே வாழ்வார்.

யாவரிடத்திலும் எப்பொருளிடத்தும் விருப்பு வெறுப்பு அற்றவனாம் இறைவன் தாள்களை இடையீடின்றிக் கருதுபவர்கள் தாமும் விருப்பு வெறுப்பற்றவர்களாய் வாழ்வார்கள்.

எனவே, இறைவனுடைய மேற் சொல்லப்பட்ட மெய்ம்மைப் பொருள் சேர்ந்த புகழை இடைவிடாது கருதுபவர்களிடம் காமம், வெகுளி, மயக்கமாம் இருவினைகளைப்

பற்றி வருகின்ற நல்வினை தீவினை எனும் இருவினைப் பயன்களும் சென்று பொருந்தாவாம்.

ஐம்பொறிகளை வாயிலாக உடைய ஐவகை ஆசைகளை யும் அறவே நீக்கிய இறைவனது மெய்ம்மையான ஒழுக்க நெறி நிற்பவர்கள் நீடு நல்வாழ்வடைவர்.

இறைவன் தனக்கு உவமையில்லாதவன். அவன் தாள் சேர்ந்தவர்களே மனக்கவலையின்றி வாழ்வர். மற்றவரோ தம் மனக்கவலையை மாற்றுவதற்கு இயலாதவர்.

அவன் அறக்கடல். அழகிய தண்மைக் குணமிக்கவன். அவன் அடிசேர்ந்தவர்களே, பிற கடல்களாம் பொருட் கடலையும் இன்பக் கடலையும் கடக்க வல்லவர். மற்றை யோர் அவற்றுள் சிக்கி வருந்துவர்.

கண்ணிருந்தும் காணவில்லை எனில், காதிருந்தும் கேட்கவில்லை எனில், எப்படி அவைகளால் நமக்குப் பயன் இல்லையோ அதைப் போலவே இறைவன்தன் தாளை வணங்காத் தலையும் பயனற்றதே.

இவ்வுகையிலே இறைவனுடைய அடியாகிய மரக் கலத்தைச் சேர்ந்தவர்களே பிறவி என்னும் பெருங்கடலை நீந்திக் கடப்பர். பிறரோ நீந்திக் கடக்க மாட்டார்.

(இஃது வழிபடு கடவுள் வாழ்த்தோ, ஏற்புடைக் கடவுள் வாழ்த்தோ அன்று. வாழ்த்து, வணக்கம், வருபொருள் உரைத்தல் என்னும் மூன்றனுள் இது வரு பொருள் உரைத் தலின் பாற்படும். கடவுள் பண்புகள் இவை இவற்றை இடை யறாது சிந்திப்பவர்களும் இப்பண்பினை அடைவர். எனவே, கடவுளை வாழ்த்துக [என நமக்குத் தெளிவாக எடுத்தியம்பு கிறார். எனவே கடவுளை வாழ்த்துக] என்றாராயிற்று.)

## 2. வான் சிறப்பு

மழை இடையறாமல் பெய்து உலகத்தை நிலை பெறச் செய்கின்றது. ஆகையினால் அம்மழைதான் அமிழ்தம் (சாவாமருந்து) என்று உணரத் தக்கது. ஏனெனில் மழை, பசிப்பிணி தீர உணவு உண்பவர்கட்கு நல்ல உணவை உண்டாக்குகின்றது. அதோடு தானும் உணவாக நின்று தாகத்தையும் தணிக்கின்றது.

அப்படிப்பட்ட மழை, தான் பெய்ய வேண்டிய காலத்திலேயே பெய்யாமல் பொய்த்துப் போகுமானால் கடல் சூழ்ந்த உலகத்திலேயே பசிப்பிணிதான் நிலைத்து நின்று உயிர்களைத் துன்புறுத்தும். அம்மழை என்னும் வருவாய் தான், தன் பயனைக் குறைத்துவிட்டாலோ உலகத்துக்கு உணவினை நல்கும் உழுதொழிலோர் தாம் தம் ஏர் கொண்டு உழுதொழிலைச் செய்யமாட்டார்.

எனவே பெய்யாமலோ, அதிகமாகப் பெய்தோ உலகத்து உயிர்களைக் கெடுப்பதும், அங்ஙனம் கெட்டு நொந்தவர்களைக் காலாகாலத்தில் அளவோடு பெய்து அவர்களை வாழ்வித்து ஓங்குவிப்பதும் வல்லது மழையொன்றே.

மேலே வானிலிருந்து மழைத்துளி பூமியின் மேல் விழவில்லை என்றால், பூமியின் மேல் பசும்புல் கூடத் தன் தலையைக் காட்ட முடியாது. அதுமட்டுமல்ல நிலத்தைச் சூழ்ந்து மூன்று பங்கு அதிகமாகப் பரவிக்கிடக்கும் பெரிய கடல்கூட மழை பெய்யாமல் பொய்த்துப் போனால் தன் பெருமை குன்றிப் பாழ்படும்.

இம் முறையிலே வானம் வரண்டு போய் உலகத்திலே பஞ்சம் நிலவினால் கோயிலிலே நடைபெறும் அன்றாடப் பூசனைகளும் நடவா. பெருவிழாக்களும் நடவா.

அதுமட்டுமல்ல. மழை பெய்யாதாயின் இடமகன்ற இவ்வுலகிலேயே தானம் செய்வதும் இல்லாமற் போம். தவம் செய்வோர்களும் இரார்.

இந்த உலகத்திலே உலகியல் வாழ்க்கை முறை நன்கு அமையவேண்டுமானால் தண்ணீர் தான் மிகவும் இன்றியமையாதது. அத்தண்ணீரும் இடையறாது மக்கட்குக் கிடைக்க வேண்டுமாயின் மழையில்லாமல் அமையாது. எனவே, மழை இல்லையேல் புழங்கும் தண்ணீர் இல்லை. தண்ணீர் இல்லையேல் வாழ்வே இல்லை.

## 3. உழவு

மழையின் பயன் உணவு. உணவின் காரணம் உழவு. உழவுத்தொழில் இல்லையேல் உலகமும் இல்லை. எத்தொழிலைச் செய்பவர்களாயினும் தம் உணவுக்கென ஏரின்பின் செல்வதே உலக நியதி. எனவே, வருத்தம் மிக்கதாயினும் உழுதொழிலே சிறப்புடையது.அத்தகு வருத்தத்தைத் தாங்க மாட்டாமல் பிற தொழிலிலே ஈடுபட்டவர்களையும் தாங்கும் காரணத்தினால்தான் உழவு, உலகத்திற்கு அச்சாணி போன்றதெனப் படுகிறது. இக்காரணத்தாலேயே உழுதுண்டு வாழ்பவர்கள் உரிமையோடு வாழ்பவர்களென்றும், பிறரை அவ்வுழவர்கள் பின் சென்று தொழுதுண்டு வாழ்பவர்கள் என்றும் கூறப்படுகிறது.

உழு தொழில் எங்கு எங்கு நிற்கிறதோ அந்த நாடு உலகின்கண் மிக ஓங்கிச் சிறப்படையும், பிற மன்னரும் அந்நாட்டிற்குக் கீழ்ப்படிவர். அது மட்டுமல்ல உழவர்கள் பிறரிடம்சென்று கை நீட்டி இரக்கமாட்டார்கள். மாறாகத் தம்மிடம் இரப்பவர்கட்குத் தேவைப்பட்டவைகளையும் மறுக்காமல், மறைக்காமல் ஈவார்கள்.

மற்றுமோர் சிறப்பு; உழவர்கள் தம் கையை வேலை செய்யாது முடக்கிக் கொண்டால்—அதாவது வாளா கிடந்தால் உலக இச்சைகளைத் துறந்துவிட்ட துறவிகளும் தம் நிலையில் நிற்க இயலாது.

அத்தகு சிறப்பினை உடைய உழுதொழிலைச் செய்யுங் கால், புழுதியை நன்றாகக் காயவைத்துப் பின் விதை விதைத்து விளைவித்தால் அதற்கு எரு என, ஒன்று தேவையேயில்லை. ஏர் உழுதல், எரு விடுதல், களைகட்டல், நீர்பாய்ச்சல், காவல் காத்தல் முதலியவை விழிப்பாகக் கவனிக்க வேண்டியவை, என்றும் உழவர்கள் உணர்தல் வேண்டும்.

உழவர்கள் நாள்தோறும் நிலத்துக்குச் சென்று விளைவைப் பாராமலிருந்தால், மனைவி கணவனிடம் பிணங்கிக் கொள்வதைப் போல நிலம் உழவனிடம் பிணங்கிக் கொண்டு விடும்.

எம்மிடம் ஒன்றுமில்லை; யாம் வறியம்; எனச் சோம்பி இருப்பவரைக் கண்டு பூமித்தாய் சிரிப்பாள் என்பதை ஒவ்வொருவரும் உணர்தல் வேண்டும்.

# 4. இல்வாழ்க்கை

இல்லறத்திலேயே வாழ்கின்றவன் அறத்தினது இயல்பினை உடைய, மாணவப் பருவத்தினர், பொதுத் தொண்டு ஆற்றுவோர், ஆதரவற்றவர் எனப்படும் மூவகையினர்க்கு, அவர்தம் நெறி நிற்க வேண்டிய துணையாவான். அது மட்டுமல்ல; அவன் துறவிகட்கும் ஏழை எளியவர்கட்கும் அனாதையாக இறந்து போனவர்களுக்கும்கூடத் துணை நிற்க வேண்டியவனாவான்.

அவனுடைய தலையாய கடன்தான் தன் ஊதியத்தைக் கொண்டு தென்புலத்தார்க்கும், தெய்வத்திற்கும், விருந்தினர்க்கும், சுற்றத்தார்க்கும், உண்டி முதலியன அளித்துத் தன்னையும் ஓம்பிப் பாதுகாத்தலேயாகும். அவனுடைய வருவாய்தான் பழியஞ்சப்பட்டதாய் அமைய வேண்டும். அதை அவன் சமுதாயத்திலுள்ள இல்லோர் முதலியவர் கட்குப் பகுத்து உண்டு வாழ வேண்டும். அப்படி அவன் வாழ்ந்தானாயின் அவன் வாழும் வாழ்க்கை முறையில் ஒழுங்குக் குறைவே ஏற்படாது.

இல்வாழ்க்கையில் வாழும் ஒருவன் அன்பு நெறியையும் அற நெறியையும் கடைப்பிடித்து ஒழுகுவனானால் அவன் வாழ்க்கை முறைதான் பண்பிலே ஓங்கிப் பயன் மிக்கதாக அமையும். இந்த முறையிலே தன்னுடைய இல்லறத்தை அற வழியில் அமைத்துக் கொண்டு ஒழுகும் ஒருவன் இல்லறமற்ற புறநெறியாம் துறவறத்திலே சென்று அடையக்கூடிய பயன் வேறு ஒன்றுமே இல்லை.

எனவே, அறஇயல்பு மாறாமல், தன் இல்வாழ்க்கையை அமைத்து வாழ்கின்றவன், தவ நெறிக்கண் சென்று முயல் கின்றவர் பலருள்ளும் தலைசிறந்தவனே. ஏனெனில் அவன் பிற நெறிப்படுவோரையும் அறநெறிக்கண்ணே ஒழுகச்

செய்கிறான். தானும் அறநெறி தவறாத இல்வாழ்க்கையிலே வாழ்கிறான். எனவே, அவன் தான் மட்டுமே தவநெறி நிற்க முயலும் தவசியிலும் வல்லமை மிக்கவனே.

இம்முறையில் அறம் என்று சொன்னாலே அது இல்வாழ்க்கைதான். அதுவும் பிறன் பழிக்கும்படியான குற்றம் இல்லாது விளங்கினால் மிகச் சிறப்பானதாகும். இந்த இல்லறத்திலே நிலைத்து வாழ வேண்டிய அறநெறிப் படி வாழ்பவன் எவனோ அவனே உலகத்தாரால் வானுலகத்தின் தெய்வத்தோடு ஒருங்கு வைத்து எண்ணப்பட்டு மதிக்கப்படுவான்.

## 5. வாழ்க்கைத் துணை நலம்

மேலே கூறப்பட்ட சிறப்பு மிக்க இல்வாழ்க்கையிலே வாழ்கின்ற ஒருவனுக்கு அவன் இல்வாழ்க்கைக்குத் துணையாய் அமைய வேண்டுவது நலம்மிக்க மனைவியே ஆகும். அவள்தான், தானும் தன் கணவனும் ஆற்றும் மனையறத்திற்கு ஏற்ற நற்குண நற்செய்கைகளை உடையளாயும், தன் கணவன் வருவாய்க்குத் தக்கவாறு வாழ்க்கையை அமைத்துக் கொள்பவளாயும் அமைந்திருந்தால் தான் நல்ல வாழ்க்கைத் துணை எனப்படுவாள்.

இப்படிப்பட்ட மனைமாட்சி ஒரு மனைவியிடம் அமையவில்லையாயின் அவ்வில்லறம் வேறு வகையில் பல சிறப்பு எய்தியிருப்பினும் அதனால் பயனேதும் இல்லை.

எனவே நல்ல குணம் நல்ல செயல்அமைந்த மாட்சிமைப் பட்ட மனைவி அமைந்துள்ளவனுக்கு இல்லாதது ஒன்றுமே இல்லை. மாறாக அம்மாட்சிமையற்ற மனைவியை

அடையப் பெற்றவனுக்கோ உள்ளதாம் சிறப்புகள் எதுவுமே இல்லை.

அத்தகு இல்லாளிடத்துக் கற்பென்னும் கலங்கா நிலைமை அமையப் பெற்றிருக்குமானால், ஒருவன் அடைந்த சிறந்து விளங்கும் பொருள்களுள் பெண்ணைக் காட்டிலும் சிறந்து விளங்கும் பொருள் ஒன்றுமே இல்லை. அவள் தான், பிற தெய்வங்களைத் தொழாளாய், தன் கணவனையே தொழு தெழுகின்ற பண்புள்ளவள் ஆதலினாலே, வேண்டும் காலமறிந்து பெய்யும் மழைக்கு நிகராவாள்.

அந்த இல்லத் தலைவிதான், தன்னைத்தன் மன மொழி மெய்களால் காத்து, தன் கணவனையும் பேணி, பிறந்த குடி, புகுந்த குடிகளின் புகழைக் காக்கக் கடமைப்பட்டவள். அவளே உயர்ந்த பெண் ஆவாள்.

பெண்பாலார்க்குப் பிற காவலால் உண்டாகும் காப்பு எப்பயனையும் தராது. ஆனால் தம் நிறையாம் கற்பால் தம்மைக் காக்கும் காப்பே சிறப்புடையதாகும். இச்சிறப் போடு தம்மைக் கணவராக அடைந்தவரைத் தம் அன்பால் முழுமையாக அடையப் பெற்றவர்கள் தேவருலகச் சிறப்பையும் பெறுவர்.

இங்ஙனமாகப் புகழ் வாய்ந்த இல்லாளை அடையாதவர்க்குத் தம்மை இகழ்பவர்கள் முன்னே சிங்கம் போன்று தலை நிமிர்ந்து நடக்கும் பெருமித நடை வாய்த்தல் இல்லை.

இந்த முறையிலே மங்கலம் என்று சொன்னாலே மனையாளது நற்குண நற்செயல் வாய்ந்த மாட்சிமையே ஆகும். மற்று அதனுடைய நல்ல அணிகலனோ நன் மக்களைப் பெறுதல் ஆகும்.

# 6. தகையணங்குறுத்தல்

உலகிலே வாழும் உயிர்கள் அனைத்தும் இன்பத்தை நாடுவனவே. மனிதனும் உயிர்களுள் ஒருவனே. இல்லறத்தில் இணைந்து வாழும் வகை அமையப் பெற்ற ஒருவனும் ஒருத்தியும் வாழ்வில் எதிர்நோக்கி நிற்பது இன்பமே அல்லவா? அந்த இன்பம் திருமணத்துக்கு முன்னும் நிகழலாம். பின்னும் நிகழலாம். முன் நிகழ்வதைக் களவு என்றும் பின் நிகழ்வதைக் கற்பு என்றும் பண்டைத் தமிழ் நூல்கள் கூறும்.

ஒருவன் ஒருத்தியைக் கடற்கரையிலோ பொழிவிலோ, பொதுவிடத்திலோ, கோயிலிலோ காண்கிறான். அவள் அழகு அவனை ஐயமுறச் செய்கிறது. இப்படிப்பட்ட அழகி ஒரு தெய்வ மகளோ? அழகிய மயிலோ? அல்லது பெண்ணோ? என்று பலபட நினைத்து மனமயக்க மடைகிறான்.

பின்னர் தன் பாவையை அவள் பார்வை வெட்டியதை உணர்கிறான். அப்பார்வையாலேயே அவன் தன் நிலைகுலைந்து விடுகிறான். உருவத்தைக் காட்டியே வருத்துகின்ற ஒரு தேவதை தன் சேனையோடு தாக்க வந்ததைப் போன்று உள்ளது இப்பார்வை என்று அஞ்சுகிறான்.

''இதற்கு முன் கூற்றென்பதனை யான் அறிந்திலேன். இன்று பெண்மையோடு கூடிய பெரிய கண்களை உடையதாகவே அக்கூற்று இருக்கும் என அறிந்தேன்,'' என முடிவு கட்டுகிறான்.

ஏனெனில், அப்பார்வை கண்டார் உயிரை உண்ணுகின்ற அமைப்போடு மதர் மதர்ப்பும், சுழற்சியும் கொண்டு இப்போதைக்கு உள்ளதே என ஓடுகிறது அவன் சிந்தனை.

இந்த வகையில் அவள் கண்களை, அவள் வேலாகவும், கண்களேயாகவும், பெண்மான் விழியாகவும் மூன்றும் ஒன்றேயாகவும் காண்கிறான். சிந்தனை ஓடுகிறது அவனுக்கு. இவள் புருவம் வளையாமல் நேராக இருப்பின் ஒரு வேளை இவ்வளவு வருத்தம் நான் அடைந்திருக்க மாட்டேனோ? இவளது நுதலுக்கு முன்னர் போர்க்களத்திலே என் பகைவரும் அஞ்சத்தக்க என் பெருமிதமும் (வீரமும்) அழிந்துவிட்டதே?

அந்தோ! இவ்வளவு அழகுடைய இவளது அழகை மறைக்கத்தானோ இவள் மேனியில் இத்தனை அணிகலன்களைப் பூட்டி விட்டார்கள்? மான் போன்ற நோக்கே ஓரழகு. கன்னத்தில் ஒளிரும் நாணமோ மற்றும் ஓர் அழகு. இவளுக்கு வேறு அணிகலன் எதற்கு எனத் தன் உள்ளத்தைப் பறிகொடுத்த அவன், அவளது பார்வைக் குறிப்பால் உள்ளக் கிளர்ச்சி எய்தியவனாய் "குடித்த போது மட்டுமே கள் இன்பத்தை உண்டாக்கும்; ஆனால் காதலோ கண்டபோதே இன்பத்தை உண்டாக்குவதால் கள்ளைக் காட்டிலும் காதல் மிக உயர்ந்ததே" என்று முடிவு கட்டுகிறான்.

## 7. குறிப்பறிதல்

அவனும் அவளும் ஒருவரை ஒருவர் கண்டனர். அவன் பார்வை சிறகடித்துப் பறக்கத் தொடங்கிவிட்டது. இவள் பார்வை இருவகையாக அல்லவோ உள்ளது. ஒரு பார்வை காதல் நோயை உண்டாக்கி விட்டது. மற்றொரு பார்வை அக்காதல் நோயை நீக்கும் மருந்து போல் உதவியது. அந்த மருந்து போன்ற பார்வையான, கண் சிறிது சுருங்கிய பார்வைதான், காதலின்பத்தின் சரிபாதி அன்று. அதனினும் பெரிது.

அவள் என்னைப் பார்ப்பதும், நான் அவளைக் காணும்போது தலை குனிவதும், நான் அவளைக் காணாத போது என்னைப் பார்த்து மெல்லத் தன்னுள் புன்முறுவல் பூப்பதும் ஆகிய இவையல்லவோ எங்கள் அன்பாகிய பயிர் வளரும்படி பாய்ச்சும் தண்ணீர் ஆகும். அடடா! அந்தப் பார்வைதான் என்ன? நேரான பார்வையா? கடைக் கண்ணாலும், கண்ணைச் சுருக்கியும் என்னைப் பார்த்து மகிழும் அவள் தன் பக்கத்திலே வந்த தோழியிடம் வெளிப் படையாக அயலார் போன்றுஅன்பற்ற சொற்களைப் பேசிய போதிலும், அவை தெளிவாகக் காதல் அடிப்படையில் பேசிய சொற்களே என்றல்லவோ எனக்கு நன்கு விளங்கு கிறது.

உள்ளத்தில் பகை சிறிதுமின்றிக் கூறும் (பின்னால் நன்மை விளைக்கும்) கடுஞ்சொற்களும் பகைவர்களைக் காண்பது போலக் காணும் பார்வையும், பிறர் வெளிப் பார்வைக்குப் பகையைப் போலத் தோற்றமளிக்குமாயினும், உள்ளத்தன்பு கொண்டவர்தம் குறிப்புப்பற்றி வருவனவே அன்றோ?

கொடி என இடை நுடங்கும் அவளை யான் கண்ட போழ்து என்னைப் பார்த்து அவள் அன்புடன் மெல்லச் சிரித்தாளே! அச்சிரிப்பால் உண்டான அழகே ஒரு தனிச் சிறப்புடையது அல்லவா?

ஆமாம் காதல் கண்கள், பிறர் முன்னிலையில் அயலார் போலப் பொதுப் பார்வையாகத்தான் பார்க்கும். அந்தப் பார்வை காதலர்களிடையேதான் உண்டு. எனவே இருவர் கண்களும் இணைந்து ஒன்றோடொன்று ஒன்றி நோக்கத்தால் ஒத்துப்போன பின்னர் வாய்ச் சொற்களால் எந்தப் பயனுமே இல்லை. ஆம் உள்ளந்தான் கண்கள் மூலமாகக் கலந்து விட்டனவே!

# 8. புணர்ச்சி மகிழ்தல்

அவள் குறிப்புணர்ந்த அவனும், அவன் குறிப்புணர்ந்த அவளும், கூடித் தழுவிப் பின்னர் தாம் அடைந்த—உணர்ந்த —அனுபவித்த, இன்பத்தின் மேம்பாட்டினை அவன் எங்ஙனம் உணர்கிறானோ அங்ஙனமே அவளும் உணர்கிறாள். அதுவே இது.

இவளிடம் யான் கண்ட இன்பம் முழுமையானது. பலப்பல காலங்களிலும், பல்வேறு இடங்களிலும் தனித்துக் கண்ட, காணுமின்பம், கேட்டல் இன்பம், சுவைத்த இன்பம், முகர்ந்தவின்பம் தொட்டு உணர்ந்த உடலின்பம் இவையனைத்தும் ஒருசேர (ஒன்றாக)வே இங்கு உணர்கிறேன்; அனுபவிக்கிறேன்.

அதுமட்டுமல்ல, இவள் உண்டாக்கிய காதல் நோய்க்கு இவளே மருந்தாகவும் நின்று அதைத் தீர்த்து வைத்தாள் என்பதைப் பார்க்கும்போது தம்மால் விரும்பப்படும் ஒருத்தியின் மென்மையான தோள் மீது உறங்கும் உறக்கத்தைக் காட்டிலும் தாமரைக்கண்ணான் உலகாம் வைகுந்தமும் மேம்பட்டதன்று என்றே கருதத் தோன்றுகிறது.

நெருப்பின் தன்மை அணுகுங்கால் சுடும், நீங்கினால் சுடாது. ஆனால் காதலாகிய நெருப்பினை உடைய இவளோ தன்னைவிட்டு நீங்கினால் சுடும்படியானதும் கிட்டே சென்றணைத்தால் குளிர்ந்து இன்பம் நல்கும் படியானதுமான புதுமைத்தீயை உடையவள். எங்குதான் இதை இவள் பெற்றாளோ?

அது மட்டுமா? தாம் வேண்டிய இன்பம் விரும்பியவை தேவைப்படும்போது தாமே ஒருவற்கு வந்தடைந்து இன்பம்

தந்ததைப்போல, இவளது தோள்முதலாம் உறுப்புக்கள் எனக்கு இன்பம் தந்ததோடு, அவை என்னால் தீண்டுந் தோறும் தீண்டுந்தோறும் வாடிய என் உயிரைத் தளிர்க்கச் செய்வதால் அவை நிச்சயமாக அமிர்தத்தால் ஆனவையே ஆகும்.

ஆ! ஆ! இந்த இன்பத்திற்கு ஈடாக எதைச் சொல்வது? தன் வீட்டின் கண்ணே இருந்து தம் ஊதியத்தால் கிடைத்ததைப் பிறரோடு பகிர்ந்து உண்ணும் இன்பத்துக்கு மட்டுமே இதை ஈடாக்கலாமன்றிப் பிற ஒப்பு இதற்கு இல்லை.

இந்தச் சேர்க்கை — ஒன்றிய காதலின்பம் — அன்பில் ஊறிய இருவருக்குமேஇன்பத்தைத் தருவது. பிணங்குதலும் உணர்தலும், சேர்வதுமே அல்லவா காதலின் பயன்? இக்காதலின்பமோ புதுப்புதுக் கருத்துக்களை அறியும்போது நாம், நம்மிடத்தே முன் நிலவியிருந்த அறியாமையைக் காண்பதைப் போல அல்லவா, அனுபவிக்கும் தோறும் ஒவ்வொரு முறையும் புதுப் புது இன்பத்தை விளைவிக்கின்றது?

## 9. நலம் புனைந்துரைத்தல்

சோலையினிடத்தே இன்பங்கண்ட அவன், அங்குக் காணும் ஒவ்வொன்றிலும் அவளையே காண்கிறான்.

முதலில் அனிச்ச மலரைக் கண்டதும் "அனிச்சமே! நீ மென்மையான மலர்தான்; ஆனால் என் காதலியோ, உன்னைவிட மென்மையானவள்," என்று கூறியபடியே அவன் அங்கு மலர்ந்துள்ள பிற மலர்களைக் கண்டதும் மயங்கிய தன் நெஞ்சத்தை நோக்கி "நெஞ்சமே! அவள் கண்களைப்போலவேஅழகுடன் விளங்கிப் பலரால் விரும்பப்படும் தன்மையால் நீ, இம்மலர்களைக் கண்டவுடனே

மயங்குகிறாய். அவள் தோள்களோ முங்கில்; பற்களோ முத்துக்கள்; தளிர்த்துள்ள தளிர்போன்றதன்றோ அவள் மேனி; இம்மலர்ச் சோலையில் வீசும் காற்றிலே தவழ்ந்து செல்லும்மணமே அல்லவா அவளைச் சூழ்ந்து கமழும்மணம்.

கண்கள் மை தீட்டப்பட்ட வேலல்லவோ? குவளை மலர் கள் கூடத் தாம் காணக் கூடுமானால், இவள் கண்களைக் காணில் நாணித் தலை குனியுமே! இவள் இடையோ மிகவும் மென்மையானது.

இவளோ அனிச்சமலர்களைக் காம்போடு தொடுத் துத் தன் தலையில் சூடியுள்ளாள். அந்த மலர்க் கண்ணியைச் சூடிய பாரத்தால், அந்த மென்மையான இடையல்லவோ முரிந்து விடும். அந்தோ, அதனால் நல்ல மங்கலப்பறை ஒலி ஒலிக்காமல் போகுமே.

இந்த முகத்தையும் விண்ணில் உள்ள மதியையும் கண்ட விண்மீன்கள், மதி விண்ணில்தான் உள்ளதா? மண்ணில்தான் உள்ளதா? என்று மயங்கித்தம் நிலை கலங்கி விட்டனவே. ஆயினும் மதியில் உள்ள களங்கம் இவள் முகத் தில் இல்லையே! ஆகையினால் சந்திரனே! இவள் முகத்தைப் போலக் களங்கமற்று உன்னால் ஒளிமிகுந்து விளங்க முடியுமானால் நீ என்னால் காதலிக்கப்படுவாய்.

மேலும் நீயோ பலர் காண நாணமின்றி விண்ணில் தோன்றுகிறாய். இவளோஎனக்குமட்டும் காட்சிதருகிறாள். எனவே, இவள் முகத்தை நீ ஒத்திருக்க விரும்பினால் பலர் காணத் தோன்றாதே.

நடந்து செல்லும் இவள் பாதங்களை அனிச்ச மலர் களும் அன்னத்தின் தூவியும்கூட நெருஞ்சி முள்போல வருத்தும் என்றால் இவள் மென்மைத் தன்மைதான் என்னே!

# 10. காதற் சிறப்புரைத்தல்

அவன் தனித்திருக்கும்போது அவளையும், அவள் தனித்திருக்கும்போது அவனையும் தம்முளே தாம் நினைக்கின்றனர். தாம் துய்த்த அக்காதலின்பங்களை நினைத்தும் தோழியிடம் உரைத்தும் மகிழ்கின்றனர் இருவரும்.

அந்த நாள் இந்த மெல்லிய மொழியாளின் இதழைச் சுவைத்தபோது அவள் தூய பற்களிடையே ஊறிய அந்த நீரின் சுவையோ பாலொடு தேன் கலந்ததைப் போலல்லவா இருந்தது என்று தன்னுள் நினைத்த அவன் அவளிடமிருந்து தன்னிடம் வந்த தோழியிடம், ''எங்கள் உறவு உடலோடு உயிர் ஒன்றிக் கலந்து இருப்பதைப்போல உள்ளதேயல்லாமல் யான் வேறு அவள் வேறு அல்லவே,'' என்கிறான்.

பின்னர் தன் கண்ணின் கருமணியை நோக்கி, ''கண்ணின் கருமணியின் பாவாய்! நீ போய்விடு; நான் விரும்புகிற என் காதலியாகிய அழகிய நெற்றியை உடையவள் என் கண்ணுள்ளே தங்க இடம் தேவைப்படுகிறது,'' என்று தனக்குத் தானே சொல்லிக் கொள்கிறான்.

பின்னும் தோழியை நோக்கிச்சொல்கிறான்: ''நாங்கள் ஒன்று கூடி இருக்கும்போது, அவள் என் வாழ்வைப்போல அமைந்து, பிரிந்தபோதோ என் உயிர்க்குச் சாதலைப் போன்றவள் ஆகிறாள்.

இப்படிப் பட்டவளையா நான் மறக்க முடியும்? மறத்தலை நான் அறிகிலேன். மறந்தால்அல்லவோ நான் நினைப்பதற்கு? அவள் நினைவு தவிர எனக்கு வேறே நினைவு உண்டோ,'' என்கிறான்.

இந்த நேரத்தில் அவள் நிலை என்ன? அவளே தோழியிடம் சொல்வதைக் கேட்கலாம்.

அவர் என் கண்களிலிருந்து நீங்கமாட்டார். கண் இமைத்தாலும் அதனால் வருந்துவார். அவ்வளவு மென்மையானவர் என் காதலர்.

அவர் என் கண்களுக்குள்ளே நீங்காது வசிக்கின்ற காரணத்தாலேயே என் கண்களுக்கு நான், மை தீட்டவும் மாட்டேன். ஏனெனில் என் மை தீட்டும் அஞ்சனக் கோல் அவரைக் குத்தி வருத்துமே!

அதுமட்டுமா. என் காதலர் என் நெஞ்சத்துக்குள்ளேயே வசித்து வருகிறார் அல்லவா? அதனால் சூடான எதையும் நான் உண்பதே இல்லை. ஏன் என்பதை நீ அறிவாயா? மாட்டாய். சூடானவைநெஞ்சின்வழியாக உள்ளே செல்லும் போது அங்கே உள்ள அவரைச் சூடு தீய்த்து வருத்துமல்லவா? அதனால்தான்.

நானோ தூங்குவதில்லை. கண்களை மூடினால் காதலர் மறைந்து விடுவாரோ என்னும் அச்சமே காரணம். காதலர் என் நெஞ்சினுள்ளே வசிக்கிறார். ஆனால் இந்த ஊரோ, அவரை அன்பில்லாதவர் என்று தூற்றுகிறது. உண்மை அறியாதது இந்த உலகம்.

## 11. நாணுத் துறவுரைத்தல்

நீண்ட நாட்களாக ஒருவரை ஒருவர் காணவோ, மறுபடியும் கூடவோ இயலவில்லை. அவன் உடலும் உள்ளமும் துயருற்று வருந்தின. இனி வேறு வழி இல்லை. பனை மடலால் குதிரை உருவம் செய்து அவள் உருவத்தைக் கிழியில் தீட்டி, மடலேற வேண்டியதுதான்; என்று உறுதி கொள்கிறான். அவன் வெட்கக்கேடுதான் காரணம். காதலியின் பிரிவால் உண்டாகிய துன்பத்தைத் தாங்கவில்லை உடலும் உள்ளமும். எனவேதான் நீங்காத அணியாகிய நாணத்தினையும் நீக்கிவிட்டு மடலேறத் துணிந்தான்.

தனக்குள்ளே சிந்திக்கிறான். முற்காலத்திலே நல்ல ஆண்மையும் நாணமும் நான் பெற்றிருந்தேன். இன்றோ நான் பெற்றிருப்பது இந்த மடல் மட்டுந்தான். ஏனிந்த நிலை எனக்கு? நாணமும் ஆண்மையும் என் வாழ்க்கை நதியில் தெப்பமாகி நிற்க திடீரென்று அதில் மேல்வெள்ள மாகி வந்த காமம், அத்தெப்பத்தை அடித்துக் கொண்டு போய் விட்டது. பிறகு வேறுவழி—மடல்தான். இந்த மடலேறும் துயரத்தையும், இந்த நேரத்தில் தனித்து அனுபவிக்கும் இந்தத் துயரத்தையும் அந்தச் சிறிய வளையலை அணிந்த அவள் எனக்குத் தந்தாள். ஆம், அவளை நினைத்து இரவு முழுவதும் தூங்குவதில்லை. அதே நேரத்தில் மடலூர்தலைப் பற்றியும் நினைத்துக் கொண்டு நான் இருக்கிறேன்.

கடல் போன்ற காமத்திலே துன்புற்ற போதிலும் பெண்கள் ஆண்களைப் போல் மடலேறுவதில்லை. அப்படிப் பட்ட அப்பெண் பிறவியே பெருமை மிக்கது என்று அவன் நினைக்கும் அதே நேரத்தில் அவளும் நினைக்கிறாள்.

அவள் கோபம் காதல் மீதே செல்கிறது. இந்தக் காதலுக்குத்தான் என்ன கெடுமதி, "இவள் உள்ளத்தைக் கட்டுப்படுத்தும் திறன் அற்றவள். மிகவும் இரங்கத் தக்கவள்" என்று வாளா கிடக்காமல், மறைந்திருத்தலை யும் கடந்து, பொது மன்றத்திலும் இது என்னைக் காட்டிக் கொடுக்க வெளிப்படுகின்றதே! அது மட்டுமா? அமைதியாய் இருந்தால் ஒருவரும் அறியவில்லை என்று நினைத்து அது வீதிதோறும் பரவி மயங்கியன்றோ சுழல்கின்றது. அதோடு இந்த ஊரில் உள்ளவர்களோ மகா மோசம். என் காதல் துன்பத்தை அவர்கள் அறியவில்லை. அதனாலேயே அவர்கள் என்னைக் கண்டு, நான் பார்க்கும்படியே சிரிக்கின் றார்கள். காதல் துன்பத்தைப் பற்றி அவர்களுக்கு என்ன தெரியும்? இவர்கள் நிச்சயமாக அறிவற்றவர்களே எனச் சிந்தித்து ஆறுதல் அடைகிறாள்.

## 12. அலரறிவுறுத்தல்

அவனும் அவளும் சந்தித்ததையும் பழகியதையும் அவ்வூர் அறிந்தது. ஊரில் உள்ளவர்கள் அவர்கள் களவொழுக்கத்தைப் பற்றித் தூற்றினார்கள். இதையே அலர் என்று சொல்கிறது இலக்கியம்.

அவள் தோழி ஒரு நாள் அவனிடம் வந்து, "உங்களை ஊர் முழுவதும் தூற்றுகின்றதே! உங்கள் ஒழுக்கத்தைக் காத்துக் கொள்ள நீர் அவளை மணந்து கொள்வதுதானே முறை" என்றாள். அவனோ "இந்நாள் வரையிலும் நான் அவளைக் காணாமல் இருந்ததால் என் உயிரே போய் விட்டிருக்கும். ஆனால் இந்த ஊரார் பழி தூற்றுவதால் தான் இந்த உயிர் போகாமலிருக்கிறது. இதைப் பிறர் அறிய மாட்டார். அம்மட்டோ? மலர் போன்ற அழகிய கண்ணா ளாகிய அவளை அடைவது எவ்வளவு அருமையானது என்பதை அறியாத இந்த ஊர், அவளை மிக எளியவளாக் நினைத்து என்னோடு இணைத்துத் தூற்றுகிறதே! இத்தகைய அலர் எனக்கு உபகாரத்தையன்றோ செய்கிறது. அவளைப் பிரிந்து இது நாள்காறும் நான் தனித்திருந்தும் இந்த அலர் என்னையும் அவளையும் இணைக்கும் இணைப்புச் சக்தியாக அல்லவா இயங்குகிறது.

"ஆகவே, இந்த ஊர் தூற்றுவதால்தான் எங்களது காதல் மலரைப் போல மலர்ந்து மணம் வீசுகிறது. இல்லை யேல் எங்கள் காதல் வாடிப் போகும். இன்னும் கேள் தோழீ! களிப்புமிகக் கள்ளுண்ணல்எங்ஙனம்இனிதாகிறதோ, அங்ஙனமே காதற் சுவையும் வெளிப்பட வெளிப்படவே மிக மிக இனிக்கும்" என்று கூறினான் அவன்.

சூழ்நிலைகளாலும் தடைகளாலும் பல நாள் சந்திக்கா திருந்த அவளைக் காண வந்த அவன், தன் மனைப்புறத்தே நிற்பதறிந்து அவள் தன் தோழியை நோக்கி, "தோழி!

நாம் அவரைக் கண்டதோ ஒரு நாள்தான். ஆனால் திங்களைக் கிரகணம் பிடிப்பதைப் போல இந்த ஊர் இப்படியா எங்களைப் பற்றிப் பழி தூற்றும்?'' எனத் தோழி அவளை நோக்கி, ''இந்த ஊர் தூற்றும் பழியே எருவாகவும், அன்னை சொல்கின்ற கடும் சொற்களே பாய்ச்சுகின்ற நீராகவும் அமைய இப்பயிராகிய காதல் நோய் வளர்கிறது. உங்கள் காதலை இவர்கள் தூற்றுவதால் அவித்து விடலாம் என நினைப்பது, நெருப்பை நெய்யைக் கொண்டு அவித்து விடுவது போலவே ஆகும்'' என்றாள். அவள், ''அவரே என்னிடம் நான் பிரியேன், அஞ்சாதே! என்று அன்று சொல்லிப் பிறர் கேலி பேசும்படி பிரிந்து விட்டாரே! எனவே பிறர் தூற்றும் அலருக்கு நாம் நாணத் தகுமா?'' எனத் தோழி, ''நாமே விரும்பும் அவரை இவ்வூர் தூற்றுவதால் இனி நம் காதலர் நாம் வேண்டியதை வேண்டியவாறு இனிதே கொடுப்பாரல்லவா? எனவே இதுவும் நன்றே'' என்று கூறினாள்.

## 13. பிரிவாற்றாமை

அவனும் அவளும் காதல் கொண்டனர். ஊரார் தூற்றலிலேகூட ஒரு நன்மை ஏற்பட்டது. அவர்கள் திருமணத்தால் ஒன்றுபட்டனர். சில நாள் கழித்து அவனோ பொருள் தேடும் நிமித்தமாக வேற்றூர் போக வேண்டிய தாயிற்று. மெல்ல மெல்ல அவளிடம்தான் செல்ல வேண்டிய இன்றியமையாமையைச் சொன்னான். அவளோ அவனிடம், ''எனக்குத் தெரியாது. பிரிந்து போகாதிருப்பின் என்னிடம் சொல்லுங்கள். இல்லை, போய்த்தான் ஆக வேண்டும் எனில் நீர் திரும்பி வரும்போது நான் உயிருடன் இரேன். உயிர் வாழ்ந்திருக்கும் யாரிடமாவது சொல்லி விட்டுப் போகலாம்'' என்றாள். பின்னர், அவள் தன் தோழியை நோக்கி, ''அக்காலத்திலே அவர் முதல் முதலில் பார்த்த பார்வையே இனிமையாக இருக்கவும், இப்போது அவருடன் நான் கூடும்

கூட்டங்கூடப் பிரிவை உணர்த்துவதால், கொடிதாகவே உள்ளது. ஏனெனில் அக்காலத்தில் ஆதரவோடு அஞ்சாதே என்றவரே, இப்போது பிரிவதால் அவர் கூறிய தெளிந்த சொல்லை நம்பிய நம்மிடம் தவறேது. எனவே, தோழீ! நீ என் உயிரைப் போகாமல் காக்க வேண்டுமானால் இவரைப் போகாமல் நிறுத்து. மாறாக இவர் பிரிந்து சென்றாலோ பின்னர் அவரைக் கூடுவதேது? என் உயிர் தான் போய் விடுமே.

இதையும் கேள், நீ, தோழீ! அவரே தன்னுடைய பிரிவை உணர்த்தும் கல் நெஞ்சக் கொடுமை உடையவ ரானால், அப்படிப்பட்டவர் தாமே பின்னர் திரும்பி வந்து நமக்கு அருள் செய்வாரா என்ன? அவர் பிரிந்து போகும் செய்தியைக் குறிப்பால் அறிந்த காலத்திலேயே, என் கை வளைகள் தாமே நெகிழ்ந்து எனக்கு அறிவித்து விட்டனவே. அவை தாம் ஊரெல்லாம் தூற்றி அதைச் சொல்லாமல் இருக்குமா? என்ன?

இதோ! இதையும் கேள்! நம்மினமில்லாதார் ஊரில் வாழ்தல் கொடியதே. ஆனால் அதனினும் கொடியது நம் உள்ளத்துக்கு இனியவரைப் பிரிந்து வாழ்தலே அல்லவா? மற்றும் இந்நோயோ தொட்டாற் சுடும் நெருப்பைப் போல் அல்லாமல் விட்டால் மட்டுமே சுடும்படியான தீ அல்லவா? இங்கே பலர் உளர். அவர்கள் காதலர் பிரிந்தால் பொறுத்துக் கொண்டு பிரிவையும் ஆற்றி உயிர் வாழ்வார்கள். என்னால் அது முடியாது. இதையும் நீ உணர். அவர்க்கும் சொல்'' என்றாள்.

# 14. படர் மெலிந்திரங்கல்

அவன் அவளைப் பிரிந்து பொருள் தேடச் சென்றான். அவனைப் பிரிந்து வருத்தத்தால் அவள், அவனையே எப்போதும் நினைத்து மெலிந்து விட்டாள். முகமும் கண்களும் அவனையே நினைத்து அவள் இரங்கும் அவலத்தை உணர்த்தின. அவள் தோழியோ அவளை நோக்கி, "நாணத்தை உயிராக ஓம்பும் நினக்கு இது தகாது" என்று கூற, அவள், 'இதை நான் மறைக்க முயல லாம். ஆனாலும் இறைப்பவர்க்கு ஊற்று நீர் சுரப்பதைப் போலல்லவா மறைக்க மறைக்க இக்காதல் நோய் மேலோங்கி வெளிப்படுகிறது. அது மட்டுமா? இந்நோயை நான் மறைக்கவும் இயலாது. நோய் செய்தாரிடம் உரைக்கவோ, அது நாணத்தை எனக்கு உண்டாக்கும்.

இவ்வகையில் இந்த வேதனை மிக்க உடலையே ஒரு காவடியாக்கி அதில் ஒருபுறம் காதலும், ஒருபுறம் நாணமும் தொங்கி ஊசலாடி என்னை வருத்துகின்றனவே. அந்தோ! காதலாகிய கடல் மட்டுமே அல்லவா இங்கு இருக்கிறது. அதைக் கடக்கத்தக்க காதலனாகிய தெப்பம்இங்கில்லையே.

இன்பமிக்க நட்பினுள்ளேயும் துயரத்தை உண்டாக்கு பவர்கள் துன்பமிக்க பகைமையில் என்னதான் செய்ய மாட்டார்கள்? தோழீ! காதல் என்பது இன்பத்தைக் காணுங்கால் கடல் போன்றதாய் இன்பம் நல்கி அதுவே பிரிவுத் துன்பத்தைச் செய்யுங்கால் அக்கடலினும் மிக மிகப் பெரியதாய் மாறிஎன்னை வருத்துகின்றதே.

இப்படிப்பட்ட காமமாகிய பெரிய கடலை நீந்தி நீந்திக் கரையைக் காண என்னால் இயலவில்லை. நடு இரவுக் காலத்திலும் யாவரும் துயில, ஊர் அமைதியில் ஆழ, யான் ஒருத்தியே தனித்து உள்ளேன். இந்த இரவுதான், மிகக் கருணையோடு உலகத்து உயிர்களை எல்லாம் துயிலில் ஆழப்

பண்ணும். அப்படிப்பட்ட இரவுக்கும் இரவெல்லாம் விழித்திருக்கும் யான் ஒருத்தி மட்டுமே துணையாக உள்ளேன். இங்ஙனமாக இந்த இரவோ இரங்கத் தக்கதே!

இந்த இரவோ, அவர் என்னை நீங்கிப் பிரிந்த கொடுமையினும் கொடுமை வாய்ந்தது. அவரோடு நான் இருந்த காலத்தில் மிகக் குறுகியும், அவர் என்னைப் பிரிந்து சென்றுவிட்ட இக்காலத்தில் மிக மிக நீண்டும் கழியும், இந்த இரவுக் காலம் மிக மிகக் கொடியதே!

தோழீ! என் உள்ளத்தைப் போலவே என் கண்களும் அவர் உள்ள இடத்துக்குச் செல்ல வல்லமை பெற்று இருக்குமானால் எனது கண்கள் கண்ணீர் வெள்ளத்தில் இங்ஙனம் நீந்த வேண்டியதில்லையல்லவா''' என்று கூறிக் கண்ணீர் வடித்தாள் அவள்.

## 15. கண்விதுப்பழிதல்

''கண்களிலிருந்து நீர் பெருக்கெடுத்தோட அழுதழுது உன் கண்கள் அழகிழந்து விட்டனவே, நீ-ஆற்றிக் கொள்'' என்றாள் தோழி.

அவள் தோழியை நோக்கி, ''இந்தக் கண்களே தீராத காதல் நோயை எனக்குத் தாமே காட்ட நான் அவரைக் கண்டதால் விளைந்தது. அப்படியிருக்க காட்டிய கண்களே இப்போது ஏன் வருந்த வேண்டும். அக்காலத்தில் இக்கண்கள் ஆராயாமல் அவரை நோக்கிக் காதல் கொண்டபின், இன்று அன்பு கொண்டு உணராமல் ஏன் வருந்துகின்றன? அன்று இவை அவரைத் தாமே விரைந்து பார்த்தன. இன்றோ தாமே அழுகின்றன.

சீ! என்ன கேலிக்கூத்து இது. இவை என்னிடம் தீராத இந்தக் காதல் நோயை உண்டாக்கிவிட்டுத் தாமும்

அழுதழுது கண்ணீரை விடாது சொரிந்து, இனிமேலும் அழ மாட்டாமல் நீர் வற்றிவரண்டு விட்டதோடு, கடலின் மிக்க தாயகாதல் நோயைஉண்டாக்கிய இவை, இன்று உறங்கவும் முடியாமல் துன்பத்தால் வருந்துகின்றன.

ஆமாம்; இது நல்லதே. எனக்குத் துன்பத்தைத் தரும் ஆற்றொணாக் காதல் நோயை உண்டாக்கிய இக்கண்கள் தாமும் துன்பப்பட்டு வருந்த வேண்டியனவே. முன்னர் மிக விரும்பி உள்ளம் நெகிழ்ந்து அவரைக் கண்ட கண்கள் உறக்கமில்லாமல் துன்பப்பட்டு வருந்தி வருந்திக் கண்ணீரும் அற்றுப் போக வேண்டியதே.

தோழி! இதையும் கேள். உள்ளத்தால் காதலிக்காமல் உதட்டளவில் அன்பாகப் பேசும் அவர் எங்கே இருக்கிறார். அவரைக் காணாமல் இந்தக் கண்களுக்கு அமைதியே யில்லை. அம்மட்டோ, அவர் வாராக் காலத்தில் அவர் நினைவால் தூங்குவதே இல்லை. வந்து விட்டாலோ, அவரைக் கண்ட களிப்பினால் தூங்குவதே இல்லை. என்னே! இக் கண்களினது துன்பம்.

மற்றும் இக்கண்களோ எந்த ஒரு இரகசியத்தையும் மறைத்து வைக்கும் தன்மையற்றவை. அறையப்படும் பறையினைப் போல ஊருக்கெல்லாம் தூற்றிவிடுபவை. எனவே, இக்கண்களை உடைய என் போன்றாரிடமிருந்து இரகசியத்தை இவ்வூரார்அறிவது அரிதா? என்ன! என்றாள்.

## 16. பசப்புறு பருவரல்

அவள் தனக்குத் தானே எண்ணுகிறாள். "அக்காலத் தில் அவர் என்னைப் பிரிந்து செல்ல உடன்பட்டேன். இக்கால் அப்பிரிவால் உண்டாகிய இப்பசலையே (உடல் நிற வேறுபாட்டை) யாரிடம் சென்று சொல்வேன்.

இப்பசலையே அவரே தந்ததுதான் என்னும் பீடுடன் என் உடல் மீதெல்லாம் ஊர்ந்து செல்கிறது. அவரோ என் மேனி அழகையும் என் நாணத்தையும் கவர்ந்துகொண்டார். அதற்குப் பதிலாக இந்தப் பிரிவாகிய நோயையும் பசலையும் எனக்குத் தந்து விட்டார். நானோ காலமெல்லாம் நினைப்பது, அவரையே. மற்றும் இடையறாமல் சொல்வது அவர் நல்லியல்புகளையே. ஆனால் அப்படியிருந்தும் இந்தப் பசலை கள்வனைப் போல என் மேனி மீதெல்லாம் படர்ந்து விட்டதே!

இப்படி எண்ணிக் கொண்டிருக்கும்போது, அவள் தோழி அங்கே வர, அவளைப் பார்த்து, ''இதோ பார் தோழீ! அவர் என்னைப் பிரிந்து சென்ற அந்த விநாடியே என் மேனியில் பசலை ஊர்ந்து விட்டது. விளக்கு எப்போது அணையும் என்று காத்திருந்து சூழ்ந்து கவிந்து கொள்ளும் இருளைப்போல் அல்லவா உள்ளது இது?

இதுமட்டுமா! அன்றொரு நாள் நான் அவரைத் தழுவிக் கிடந்தேன். சிறிது நேரமே புரண்டு படுத்தேன். அதற்குள் மேனி பசலைப் பூத்துவிட்டதே. எனவே இப்படிப் பட்ட நிலையான பிரிவுக்குப் பசலை பூக்காமலிருக்குமா? இது ஒரு வியப்பா என்ன? ஊராரோ இவள் பசலை பூத்துக் கிடக்கிறாள் என்பதல்லாமல் அவர் பிரிந்தார் என் கிறார்களில்லையே.

போகட்டும், இதனால் அவர் நல்லபடியாக இருப்பார் என்றால், இப்பசலைதான் என்ன, பூத்துத்தான் போகட்டுமே. அவரோ பிரிவுக்கு என்னை உடன்படச் செய்து என்னைப் பிரிந்து சென்று அங்கு வருந்துவார். அப்படிப்பட்ட அவரைப் பிறர் தூற்றாமல் இருப்பார்களே யானால், யான் பசப்புற்றேன் என்று பேர் எடுத்தாலும் நல்லதுதானே.

# 17. தனிப்படர் மிகுதி

இவையனைத்தையும் கேட்ட தோழி, அவளை நோக்கி, "நீ, வருந்தாதே; நின் காதலர் கடிதின் வருவார். நீ, மகிழ்வாய்" எனத் தலைவி அவளைப் பார்த்துச் சொல்ல லுற்றாள். 'நாம் காதலிக்கும் அவர், நம்மைக் காதலிக்க வேண்டும். அங்ஙனம் தம்பால் செலுத்தப்பட்ட அன்பைத் திரும்பிப் பெறும் பேறு பெற்றார்களே. காதலென்னும் விதையில்லாத பழத்தைச் சுவைக்கும் பேறு பெற்றவர்கள்.

மற்றும் தம்மை விரும்புகின்றவர்க்குக் காதலர் அளிக்கும் அந்தக் காதல் அன்போ தன்னையே நம்பி வாழும் உலகில் உயிர்களுக்குக் காலா காலத்தில் பெய்து அருள் சுரக்கும் மழைக்கு ஒப்பானது ஆகும். தோழீ! நான் மகிழ்ந்து வாழ்வேன் என்று கூறினாய் அல்லவா? அப்பெருமிதம் யான் விரும்பப்படுபவளாய் அன்றோ இருத்தல் வேண்டும்? அங்கே பிரிவுத் துன்பம்தான் ஏது?

நீ கூறுகிறாய். "ஊரார் உன்னை மிகவும் பாராட்டு கின்றனர்" என்பதாக; ஆனால் காதலரால் விரும்பப் படாத ஒருத்தி, பிறரால் மதிக்கப்படுதலினால் என்ன பயன்? அத்தகையவர் தீவினையாட்டியரே.

அது மட்டுமன்று நாம் அவர்பால் காதல் கொள்ள அவர் நம்மைக் காதலிக்காவிட்டால் நமக்கு அவர் செய்யும் நன்மைதான் என்ன? அதோ பார் தோழீ! ஒருவன் காவடி எடுத்துச் செல்கிறான். காவடியின் இருபுறத்துப் பாரமும் ஒன்று போல் இருந்தால்தான் அதைச் சுமத்தல் எளிது. அதைப் போலவே காதலின் பாரமும் இருபுறமும் ஒத்தால் அல்லவா இனிக்கும்?

மற்றும் இக்காம தேவன்தான் இருவரிடத்தும் ஒத்து இருக்க வேண்டியவன் அல்லனோ? அந்தோ என்னைமட்டு மல்லவா வருத்துகிறான் அவன்? அவன் என் துன்பம்,

வருத்தம் இவைகளை அறியாளா? இந்த உலகத்திலே காதலரின் இன்சொல் பெறாமல் பிரிவுத் துன்பத்தைப் பொறுத்து வாழ்கின்றவர்களைப் போன்ற கொடியவர் (பாவி கள்) யார்? நம் காதலர் நம்மிடத்து மீண்டு வந்து அன்பு செய்ய மாட்டார். ஆயினும் அவர் புகழைக் கேட்பதும் மிக இனிமையாக வல்லவர் உள்ளது? என்று கூறினாள்.

பின்னர் அவள் தன் நெஞ்சை நோக்கி, "நெஞ்சமே நீ வாழ்க! அன்பற்ற அவரிடம் உன் துன்பத்தை எல்லாம் சொல்லி நினைத்துப் புலம்புகின்றாய்! பேதை நெஞ்சே! உன் துயரம் இதனாலா ஒழிந்துவிடப் போகின்றது. இதை விடக் கடலைத் தூர்த்து விடல் மிக எளிதாகுமே" என்று தன்னுள்ளே கூறிக் கொண்டாள்.

## 18. நினைத்தவர் புலம்பல்

இங்கே இவள் நிலை இப்படியாக அங்கே அவன் நிலை என்ன? இவளையே நினைத்துக் கொண்டிருக்கும் அவன், அவளிடம் தூது அனுப்ப ஒரு தோழனைத் தூண்டுகிறான். அவன் தன் தோழனை நோக்கி, "தோழ! காதலின்பம் நினைத்தாலும் நீங்காத ஒரு மகிழ்ச்சியைத் தருகின்றது. எனவே கள் உண்ணுதலைக் காட்டிலும் காதல் மிக இன்பமுடையதே.

அதோடு நம்மால் விரும்பப் படுகின்றவரைப் பிரிவின் கண் நினைத்தாலே பிரிவால் வரக்கூடிய துன்பம் இல்லையல்லவா? எனவே காதல் எவ்வளவினதாயினும் சேர்ந்துள்ள காலத்தும் பிரிந்துள்ள காலத்தும் நன்றே; இன்பம் பயப்பதே நீ, சென்று வா" என்கிறான் அவன்.

இங்கேயோ, அவள் அவனை நினைத்துக் கொண்டு இருக்கிறாள். அந்நேரத்தில் அவளுக்குத் தும்மல் வருவது போல் இருந்து அடங்கி விடுகிறது. அடடா அவர் என்னை

நினைப்பவர் போல் இருந்து நினைக்காமல் இருந்து விட்டாரா? அதனால்தான் வரும் தும்மல்கூட அடங்கி விட்டதா? என் நெஞ்சில் அவர் நீங்காமல் இருக்க, அவர் நெஞ்சில் நான் இருக்கிறேனா? அல்லது யான் அவர் நெஞ்சிலே சென்று அடையாமல் மிக்க விழிப்போடு காவல் காக்கும் அவர், அதற்கு மாறாக என் நெஞ்சிலே ஓயாமல் தாமே வந்து இருப்பதற்கு வெட்கப்பட மாட்டாரா? என்று தன் தோழியிடம் சொல்லியபின் மேலும் சொல்லுகிறாள்.

தோழீ! அவரோடு நான் கலந்திருந்த நாட்களின் இன்பத்தை நினைத்தல்லவா இத்துன்ப வெள்ளத்தும் உயி ரோடு உள்ளேன். அது இல்லையேல் எதால் வாழ்வேன். ஆகவே அவ்வின்பத்தை யான் மறக்கவே முடியவில்லையே! அவரை மறந்தறியாமல் நினைக்கும்போதே உள்ளம் காமத் தால் தீய்ந்து விடுகிறதே? மறந்தே விட்டால் என்னா வேனோ?

அவரை நான் எவ்வளவுதான் மிகுதியாக நீடு நினைத் தாலும், என் காதலர் என்மேல் சினம் கொள்ளார். அது தான் அவர் எனக்குச் செய்யும் இன்பமாகும். மற்றும் அவரோ, அன்று என்னை நோக்கி, "நாம் இருவரும் வேறு அல்லம்" என்று கூறினார். இன்று அருளின்றிப் பிரிந்தார். அதை நினைத்தால்தான் என் உயிர் அழிகின்றது.

இவ்வாறு கூறிய அவள் வானத்தில் ஒளிர்ந்து சுடர் விடும் திங்களை நோக்கி, "என் நெஞ்சினின்றும் பிரியாம லிருந்தும் என்னைப் பிரிந்து சென்ற அவரை, என் கண்ணால் தேடிக் காணும்படி, நீ மறையாமல் இருப்பாயாக" என்கிறாள்.

# 19. களவு நிலை உரைத்தல்

அவன் நினைப்பால் உயிர் வாழ்வதாகக் கருதி நினை வைப் போற்றிப் பாதுகாக்கும் அவள், தான் வருந்துகின்ற தறிந்து அது தீரத் தன் உறக்கத்திலே அவன் வந்த கனவின் தூதுக்கு என்ன விதமான விருந்து வைப்பேன் என்று குழந்தை உள்ளத்தோடு வரவேற்றுப் போற்றுகிறாள்.

எப்படியோ ஒருநாள் தூக்கத்திலே கண்ட கனவில் அவர் வந்து விட்டார். பிறகு தூக்கமே வரவில்லை. எனவே கனவேது? யான் கெஞ்சி இரப்பின் ஒருவேளை தூக்கம் வரும். அந்தத் தூக்கத்தில் கனவு காணுவேன். கனவில் அவர் வருவார். வந்தால் அவரிடம் யான் அவர் தந்த நோய்க்குத் தப்பி உயிர் வாழும் தன்மையை உரைப்பேன். ஏனெனில் நனவிலே வந்து அருள் செய்யாமல் பிரிந்து சென்ற காதலரைக் கனவிலாவது நான் காண்பதிலேதான் இன்னும் உயிரோடு இருக்கிறேன்.

தோழி! இந்தக் கனவுதான் நனவின்கண் வந்து அன்பு காட்டாத அவரைக் கனவிலாவது கொண்டு வந்து காட்டுவதனால், இக்கனவின் மீதல்லவா என் ஆசை மிகுகின்றது.

மற்றும் கேள் தோழி! அந்த நாள் நான் அவரை நனவிலே கண்டு, அதுபோது அனுபவித்த இன்பமும் இன்பமே. இந்த நாள் கனவிலே நான் கண்டு அனுபவித்த இன்பமும் இன்பமுமே. சற்றேறக்குறைய இரண்டும் ஒன்றுதான்.

இந்த நனவு என்னும் ஒரு பாவி இல்லையானால் கனவிலே என்னை வந்து கலந்த காதலர் நிச்சயமாக என்னைவிட்டு நீங்கவே மாட்டார் அல்லவா?

மற்றொரு நாள் தூக்கத்திலே அவரை அவள் கனவில் கண்டாள். விழித்தாள். மறைந்தார் காதலர். ஆற்றவில்லை அவட்கு. நனவிலே வந்து ஒரு நாளாவது அருள் செய்யாத அவர், கனவிலே வந்து நாடோறும் அலைக்கழிப்பது ஏன்? தூங்கும்போது என் மார்பின் மேல் கிடக்கும் அவர் விழித்த வுடன் என் நெஞ்சினுள் அல்லவா விரைந்து புகுந்து கொள்கிறார்? என்று வருந்திய அவள் தோழியை நோக்கி, "இவ்வூரில் உள்ளவர்கள் தமக்கு ஒரு காதலர் இல்லாதவர் கள். அக்காதலரை அவர்கள் தம் கனவிலே காணாதவர்கள். எனவே அவர்கள் அறியார் "எம் காதலர் நேரிலே வந்து அருள் செய்யாததால் அன்பிலார்" என்றும், "பிரிந்து சென்றவர்" என்றும் கூறுவர். அவர்கள்; அவர் என் கனவில் நீங்காது வந்து இன்பம் நல்குதலை அறியாதவர் அல்லவா?" என்கிறாள்.

## 20. பொழுது கண்டிரங்கல்

பகற்பொழுது சென்றது. மாலைக் காலம் வந்தது. தனித்துள்ள அவளோ அம்மாலைப் பொழுதைக் கண்டு வருந்துகிறாள். மாலைப் பொழுதே! நீ, முற்காலத்தே வந்த மாலைப் பொழுதா? இல்லை, இல்லை, மணந்த மகளிரின் பிரிவுக் காலத்தில் அவர் உயிர் உண்ணுகின்ற எமனாக இருக்கிறாய் நீ.

ஐயோ, பாவம். மயங்கிய மாலைப் பொழுதே நான் தெரியாமல் சொல்லிவிட்டேன். நின் துணையும் எம் காதலரைப் போல் மிகக் கொடியவரோ என்னவோ? அதனால்தான் நீ ஒளி இழந்து கலங்கி நிற்கிறாய்.

இங்ஙனம் அவள் நினைக்கும்போது அங்குத் தோழி வருகிறாள். வந்தவள் அவளை நோக்கி, "நீ சற்று ஆறுத லாய் இருத்தல் வேண்டும்", என்று ஆறுதல் கூறுகிறாள். அவளிடம் இவள் தோழீ! இந்த மாலையோ பனி தோன்றிப்

பசந்த நிறம் கொண்ட மாலைப் பொழுது. எ
வருத்தம் தந்து துன்பம் மேன்மேல் வளரும்படி வருகின்
அவர் துணையாகிப் பக்கத்தில் இருந்த போ
இது என்னிடம் நடுங்கி மயங்கி வந்தது. இன்றோ து
மேலும் மேலும் வளரவும் யான் அழியவுமன்றே
கொலைக்களத்திலே கொலைஞர் வாளேந்தி வெ
வருவதைப் போல, காதலரில்லாக் காலத்தில் பகைவ
போல என்னை நோக்கி வருகிறது.

அது மட்டுமா அவர் கலந்திருந்த அந்தக் காலத்
இனிமை தந்த இந்த மாலைக் காலம், இப்போது என்
அது வருந்தும்படி யான் அதற்குச்செய்த தீங்குதான் என்
அல்லது காலைப்பொழுதுக்கு நான் ஏதாவது நன்மைத
செய்து விட்டேனா? அவர் கூடிய காலத்தில் பிரிவார் எ
கவலைப்பட்ட அது இப்போது இரவிலே யான் படும் துன்
தின் விடிவாக அல்லவோ, உள்ளது.

முன்னெல்லாம் எனக்கு நட்பாய் இன்பம் செய
வந்த இந்த மாலைக் காலம், இவ்வளவு துன்பம் த
என்னும் உண்மையை யான் அவர் பிரிதற்கு முன்
அறியவில்லையே. இந்தக் காதல் நோயோ காலையில் அ
பெடுத்து, பகலெல்லாம் பெரிய முகையாகி, மாலை
காலத்திலேதான் மலர்கின்றது.

இதையும் கேள் நீ தோழி! அக்காலத்திலே மாலைப்
இன்பம் செய்வதாய் வந்த ஆயன் ஊதிய தீங்குழல் ஓசை
இக்காலத்தில் நெருப்பினைப்போல வருத்தும் மாலை
போதுக்குத் தூதாகி என்னைக் கொல்லும் படையாகவு
மாறிவிட்டதே!

இம்மாலைக் காலத்தைக் கண்டதும் என் மதி மருவ
கின்றது. இந்த மதி மயங்கும்படியான மாலைக் காலம்
வந்து படரும் போது இந்த ஊரும் மயங்கி என்னைப் போல
துன்பத்தால் அன்றோ வருந்தும்.

இதுவரை பொருள் காரணமாகப் பிரிந்தவரின் பிரிவுத் துன்பத்தால் மாயாத என் உயிர், இம்மாலை பொழுதில் அவரை நினைந்து மாய்ந்தேவிடும்.

## 21. உறுப்பு நலன் அழிதல்

அவன் பிரிந்து சென்றான். அப்பிரிவை ஆற்றமட்டாத அவள் தன் அழகிழந்தாள். தன்னுடைய கண்கள் தோள்கள், நுதல் முதலிய எல்லா உறுப்புகளும் தம் தம் அழகில் குறைவுபட நின்றாள். இது கண்ட அவள் தோழி அவளை நோக்கி, ''இத்தகைய துன்பத்தை நமக்குத் தந்து அயல் நாடு சென்றவரை நினைத்து நினைத்து அழுதமையால உன் கண்கள் ஒளி இழந்து வாடி முன் தமக்கு நாணிய குவளை மலர்க்கு நாணி விட்டன.

அது மட்டுமா அவை பசலைபூத்து நீர் சொரிவதனாலே, நம்பால் அவரது அன்பற்ற தன்மையைப் பிறர்க்கும் பறை அறிவிப்பனவாயின. இந்தத் தோள்கள் அவருடன் நீ கலந்திருந்த காலத்தில் நன்கு பூரித்திருந்தனவே. இன்று அந்தோ வாடிப் பொலிவிழந்தனவே.

இவைகள் அவரது பிரிவையன்றோ விளங்க உணர்த்து கின்றன. அந்தப் பழைய அழகு கெட்டு வாடிய மெலிந்த இத்தோள்கள் தம் பருத்த தன்மை கெட்டுவிட்டதால், அணிந்த வளையல்களோ கழன்று கீழ் வீழ்கின்றனவே. இது என்ன? நீ சற்று மன ஆறுதல் பெறுவதுதான் நன்மை பயக்கும்'' என்றாள்.

பின்னர் தோழி அவளை நோக்கி ''தலைவீ! வளை இழந்து பழைய அழகு கெட்டு நிற்கும் இத்தோள்கள் அக்கொடியவரது கொடுமையயைன்றோ பறை சாற்றும் என்றாள். இவை கேட்ட தலைவி இதைக் கண்டு ஊரில்

உள்ளார் அவரைக் கொடியவர் எனக் கூறுவதைக் கேட்டுப் பொறாமல் என் நெஞ்சமல்லவோ வருந்துகின்றது என்றாள்.

பின்னர் அவள் தன் நெஞ்சை நோக்கி, "நெஞ்சமே! கொடியர் எனச் சொல்லப்படும் அந்த அன்பில்லாதவரிடம் என் மெலிந்த தோள்களினால் உண்டாகும் ஆரவாரத்தை எல்லாம் உணர்ந்து நீ பெருமை அடைய மாட்டாயா?" என்று வினவுகின்றாள்.

அங்கே தன் வினை முடித்துத் திரும்புகின்ற அவனோ அவளுடன் தான் கலந்திருந்த காலத்தை நினைத்துத் தன்னுள்ளே சொல்லிக் கொள்ளுகிறான். "அக்காலத்திலே, யான் அவளை அணைத்துக் கிடந்த காலத்திலே—அணைத்த கைகளைச் சிறிது தளர்த்திய உடனேயே அவள் நுதல் பசலை பூத்ததே. எங்கள் தழுவுதலுக்கு இடையே காற்று புகுந்ததாக அதற்கே அவள் கண்கள் பசலையும் துன்பம் அடைந்தவே அத்தன்மையவள் இப்பிரிவை எங்ஙனம் ஆற்றியுள்ளாளோ? என்றெண்ணியவனாய்த் திரும்பி வருகிறான்.

## 22. நெஞ்சொடு கிளத்தல்

அவனைப் பிரிந்த அவள், தன் ஆற்றாமை மிக, தனக்கொரு பற்றுக்கோடும் காணாமல், செய்யத் தக்கவை அறியாமல் தன் நெஞ்சை நோக்கிச் சொல்லலுற்றாள்.

"நெஞ்சே! இந்தக்காதல் நோய் என்னும் தீராத துன்ப நோயைத் தீர்க்க ஒரு மருந்தை, நீ நினைத்து, அது எப்படிப் பட்டதாயினும் எனக்குச் சொல்ல மாட்டாயா? நானோ அவரையே நினைத்து நினைத்து வருந்த, அவரோ நம்மீது

காதல் இலராக இருக்கிறார். ஆக, நீ வருந்துவது உன் மடமையல்லவா? என்னுடன் இங்கே நீ இருந்து அவரையே நினைத்து வருந்துகிறாய். இத்துன்ப நோயை உண்டாக்கிய அவரோ, உன்னை இத்தகைய அன்பு கூர்ந்து நினைப்ப தில்லையே? அது மட்டுமா? நெஞ்சமே! என்னுடன் பொருந்தி இராமல் நீ மட்டும் அவரிடம் பறந்து சென்று விடுகின்றாய். ஆனால் அவரைக் காண அவாவுறும் இந்தக் கண்களோ, அவரைக் காட்டு, காட்டு என என்னைக் கொந்தித் தின்னுகின்றன. எனவே, நீ அவரை நோக்கிப் போகும்போது அங்கு இக்கண்களையும் உடன் கூட்டிச் செல்வாயாக!

அந்தோ நெஞ்சமே! நாம் அவரைக் காதலிக்க அவர் நம்மை விரும்பவில்லையே! எனவே அவர் நம்மை வெறுத்து விட்டார் எனப் பிணங்கிக் கைவிடல் நம்மால் கூடுமோ? சே, இது என்ன நினைவு. நீ முன் ஊடிய காலத்தில் கூடிப் பிணக்கு தீர்த்த காதலரைக் கண்டபோது, நீ பிணங்கி உன் வருத்தத்தை உணர்த்தும் வல்லமையற்ற நீ, வீணாக—பொய்யாக—கோபிக்கின்றாயே. வெறும் நடிப்புத் தானே இது? எனவே நெஞ்சமே! அவர் மேல் பீறிட்டெழும் காதலை விட்டுவிடு. அல்லது உன் நாணத்தைத் துறந்துவிடு. என் உயிரோ, காதல், நாண் ஆகிய இரண்டையும் தாங்கும் வலிமையற்றது.

நெஞ்சே! நீயோ பிரிவுத் துன்பத்தால் வருந்தி அவர் வரவில்லையே, வந்து அன்பு காட்டவில்லையே என ஏங்கு கிறாய். அவர் பின்னாலே ஓடுகின்றாய். உன்னைப் போலப் பேதையர் யார் உளர்? மட நெஞ்சமே! என் காதலர் இந்த நெஞ்சகத்திலே—உன் உள்ளேதான் உள்ளார். நீ, அவரை நினைத்து யாரிடத்திலே எங்கே தேடி ஓடுகின்றாய்?

நெஞ்சே! அது மட்டுமா. நம்மோடு கூடாத வண்ணம் ஒட்டாமல் பிரிந்து சென்றவரை நெஞ்சிலே நினைத்து

ஏங்குவதால் முன் தேய்ந்து போன புற அழகேயன்றி எஞ்சி நின்ற அகத்தழகும் மேலும் மேலும் தேய்ந்து இழக்க வேண்டியதே என்றாள்.

## 23. நிறையழிதல்

இங்ஙனம் தன் நெஞ்சத்தில் ஆற்றாமை மிக்கவளாய் அவளை நோக்கி அவள் தோழி, ''நாணும் நிறையும் நமது அணிகலன்கள் அல்லவா? அவை அறியாமல் அல்லவா நீ ஆற்றி இருக்க வேண்டும்'', என அவள் ''ஆம். நாணம் என்னும் தாழ்ப்பாள் பொருந்திய நிறை என்னும் கதவைக் காதல் என்னும் கோடரி அல்லவா வெட்டி உடைக்கிறது. அது ஒன்றே சற்றும் தாட்சண்யம் — கண்ணோட்டம் இல்லாமல் என் உள்ளத்தை நள்ளிரவிலும் ஆட்டியல்லவா வைக்கிறது'' என்றாள்.

அவளோ; அது சரி ஆயினும் இந்தக் காதல் உணர்வினை மறைப்பதல்லவா மகளிர்க்கு அழகு என்று கூற, அவளை நோக்கி, ''தோழி! நான் அதை மறைக்கவே நினைக்கின்றேன். ஆனால் அதுவோ தும்மலைப் போல அடக்கினாலும் தானே வெளிப்பட்டு விடுகின்றதே? அது மட்டுமா? இதுவரை யான் என்னை நிறையுடையேன் என்றே நினைத்திருந்தேன். ஆனால் என் காதல்தான் யான் அடக்க அடக்கப் பலரும் அறியப் பொது மன்றிடத்து வெளிப்படுகின்றதே?'' என்றாள்.

தோழி, ''அது சரி. அவர்தான் நம்மை மறந்துவிட்டாரே. நாமும் அவரை மறக்க வேண்டியதுதானே'' என்று கூற, அவள் தோழியை நோக்கி ''நம்மை நீங்கிச் சென்றவரைப் பின் தொடர்ந்து செல்லாமல் நிற்கும் மானத்தோடு கூடிய பெருந்தகைமை, காதல் நோய் கொண்டவர்கள் அறியாத ஒன்று ஆகும். அந்தோ! அந்த நிலையினால் என்னைவிட்டு

நீங்கியவர் பின்னே யான் சென்றடைதலை வேண்டுவதால் யான் அடைந்த துயர் எவ்வளவினது என்று கூற முடியுமா?'' என்றாள்.

தோழி அவளை நோக்கி, ''முன்னொரு நாள் அவர் பிரிந்திருந்து வந்தபோது நீ சிறிதும் பிணங்கவே இல்லையே? ஊடுதலே இல்லாமல் அன்று நீ கூடியதற்குக் காரணந்தான் என்ன?'' என்று கேட்கஅவள்கூறுகிறாள். ''நம்மால்விரும்பப் பட்ட தலைவர் காதலோடு நான் விரும்பியவற்றை எனக்கு நல்கும்போது நாணம் என்பது எங்கே நிற்கிறது? அப்போது நாண் என்பதை நான் அறிந்திலேன். அதோடு அவர் மாயம் மிக்கவரடி; அவர் பணிவு மிக்க மொழி என் பெண்மையை யல்லவா உடைத்து விடுகிறது. இதையும் கேள். அன்றொரு நாள் அவர் வத்தபோது ஊடுதலைச் செய்வேன்; பிணங்கு வேன் என்றுதான் சென்றேன். ஆனால் நெஞ்சம் கலந்து (வெள்ளத்தோடு வெள்ளம் மோதிக் கலப்பதைப் போல), விட்ட அந்த நிலையில் ஊடுதலுக்குப் பதில் கூடிவிட்டேன். எனவே நெருப்பிலிட்ட கொழுப்பைப் போலத் தலைவரைக் கண்ட உடனே உருகும் நெஞ்சையுடையவர்களிடம் அவர் புணர யாம் ஊடும் தன்மை எங்காவது உண்டா?'' என்றாள்.

## 24. அவர் வயின் விதும்பல்*

அயலூர் சென்ற அவரோ வரவில்லை. அவர் வரும் வழியைப் பார்த்து அவள் கண்களோ ஒளி மழுங்கிப் பஞ்சடைந்து விட்டன. அவர் சென்ற நாட்கள் இத்தனை ஆயின என்று சுவரில் சாந்து தோய்ந்த விரலால் தீட்டித் தீட்டியே விரல்கள் தேய்ந்துவிட்டன. தோழி அவளை நோக்கி இடையீடின்றி இப்படி இருத்தல் நன்றன்று. சிறிது மறந்திருத்தல் நலம் என்று சொல்ல, அவள் தோழியை நோக்கி, "மறப்பதா? நன்று சொன்னாய்; மறந்தால் எம் மேனி வாடி, தோள் மெலிந்து, அழகு கெட்டு, அணிகள் கழன்று விடும். அவரோ இன்பத்தை விரும்பாது வெற்றியை நாடி, நம் துணையினைத் துறந்து, ஊக்கத்தையே தம் துணையாகக் கொண்டு சென்றார். நானோ அவர் வருகைக் காகவே இன்னும் உயிரோடு இருக்கிறேன். இந்த நெஞ்சமோ கூடிய காதலோடு நம்மை நோக்கி வரும் வருகைக்காக வருதலை நினைத்து மேனி மேலும் கிளைத் தெழுகின்றது என்றாள்.

தோழி அவளை நோக்கி, "அவர் வரும் காலம் அணு கிற்று. நீ, உன் மேனியின் பசப்பை மாற்றித் துயராற்ற வேண்டும்" என, "அவர் வரட்டும், நான் கண்ணாரக் காண்பேன். பிறகு பசப்பென்ன தானே நீங்கி விடும். அது மட்டுமல்ல அவர் வரட்டும். என் துன்பமெல்லாம் தீர்ந்து விடும்படி ஒரே மூச்சாக அவரிடம் யான் இன்பத்தை நுகர்ந்து விட மாட்டேனா? ஆனால் ஒரு ஐயம் எனக்கு தோழி! என் கண்போன்ற அவர் வந்த காலத்தில் நான் பிணக்கம் கொள்வேனோ? தழுவுதலைச் செய்வேனோ? அல்லது கூடுவேனோ? ஒன்றுமே விளங்கவில்லையே" என்று அவள் தோழிக்குப் பதில் அளிக்கிறாள்.

அங்கே அவனோ, 'நம் அரசன் பணிக்கென நாம் அவளைப் பிரிந்து இங்கு வந்தோம். அரசன் வெல்க.

பின்னர் உடனே சென்று அவளைக் கண்டு, கண்ட அந்த மாலைக் காலத்துக்கு விருந்து வைப்போம். ஏனெனில் காதலரைப் பிரிந்து தனித்து நிற்கும் மகளிர் ஒரு நாளைக் கழிப்பது ஏழு நாட்களைக் கழிப்பதுபோலப் பொழுது நீண்டு துன்பந்தரும். அந்தோ! அவள் இருக்கிறாளோ துன்பம் தாங்காமல் இறந்து பட்டாளோ? அப்படி அவள் உள்ளம் அழிந்து விட்டால் நம்மை அவள் திரும்பப் பெறுவதால் பயன் என்ன? பெற்றுவிட்டாலும் பின் பொருந்தினாலும் தான் யாது பயன்?'' என்று உள்ளத்தே அலமருகின்றான் தலைவன்.

## 25. குறிப்பறிவுறுத்தல்

அப்பா! கடைசியில் ஒருநாள் அவன் வந்தே விட்டான். அவனும் அவளும் கூடினர். பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ? சிறிதுநேரம் சென்றது. உணர்வு மீளப்பெற்று அவன் அவளை நோக்கினான். அவன் தன் உணர்ச்சியை மறக்க முயல்வதையும் அதை அவள் கண்கள் காட்டி விடுவதையும் கண்டு, ''அன்பே! நீ என்னிடம் சொல்ல மறைத்தாலும் உன்னையும் மீறி உன் கண்கள் என்னிடம் சொல்வதற்குரிய செய்தியொன்று உண்டு. அஃது என்ன?'' என்று கேட்கிறான்.

மற்றை நாட்காலை அவன் அவள் தோழியிடம் தன் காதலியைப் புகழ்ந்து பேசுகிறான். ''அவளோ கண் நிறைந்த அழகி. மூங்கிலைப் போலத் தோள் வாய்ந்த அவள் தன் பெண் தன்மையாம் மடப்பம் மிக்கவள். அவள் அழகுக்குள்ளே ஊருடுவி நிற்கும் ஓர் குறிப்போ, கோத்த மணியினுள் விளங்கும் நூலைப் போன்றது. அதுமட்டுமா? இவள் புன்முறுவலிலே அரும்பவிழ நிற்கும் முகை மொட்டுக் குள்ளே அடங்கிய நறு நாற்றத்தைப் போல் பேசாத குறிப்பல்லவா அடங்கிக் கிடக்கின்றது. அதோ நெருங்கிய

துணையாயிருந்து அவள் செல்கிறாள். அவள் என்னை நோக்கிச் செய்து விட்டுச் சென்ற கள்ளத்தனமான குறிப்பு தான் என் நோயைத் தீர்க்கும் மருந்தாகும்'' என்கிறாள்.

தோழி பின்னர் அவளைக்காண, அவள், ''தோழி, மிக்க அன்போடு கலந்து இன்புற்றோமோ அது அன்பின்றிப் பிரியும் பிரிவுக்கு உரிய குறிப்போ? மற்று ஏதோ ஒன்றோ? யான் அறியேன். அவர் என்னை உடலால் கலந்தபோது, உள்ளத்தால் பிரிவர் என்ற உணர்வை என் நெஞ்சு உணர்ந்தது. என் கை வளையல்களோ அதற்கு முன்னே கழன்று விழுந்தன. அன்று ஒரு நாளே பிரிந்து சென்றார் அவர். என் மேனியோ ஏழு நாட்கள் கழிந்தன போல் பசலை பூத்தது'' என்றாள்.

அங்கிருந்து அகன்ற அத்தோழி அவனிடம் சென்று, ''நீ திரும்பவும் வெளிநாட்டுக்குச் செல்வதானால் அவளையும் அழைத்துச் செல்க. அவள் வளையலை நோக்கி இவை கழன்றுவிடும் எனக் குறிப்புணர்த்தித் தன் மென்மை வாய்ந்த தோள்களையும் நோக்கி இவை பிரிவால் மெலியும் என்று குறிப்பால் உணர்த்தி பின், தன் பாதங்களைப் பார்த்த பார்வை உடன் போக்கு அமைய வேண்டும் என்ற அக்குறிப்பையே உணர்த்தும்'' என அவன் ''ஆ ஆ! அவள் தன் கண்களாலேயே காதற் குறிப்பினை உணர்த்திப் பிரியாதிருக்கும்படி உடன் போக்குணர்த்தி இரந்தாளே, அதுதான் பெண்மையின் சிகரமாகும்'' என்று பதிலிறுத்தான்.

## 26. புணர்ச்சி விதும்பல்

### விதும்பல்—விழைதல்

மறுநாள் காலை தோழி அவளை நோக்கி மிக்க நகையோடு, "ஆ! ஆ! அவர் பிரிதற் குறிப்பை உணர்ந்த வளான நீ, அவரோடு ஊடுதலைச் செய்யாமல் கூடிக் குலவி வருகிறாயே? மிக்க அழகுதான்" என்று கேலி செய்ய, அவள் தோழியை நோக்கி "நினைத்த போதெல்லாம் களிப்படைதலும் கண்டவுடனே மகிழ்தலும் கள்ளுக்கு ஏதடீ! காதலின்பத்திலேதான் உண்டு. எனவே காதலுணர்வு பனையளவாக நம்மிடம் உண்டாகும்போது தினையளவும் பிணங்குதல் கூடாது. அதுமட்டுமல்ல தோழீ! நம்மை விரும்பாமல் புறக்கணித்துத்தான் விரும்பிய வற்றையே செய்தாலும் அவரைக் காணாமல் இந்தக் கண்கள் பொருந்த மாட்டேன் என்கின்றன. நேற்றுக் கூட அவரிடம் நான் பிணங்கி நிற்க வேண்டுமென்றுதான் சென்றேன். ஆனால் என் நெஞ்சமோ பிணங்க மறுத்துக் கூடுதலுக்குத்தான் விரைந்தது. பின் யான் என் செய்யக் கடவேன்? கூடினேன், ஏனெனில் கண்களுக்கு மை தீட்டும் போது மைதீட்டும் கோலை கண்கள் காணமாட்டா; அதைப் போல அவரை அண்மையில் கண்ட நேரத்திலே என் காதலரின் குற்றம் என் நெஞ்சிலே தோன்றவில்லை. அவரைக் காணாத காலத்திலெல்லாம் அவர் தவறுகளை மட்டுமே காண்கிறேன். வெள்ளம் புரண்டு செல்லும் போது அது நம்மையும் அடித்துக் கொண்டு போகும் என்ப தறிந்தும் ஆற்றிலே பாய்கின்றவரை ஒப்பவே ஊடல் பயன் படாது என்பறிந்தேன். பின்னர் ஊடிப் பிணங்குவதால் என்ன பயன்?" என்று சொன்னாள்.

இதைக் கேட்ட தோழி, சற்றுப் பின்னர் அவளை நோக்கி "நீர் சரியான கள்வர். எப்படிப்பட்ட அவமான மடையத்தக்க இழிவான துன்பங்களை நீ செய்தாலும்

கள்ளுண்டு களிப்பார்க்கு மேலும் விரும்புகின்ற கள்ளைப் போன்றதுதான் உம் மார்பு'' என்று கூற,

அவன் ''அவளிடம் காதல் உணர்வு மலரைக் காட்டிலும் மென்மையானது. ஒரு சிலரே அதன் பக்குவத்தை—தன்மையை—மென்மையை—உண்மையை உணர்ந்தவர்கள். என் காதலியோ தன் கண்களால் பிணங்கினாலும் என்னைக் காட்டிலும் விரைவாக என்னைத் தழுவுவதற்கே மிகவும் விழைந்தாள்'' என்றாள்.

## 27. நெஞ்சொடு புலத்தல்

அவள் தனித்திருந்தாள். காரணம் இருந்த போதிலும் பிணங்க மறுத்துவிட்டா தன் உள்ளத்தினை நோக்கி அவள் கூறுகிறாள். ''நெஞ்சமே! அவர் உள்ளம் நம்மை நினையாது அவருக்காக அன்றோ உள்ளது? ஆனால் நீயோ எனக்கே உரியதாக நில்லாமல் அவர் பின்னால் தொடர்ந்து போகிறாயே? அன்பற்ற அவரைக் கண்டவுடன், அவர் வெறுக்க மாட்டார் என்று குதிபோட்டபடி அவர்பின் ஓடுகின்றாயே? அது ஏன்? ஓ! ஓ! வாழ்விலே கெட்டு நொந்தவர்க்கு நட்பினர் இல்லை என்பதல்லவா பழமொழி. அதனால்தானோ என்னவோ உள்ளம் கெட்டு நொந்துள்ள என்னை விட்டு அவர் பின்னே அவரை விரும்பிச் செல்கின்றாய். சீ! இனி உன்னோடு கலந்து ஊடுதல் பற்றி எவர் ஆலோசிப்பார், நீ தான் சமயம் வாய்த்த போது அவரோடு ஊடி அதன் பயனை அனுபவிக்கத் தவறி விட்டாயே'' என்று சொல்லிப் பிணங்கினாள்.

பின், தன் வீட்டின் பின்புறமாகத் தூதாகச் சென்ற தோழி வருவதைக் கண்டாள். அவளுக்குக் கேட்கும்படி தன் உள்ளத்திற்குச் சொல்வதைப்போல் சொல்லலுற்றாள்.

அவரை அடையாதபோது பெறாமைக்கு அஞ்சியும், பெற்ற காலத்தில் பிரிவுக்கு அஞ்சியும் அமைந்த நெஞ்சமோ தீராத துன்பம் உடையது. அவரைப் பிரிந்து தனித்திருந்து அவர் தவறுகளை நினைத்த அக்காலத்தில் இந்த நெஞ்சம் என்னைத் தின்பதைப்போல் துன்பம் விளைவித்தது. அவரை மறக்க முடியாத இந்த மட நெஞ்சத்தோடு நான் மறக்கக் கூடாத என் நாணத்தையும் அல்லவா மறந்து விட்டேன். அதுமட்டுமன்று இந்த உயிர்மீது விருப்பத்தைக் கொண்ட இந்த உள்ளம், பிரிந்த காதலரை, நாம் இகழ்ந் தோமாயின் நமக்குத்தான் இழிவு என்று நினைத்து அவர் நல்லியல்புகளை மட்டுமே அல்லவா நினைக்கிறது'' என்றாள்.

அவனோ தன் நெஞ்சையே நோக்கிக் கூறத் தொடங் கினான். ''துன்பக் காலத்தில் நீ கூட எனக்குத் துணை யில்லாமல் போனால், வேறு யார்தான் எனக்குத் துணை யாகி நிற்பர்? ஆ! ஆ! நமது நெஞ்சமே நமக்கு உறவின்றித் துணையில்லாமல் விரோதியாகி விட்டால் வேறு அயலார் தாமா நமக்குத் துணை நிற்பர்?'' என்று தன் நெஞ்சத்தோடு புலந்து கூறினான் அவன்.

## 28. புலவி

இவ்வண்ணமாகப் பிணங்கவில்லையே என்று தன் நெஞ்சோடு புலந்த தலைமகளைக் காணத் தோழி வரு கிறாள். வந்து அவளிடம், ''நீ ஒரு சிறிதாவது பிணங்கு வதுதான் நல்லது. அப்படிப் புலந்தால்தான் அவர் அடை கின்ற துன்ப நோயை நாம் சிறிது காணலாம். ஆனால் அந்தப் பிணக்கும் ஒரு அளவுக்கு உட்பட்டிருக்க வேண்டும். நீடித்தாலோ உணவில் உப்பு அதிகமானால் உவர்ப்பதைப் போல உவர்த்துவிடும். உணவுக்கு உப்பைப் போல உங்கள் காதலுக்குப் பிணக்கு சுவை கூட்டி உருசி அளிக்கும்'' என்றாள்.

அவளோ தோழியை நோக்கி, "தோழி! பிணங்கிய காலத்தில் ஊடலை உணர்த்தித் தழுவாமல் அவர் விடுவா ராயின், அது வருந்தியவரை மேலும் மேலும் துன்பம் செய்வதை ஒக்கும். அது மட்டுமா, ஊடல் கொண்ட வரைப் பிணக்கு நீக்கிக் கூடாமை முன்னமே வாட்டமடைந் துள்ள கொடியை வேரோடு அறுத்து விடுவதைப் போன்ற தன்றோ?" என்கிறாள். நற்பண்புமிக்க தலைவனோ தலைவி யின் பிணக்கினை நீக்கிக் (புலவியை நீக்கி) கூடியபின் தன் னுள்ளே எண்ணுகின்றான். நல்லாடவர்க்காம் அழகு தான் மலர்போன்ற கண்களையுடைய மகளிரின் நெஞ்சில் விளை யும் புலவிமிக்க சிறப்பு மட்டுமே ஆகும்.

மற்றும் பெரும் பிணக்கும் சிறு பிணக்கும் அற்ற காதல் வாழ்க்கை, மிக அளிந்த பழம் போலவும் முற்றாத பிஞ்சுக் காய் போலவும் சுவையற்றுப் பயன்படாது போம். எனவே யாங்கள் கூடியிருக்கும் இன்பமும் இனிமேல் நீடிக் குமோ, நீடிக்காதோ என்னும் ஏக்கத்தால் இன்பத்திற்கு இன்றியமையாத பிணங்கலின் கண்ணும் காதலர்க்கு ஒரு வகை துன்பமன்றோ பிறக்கிறது என்று எண்ணுகிறாள்.

இருவரும் பின்னர் கூடிய வழி அவள் பிணங்க அவன் அவளை நோக்கி நம் பொருட்டாக இவர் நொந்தார். இவர் காதல் இத்தன்மையது என்றறியும் காதல் உணர்வு இல்லாத வளிடம் "நெஞ்சே! நீ, நோவது எக்காரணம் பற்றியோ? இந்தப் பிணங்குதல் கூடத் தண்ணீர், நிழலிடத்தே இன்பம் பயப்பதைப் போல, அன்பு செலுத்துவோரிடம் கொள்வதே இன்பம் தரும். மற்றன்பில்லாரிடத்து கொள்ளும் புலவி யால் இன்பம்தான் ஏது? அது மட்டுமா? ஊடல் கொண்ட காலத்திலே அதை நீக்கி மகிழ்விக்காமல தானும் ஊடி என்னை வாடவிடுபவளுடன் கூடி முயங்குவதற்கு என் நெஞ்சு விழையும் காரணம் என்னுடைய ஆசையே அல்லா மல் மற்றென்ன?" என்று கூறினான்.

## 29. புலவி நுணுக்கம்

அவனும் அவளும் அமளிமிசை இருந்தனர். எந்த ஒரு காரணமுமின்றியே அவளிடம் பிணங்கவேண்டுமென்பது அவள் ஆசை. அவனோ சற்று வெளியில் காற்றாட உலாவி வரச் சென்று திரும்பியவன், அது போதாதா அவள் ஊடுதற்கு?

''பெண்ணின் இயல்பினையுடைய பெண்ணாகப் பிறந்தவர்கள் யாவரும் தம் கண்களால் உம் அழகினைப் பொதுவாக நுகர்வதால் நீ ஒரு பரத்தன் (பரத்தையின் ஆண்பால் பரத்தன்). எனவே உம் மார்பினை நான் தழுவ மாட்டேன்'' என்றாள் அவள்.

இந்தப் புலவியின் நுட்பத்தையெல்லாம் அவள் பின்னர் தோழியிடம் சொல்கிறாள். ''தோழீ! நாங்கள் இருவரும் பிணங்கி இருந்தோம். ஒருவரும் பேசவில்லை. அப்போது அவர் ஒரு பொய்த்தும்மல் தும்மினார். நான் 'நீடு வாழ்க' என்று சொல்வேன் என்று நினைத்தே தான் தும்மினார். நானும் அங்ஙனமே சொல்ல எங்கள் பிணக்கு தீர்ந்தது.

அவனோ அத்தோழியிடம் மற்றை நான் சொல்லலுற்றான். உன் தலைவி நேற்றுப் பிணங்கியதற்கு காரணம்கூட வேண்டுமா என்ன? மரத்தின் பூவைச் சூடிக் கொண்டாலும், இது யாரோ ஒருத்திக்கு அடையாளம்— அலங்காரம் காட்டுவதற்காகத்தான் சூடினீர் என்கிறாள். நாம் யாரைக் காட்டிலும்—யாரையும் விடக் காதல் மிக்கவர்கள் என்றாலோ, வேறொருத்தியுடன் நான் காதல் கொண்டதாகக் கற்பித்துக் கொண்டு யாரைக் காட்டிலும் என்னிடம் காதல் மிக்கவர் என்றே பிணங்கினாள். அதோடு நான் இப்பிறப்பில் பிரிய மாட்டேன் என்றேன். அப்படியானால் அடுத்த பிறவியில் பிரிய வேண்டியதுதானா என்று கண் நிறைய நீர்கொண்டு அழத் தொடங்கி விட்டாள்.

அதுமட்டுமன்று, உன்னைப் பிரிந்து சென்றிருந்தேனே அங்கே உன்னை நினைத்தேன் என்றேன். உடனே அவள் என்னை மறந்ததால் அன்றோ நினைத்தீர். ஏன் மறந்தீர்? ஏன் மறந்தீர்? என்று ஊடலை மேற்கொண்டாள். அடுத்து நான் தும்மினேன். அவள் நீடு வாழ்க என வாழ்த்தி உடனே அழுதாள். யாரோ உம்மை நினைக்கிறார்கள். அதனால்தான் உமக்குத் தும்மல் வந்தது என்று சொல்லி வருந்தினாள். எனவே, அடுத்து வந்த தும்மலை நான் அடக்கிக் கொண்டேன். ஆ! ஆ! என்னிடம் உம்மவர் உம்மை நினைத்தலை மறைப்பதற்காகவேதான் நீர் உம்முடைய தும்மலை அடக்குகின்றீர் என்றாள். அவள் ஊடலை நீக்க நான் மிகப் பணிந்து தாழ்ந்த காலத்தும் பிற மகளிரிடத்தும் இங்ஙனமே செய்து ஊடலைத் தணித்தீரோ என்று பிணங்கினாள். அவள் மேனி அழகை நான் கண்ணாரக் கண்டு ரசித்தபோதோ, நீர் என்னோடு யாரை ஒப்பிட்டு இப்படிப் பார்க்கின்றீர் என்று பிணங்கிக் கோபம் கொள்கிறாளே என்று குறைபட்டுக் கொண்டாள்'' என்றான்.

## 30. ஊடலுவகை

''நீ ஏன் காரணமில்லாமலேயே அவரிடம் பிணங்கிக் கொள்கிறாய்'' என்று அவள் தோழி அவளை மறுநாட் காலையில் கேட்டாள். அவளோ, தன் தோழியை நோக்கி, ''அவரிடம் தவறு சிறிதும் இல்லைதான். ஆயினும் நான் அவரிடம் பிணங்கியது, அவர் நம்மிடம் மிகுதியாக அருள் காட்டுவதற்குத்தான். மற்றும் இவ்வூடலினால் தோன்றும் சிறு துன்பத்தால் நம் காதலர் செய்கின்ற சிறந்த அருள் சிறிது வாடுவதே ஆயினும், அதுவும் ஓர் பெருமையினையே உடையது. எனவே மண்ணோடு நீர் கலந்தாலொத்த நெஞ்சம் ஒன்றுபடக் காதலரிடம் பிணங்கும் இன்பத்தைக்

காட்டிலும் தேவருலகின் இன்பம் மேம்பட்டதா? என்ன? சிறிதும் இல்லை. அந்த வகையிலே காதலரைத் தழுவிக் கொண்டு விடாமலிருப்பதற்குக் காரணமான பிணக்கிலே தான் என் உள்ளத்தை உடைக்கும் படையாகிய அவர் இனிய சொல்லும் பணிந்து தாழ்தலும் தோன்றுகின்றன'' என்றாள்.

அவனோ, அவள் பிணக்கை நீக்கியபின் கூடிக் கலந்து மிக்க மகிழ்ச்சியுற்றவனாய்த் தன் மனத்துள்ளே நினைக்க லுற்றான். நம்மிடம் தவறில்லையாயினும் தவறு இழைத்தேன் எனப் பொய்க் கோபம் கொண்டு பிணங்கினாள். தாம் விரும்பும் மகளிரின் மெல்லிய தோள்களை நீங்கிய அந்த நிகழ்ச்சியும் எவ்வளவு இன்பத்தை உண்டாக்கிற்று. உண்ணும்போது அடையும் இன்பத்தைக் காட்டிலும் அவ் உணவு செரிமானம் ஆவது இன்பமாயிருப்பதுபோல, காதலால் கூடுவதைக் காட்டிலும், பிணங்கி—ஊடிக்—கொள்வதும் மிக இனிமை பயப்பதுதான் போலும்.

அது மட்டுமா? ஊடலிலே தோற்றவரே வெற்றி பெற்றவர் ஆவார். அது ஊடல் முடிந்தபின் உண்டாம் கூடுதல் கண்ணே தான் நன்கு விளங்கும்.

கூடுதல் காலத்தில் நுதல் வியர்ப்படையத் தோன்றிய உப்பாம் சுவையினை, மற்றோர் முறை இவள் ஊடுவதால் யாம் பெறக் கூடுமா? எனவே, இன்றைய இரவே, நீ நீடிக்க வேண்டும் ஏனெனில், இன்று இவள் ஊட வேண்டும், அவளிடம் ஊடல் தீரக் குறை இரப்பதற்குக் காலம் வேண்டு மல்லவா? எனவே இரவே! நீ நீடிப்பாயாக!

ஆ! ஆ! இந்த ஊடல் மட்டுமே காதலின்பத்தின் உச்ச கட்டம். அதற்கும் மேம்பட்ட இன்பமோ அவ்வூடலை அளவறிந்து நீங்கித் தம்முள் கூடி முயங்குதலே ஆகும்.

# 31. மக்கட்பேறு

இம்முறையில் ஊடியும் கூடியும் அன்பு கலந்த இல் வாழ்க்கையில் வாழ்கின்ற இருவருக்கும் அணிகலனாக அமைவது நல்ல மக்களைப் பெறுதலே ஆகும். எனவேதான் வள்ளுவர் பெறத்தக்க பேறுவகையிலே நல்ல அறிவமைந்த நன்மக்களைப் பெறுவதைக் காட்டிலும் வேறு பேறுகளை நாம் மதிப்பதில்லை என்கிறார். அது மட்டுமா? பிறரால் பழிக்கப்படாத நற்குணங்கள் அமைந்த நன்மக்களை ஈன்ற தாய் தந்தையரை ஏழு பிறவிகளிலும் தீவினைப் பயன் சென்றடையாவாம்.

இவ்வகையிலே தமது பொருள் என்று கருதத்தக்கவை தாம் ஈன்ற மக்கட்செல்வமே! அம்மக்களது செல்வமோ அவரவர் வினைப்பயனின் அளவதாக வந்து அமையும்.

இனி மக்கள், சிறு குழவியாய் இருக்கும் பருவத்திலே, அவர்கள் தாம் சிறு கையால் இட்டும் தொட்டும் அளாவப் பெற்ற உண்டிதான் பெற்றோர்க்கு அமிழ்தத்தைக் காட்டிலும் இனிமையானது, அதுமட்டுமா! அவர்கள் தம் உடலைத் தீண்டுதலோ உயிர்தளிர்ப்ப உடல் புளகிக்கும் இன்பமாகும். அவர்கள்தம் சொற்கேட்டலோ செவிக்கு இன்பம் பயக்கும். இங்ஙனம் தம் மக்களின் மழலைச்சொல் கேட்க வாய்ப்பற்ற பெற்றோர்களே குழல் இனிமை மிக்கது யாழ் மிக இனிமையானது என்று கூறுவார்கள்.

ஒரு தந்தை தன் மகனுக்குச் செய்ய வேண்டிய சிறப்பான நன்மையாவது. கற்றோர் வல்ல அவையிலே சிறந்து விளங்கச் செய்தலே ஆகும். ஏனெனில் தமது மக்கள் கல்வி கேள்விகளில் சிறந்த அறிவுடையோராக விளங்குதல், தம்மைக் காட்டிலும், உலகத்திலே வாழும் பிற உயிர்களுக் கெல்லாம் மிக்க இன்பம் பயப்பதாகும்.

அது மட்டுமல்ல; தன் மகனை நற்குண நற்சொல் நற்செயல் மிக்க சான்றோன் எனப் பிறர் புகழக் கேட்ட ஒரு தாய் அவனை ஈன்ற காலத்தில் பெற்ற மகிழ்ச்சியை விடப் பெரிதும் மகிழ்ச்சியடைவாள்.

இங்ஙனமாகப் பெற்றோரால் பெற்று வளர்த்து சான்றோனாக்கப்பட்ட ஒரு மகன் தன் தாய்தந்தையருக்குச் செய்ய வேண்டிய கைமாறுதான் யாதெனில், இவனை மகனாகப் பெற இவன் தந்தை என்ன தவம் செய்தானோ?'' எனப் பிறர் புகழும் தன்மையுடையவனாதலே ஆகும்.

## 32. அன்புடைமை

இல்லறத்தின்கண் மனைவி மக்களோடு வாழ்கின்றவர்கட்கு இன்றியமையாது வேண்டப்படுவது அன்புடைமையே. இல்லறம் இனிது நடக்க பிற உயிர்கள் மேல் அருள் சுரக்க வேண்டப்படுவது இவ்வன்புதான். இந்த அன்பினை அடைத்து வைக்கும் தாழ்கோல் உண்டோ? இல்லை. எப்படியெனில் பிறர் துன்பம் கண்ட காலத்திலே அன்புள்ளவர்கள் தம் உள்ளத்தின் நெகிழ்ச்சியால் தம் கண்களிலே சுரக்கும் கண்ணீரே அன்பின் தன்மையைப் பிறர் அறியக் காண்பித்து விடும். அன்பில்லாதவரோ தன்னல மிக்கவர். பிறர்க்கு எவ்வகையிலும் பயன்படாதவர். யாவும் தமக்கே வேண்டும் என்பார்கள். ஆனால் அன்பின் வயப்பட்டவர்களோ, தம் எலும்பையும் பிறர்க்குத் தருகின்ற, பிறர் வாழத் தம்மையே அர்ப்பணிக்கின்ற தியாகிகள்.

உயிர் அருமையானது. இது உடம்போடு பொருந்தியுள்ளது. இந்த உயிர் உடம்பிடையே பொருந்தியுள்ள உறவுதான் அன்புடன் பொருந்தி வாழும் வாழ்க்கையின் பயன், என்பர் அறிந்தோர். அன்பு என்பது மக்கள் சமுதாயத்திலே

பிறரால் விரும்பப்படும் தன்மையை உண்டாக்கும். அந்த விருப்பமோ நட்பு என்று கூறப்படும். அளவற்ற சிறப்பினை நல்கி விடும்.

அன்புடையவர்களாகி அறம் பொருந்தி வாழும் வாழ்க்கையின் பயனே, இவ்வுலகத்தில் இன்பம் மிகப் பெற்று வாழ்கின்றவர் அடையும் சிறப்பு எனப்படும்.

அறியாமை மிக்கவர்கள், அன்பு எனப்படும் பண்பு அறத்திற்கு மட்டுமே துணையானது என்பர். ஆனால் வீரச் செயலுக்கு அவ்வன்பே துணை நிற்பதாகும்.

எலும்பில்லாத புழுக்களைக் கதிரவன் காய்ந்து கொல்வதுபோல், அன்பற்ற உயிர்களை அறமே அழிக்கும்.

இப்படிப்பட்ட அன்பு உள்ளத்திலே இல்லாமல் வாழ்கின்ற வாழ்க்கை, பசுமையும் தளிர்த்தலுமின்றிப் பாழ் நிலத்திலே நிற்கும் பட்டமரத்தை ஒத்ததாகும். அது மட்டுமன்று. உள்ளத்தினது உறுப்பாகும். அன்பைப் பெறாதவர்க்குப் புறத்துறுப்புகளாம் கை, கால், தலை, கண் முதலிய உறுப்புக்கள் நன்கு அமைந்திருந்தும் அவைகளால் பயன் ஏதுமில்லை.

அன்பு வழியிலே இயங்குகின்ற உடம்பு மட்டுமே உயிர் உடலிலே பொருந்திய உடம்பாகும். அது இல்லாதவர்க்கு உள்ள உடம்பு எலும்பும் தோலும் போர்த்த உடம்பே அல்லாமல் உயிர் உள்ள உடம்பு ஆகாதாம்.

# 33. அறன் வலியுறுத்தல்

வாழும் மக்களினத்திற்குச் சிறப்பைத் தருவதும் அழியாத செல்வத்தைத் தருவதும் அறம் ஒன்று மட்டுமே ஆகும். எனவே, உயிரினத்துக்கு அறத்தைக் காட்டிலும் மிகச் சிறந்த உறுதி பயக்கும் செல்வம் வேறில்லை அது மட்டுமன்று அந்த அறத்தைப் பேணாமல் மறந்துவிடுவதைக் காட்டிலும் மக்கள் இனத்துக்கு வரும் கேடும் வேறு இல்லை.

எனவே, ஒவ்வொருவரும் தன்னால் இயன்ற மட்டும் எக்காரணத்தாலும் இடைவிடாமல் அறத்தினை மன மொழி மெய்களால் அது எய்துமிடந்தோறும் செய்தல் வேண்டும்.

இனி, அறம் என்பதுதான், என்ன? தன் உள்ளத்திலே எவ்வகைப்பட்ட களங்கமும் பொருந்தாமல் வாழ்வதுதான் அறம். பிற—அதாவது களங்கமுற்ற உள்ளத்தோடு செய்யும் பிற அறச்செயல்கள் வெறும் ஆரவாரத்தன்மை உடையனவே. உள்ளத்திலே களங்கம் என்பது யாது? பொறாமை, பேராசை, சினம், கடுஞ்சொல் ஆகிய இந்நான்கு குற்றங்களும் நம் உள்ளத்திலே சென்றடைதலாகும். எனவே, அவற்றைக் கடிந்து ஒழுகுவதே அறம். உளத்தூய்மைக்கு வழியும் அவ்வறமே யாகும்.

இந்த அறத்தினை, இப்போது நாம் இளைஞர்; இது போது நாம் நடுப்பிராயத்தனர்; எனவே, முதியவரானபின் செய்யலாம் எனத் தள்ளிப் போடாமல் எக்காலத்தும் எப்பிராயத்தும் செய்தல் வேண்டும், அப்படிச் செய்கின்ற அவ்வறச் செயலின் பயன் நம்முடைய உயிர் நீங்கும் காலத்தில் நமக்குப் பொன்றாத—அழியாத—துணையாய் நிற்கும்.

பல்லக்கைச் சுமப்பவன், அதிலே ஊர்ந்து செல்பவன் என வேறு வகைப்பட்ட வாழ்க்கை நிலையிலே உள்ளவர் களைப் பார்த்தே அறத்தின் பயனை அளந்து அறிய முயல வேண்டா. முற்பிறப்பில் அறம் செய்தவர்கள் பல்லக்கிலே ஊர்ந்து செல்ல, அறஞ்செய்யாதவர்கள் இப்படிச் சுமக் கின்றார்களெனத் தீர்மானிக்க வேண்டா. அறத்தின் செயல் கடமை — ஒவ்வொருவரிடமும் பொருந்தி உள்ளது. இவ்வகையில் அறத்தாறு ஒவ்வொருவரிடமும் உள்ளது.

எனவே ஒருவன் அறஞ் செய்யத் தவறிய நாள் ஏற்படாதவாறு கவனித்து, அறச்செயல் ஆற்றுவானானால் அச்செயல், திரும்பவும் இவ்வுலகிலே உடலோடு உயிர் பொருந்த வரும் மறுபிறவியின் வழியை அடைக்கும் தடைக் கல்லாகி விழும்.

வாழ்க்கையில் அறச்சிந்தனை, சொல், செயல்களால் அடைவது மட்டுமே இன்பம்; பிறவகையிலே நம்மை வந்து அடைவனவோ துன்பம் மட்டுமன்று புகழ் அற்றவையு மாகும்.

ஆகையால் நாம் ஒவ்வொருவரும் நம் வாழ் நாளில் முயன்று மேல்கொண்டு செய்ய வேண்டுவது அறம் மட்டுமே நம்மை அடையாமல் காத்துக் கொள்ள வேண்டியது பழி மட்டுமே.

# 34. விருந்தோம்பல்

இல்லறத்தில் மனைவி மக்களோடு பொருந்தி இருந்து பொருள்களைப் பாதுகாத்து வாழ்வதெல்லாம் நம்மை நாடிவரும் விருந்தினர்களைப் போற்றி உதவி செய்தற் பொருட்டே ஆகும்.

நம் வீட்டிற்கு விருந்தினராக வந்தவர், வீட்டின் புறத்தே இருக்க, நாம் தனித்திருந்துண்பது (தேவாம் ருதமே) அமிழ்தமே ஆயினும் அது விரும்பத் தக்கதன்று. எனவே, தன்னை நோக்கி வரும் விருந்தினரை நாள் தோறும் உபசரிப்பவனது வாழ்க்கை ஒருக்காலும் வறுமை யால் பாழாவதில்லை. அதுமட்டுமல்ல, தன்னை நாடிவந்த நல்ல விருந்தினரை முகமலர்ச்சியோடு உபசரிப்பவனது இல்லத்தினிடத்தே திருமகள் மன மகிழ்ச்சியோடு பொருந்தி யிருப்பாள். ஆகவே விருந்தினரை முன்னே ஓம்பி, பின்னர் எஞ்சி நிற்கும் உணவை உண்டு வாழ்கின்றவனுடைய நிலத்திலே விதையும் விதைக்க வேண்டுவதில்லை. தாமே முளைத்துப் பயன் தரும்.

நம்மிடம் வந்து யாசிக்காமல் தெரு வழியே செல்லும் துறவிகளாம் செல் விருந்தினரைப் போற்றி உணவளித்துப் பின் தன்னை நோக்கி வரும் விருந்தினரை எதிர்பார்க்கும் ஒருவன் தேவலோகத்தில் உள்ளவர்க்கு நல் விருந்தினனாக இறந்த பின் சென்றடைவான்.

விருந்து ஓம்புதல் என்பதே ஒரு வேள்வி. இந்த விருந்து ஓம்புதலாம் வேள்வியின் பயன் இவ்வளவு என்று அளவிட முடியாது. விருந்தினரின் தகுதி அளவே அதன் அளவு கோலாகும். விருந்தினரை ஓம்பி, அவ்வேள்வியின் பயனை அடைகின்ற முயற்சி இல்லாதவர் நிலையில்லாத பொருளை வருந்திக் காத்துப் பின் அதனை இழந்து

''இப்போது எவ்வகைப் பற்றுக்கோடும் (பிடிப்பும்) இல்லாமல் இழந்துவிட்டோமே'' என்று இரங்குவார்கள்.

ஒருவன் செல்வம் மிக்கவனாய் வாழ்ந்து கொண்டு இருக்கும் காலத்திலும் கூட அவன் ஏழையே. அவ்வாறு வறிஞனென்று மதிக்கப்படுதலுக்குக் காரணம் அவன் விருந்தினரை உபசரித்தலை இகழும் பேதைமையே ஆகும். அந்த மடமைதான் அறிவோரிடத்து உள்ளது அன்று. அது பேதையரிடமே உள்ளதாம்.

விருந்தினர்கள் மிக்க மென்மையான உள்ளம் உடையவர்கள், அனிச்சமலரினும் மென்மையானவர்கள். அனிச்சமலரோ, கிள்ளி முகர்ந்த பின்தான் வாடிவிடும். ஆனால், விருந்தினரோ இல்லறத்தான் முகமலர்ச்சியின்றி வேறுபட்டு நோக்கிய மாத்திரத்திலேயே வாடி விடுவர்.

## 35. இனியவை கூறுதல்

இனிமை வாய்ந்த சொற்களை நாம் பேசும் போது கேட்பவர் அதனால் பிணிப்புண்டு மயங்குவர். அதனால் நாம் நினைப்பது நிறைவேறுவது மட்டுமன்று, நாம் நம் பகைமையும் வெல்லக் கூடும்.

சரி, இன்சொல் என்பது என்ன? நெஞ்சத்தில் கசிவாகிய ஈரமாம் அன்பு கலந்து, வஞ்சனை சிறிதும் கலவாத சொற்களே இன்சொற்கள். அதோடு மெய்ப் பொருள் கண்டவர்களின் வாய்ச்சொற்கள் இன்சொற் களே. எனவே, ஒருவன் பிறரைக் கண்ட போதே முக மலர்ந்து இன்சொற்களே பேசுபவனாகஅமைந்து விட்டால், அச்செயல் மனமகிழ்வோடு பிறருக்கு ஈதலைக் காட்டிலும் உயர்ந்ததேயாகும்.

இம்முறையில் அறம் எனப்படுவது முகத்தால் விரும்பி இனிதாகப் பார்த்து உளமார்ந்த இனிய சொற்களைக் கூறுவதே ஆகும். இத்தகைய இனிய சொற்கள் யாவரிடத்தும் பேசுதலை அமையப் பெற்றவர்க்குத் துன்பத்தை மிகுவிக்கும் வறுமை நோய் என்பது இல்லாது ஒழிந்து போகும்.

அது மட்டுமல்ல, ஒருவனுக்குப் பெருமிதத்தைத் தரும் அணிகலனாக விளங்குவது பிறரிடம் பணிவுடையனாதலும் இன்சொல் வழங்குபவனாகவும் விளங்குவதே. பிறவாம் மெய்க்கணிகின்ற எந்த அணிகளும் அணிகலனாக மாட்டா.

இந்த இனிய சொற்களைக் கூறுவதால் உண்டாகும் நன்மைகள் யாவை எனில் ஒன்று பிறர்க்கு நன்மையான வற்றை யேநாம் ஆய்ந்து இனிமையான சொற்களைச் சொல்லுபவர் கட்குப் பாவம் தேய்ந்து அறம் பெருகும். மற்றொன்று பிறர்க்கு நல்ல பயனைத் தந்துநற்பண்பின் நீங்காத இன்சொற்கள் பேசுகின்றவனுக்கு அவை இன்பத்தையும் நன்மையுமே உண்டாகும்.

இவ்வகையில் சிறுமையினின்று நீங்கிய இன்சொற்கள் ஒருவனுக்கு இம்மை இன்பத்தோடு மறுமை இன்பத்தையும் ஒருங்கே தந்து விடுகின்றன.

பிறர் நம்மிடம் பேசிய இன்சொல்லால் நம் உள்ளம் களிப்படைகின்றதன்றோ? அப்படியிருக்க நாம் ஏன் பிறரிடம் கடுஞ்சொல்லைக் கூறுகிறோம். என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்? இதனால் என்னபயன்? அறப் பண்புள்ள இனிய சொற்கள் பல நம்மிடம் அமைந்து கிடக்க அவற்றை விடுத்து இன்னாத சொற்களைப் பேசுதல் நம் கையகத்தே இனிய கனி இருக்க; அதை உண்ணாமல் தீங்கு பயக்கும் நச்சுக் காயினைக் கவர்ந்துண்ணும் கதையைப் போன்றதே ஆகும்.

## 36. செய்ந் நன்றி அறிதல்

நன்றி என்பது நன்மை; செய்ந்நன்றி என்பது நமக்குச் செய்த நன்மை. அறிதலாவது உணர்தல். எனவே செய் நன்றியறிதலாவது பிறர் நமக்குச் செய்த உதவியை மறவாதிருத்தல் ஆகும்.

ஒருவர் நமக்கு உதவி செய்கிறார். அவரோ நமக்கு முன்னர்த் தெரியாதவர், அறிமுகமற்றவர். அவருக்கோ நாம் எந்த உதவியையும் முன்னே செய்ததில்லை. அவர் செய்த இந்த உதவிக்கு ஈடு இந்த உலகமா? அல்லது மறு உலகமா? அல்லது இரண்டுமா? இல்லை, இல்லை. இவைகளுக்கு மேம்பட்டது ஆகும் அவ்வுதவி. மற்றொன்று தக்க சமயத்தில் அதாவது நமக்கு ஆபத்துக் காலத்திலே பிறர் செய்த உதவி உலகை விட மிகப் பெரிது. பதில் உதவியை எவ்விதப் பயனையும் எதிர்பாராமல் செய்யும் உதவியின் நன்மையை ஆராய்ந்தாலோ அது கடலைக் காட்டிலும் மிகப் பெரியது.

இங்ஙனமாக உதவியின் தன்மையும், உயர்வும் மேம்பட்டிருப்பதனால்தான் ஒருவர் தினையளவு சிறிய உதவி செய்தாலும் பயன் உணர்ந்த மேலோர் அதைப் பனையளவு உயர்ந்ததாகக்கொள்வார்கள். மற்றும் செய்யப் பட்ட அந்த உதவிதான் எந்த அளவுகோலாலும் அளவிடக் கூடியதோ? எனின் இல்லை. உதவி பெற்றவர்கள் தன்மையை, குணத்தினை, தேவையை அளவாகக் கொண்டதே அது ஆகும் என்பதாம்.

எனவே, நாம் மாசற்றவர் நட்பை எங்ஙனம் மறத்தல் ஆகாதோ, அங்ஙனமே துன்பத்திலே ஆதரவு தந்து உதவி யவர்கள் நட்பை நாம் எக்காலும் துறத்தலும் கூடாது. ஏனெனில் தமமுடைய துன்பத்தை நீக்கினவர்களின் நட்பை நல்லவர்கள் ஏழெழு பிறவியிலும் மறக்க மாட்

டார்கள். ஆகையினால் ஒருவர் நமக்குச் செய்த நன்றியை நாம்மறந்து விடுதல் நல்லதன்று. மாறாகப் பிறர் நமக்குச் செய்ததீமையை மட்டும் அன்றே மறந்து விடுதல் நல்லது. அது எப்படி இயலும் எனில், ஒருவர் நமக்குக் கொலை செய்தலை ஒத்த தீமையைச் செய்த காலத்திலும் அவர் நமக்கு முன்னர் செய்த ஒரு சிறு நன்மையை நினைத்தால் போதும், தீமையெல்லாம் நம் உள்ளத்திலிருந்து மறைந்து விடும்.

இவ்வுலகிலே எவ்வகைப்பட்ட அறச் செயல்களை அழித்தவனுக்கும் ஏதாவது ஒருவகை உய்தி உண்டாகும். ஆனால் செய்த நன்றியை மறந்தவனுக்கு எவ்வகைக் கழுவாயும்—உய்தியும் இல்லவே இல்லை.

## 37. நடுவு நிலைமை

இல்லறத்தில் வாழ்பவன் நடு நிலைமை சிறிதும் தவறாமல் வாழ்வது மிகவும் இன்றியமையாதது. பகைவர், நட்பினர், அயலார் எனும் ஒவ்வொரு பகுதிதோறும் தன் அறமுறைமையோடு பொருந்தி வாழும் ஒழுக்கத்தைப் பெற்று, நடுவுநிலைமைப் பொருந்தி வாழ்வதே அறவாழ்வு ஆகும். அப்படிப்பட்ட நடுவு நிலைமையோடு வாழ்பவரின் செல்வந்தான் சிறிதும் அழிவில்லாமல் தன்னுடைய சந்ததிக்கும் உறுதுணையான நன்மை பயக்கும்படி நிலைத்து நிற்கும். ஆகையினால் எவ்வகைத் தீமையும் பயக்காமல் நன்மையே தருவதாயினும் நடு நிலை அல்லாத வழியில் வரும் செல்வத்தை நிச்சயமாக ஒருவன் கைவிட்டு விட வேண்டியதே நலம். எனவே அதை விட்டு விடுக.

ஒருவன் நடுவு நிலைமையுடையவனா அல்லது நடுவு நிலைமை தவறியவனா என்பதை நாம் அவனுடைய சந்ததியாலும், அவன் தான் விட்டுச் செல்லும் புகழ்

முதலிய பிறவற்றாலும் நன்கு அறிந்து கொள்ளலாம். ஆகவேதான் சான்றோர்கள் தங்கள் நெஞ்சில் நடுவு. நிலைமை தவறாமல் இருப்பர். ஏனெனில் தங்கள் வாழ்விலே உண்டாகும். கெடுதியோ வளமோ இயல் பானது என்பதை அவர்கள் நன்கு அறிவார்கள். அதுவே சான்றோர்க்கு அழகு.

நம் நெஞ்சம் சிற்சில நேரங்களில் தடுமாற்றம் அடையலாம். நடுவு நிலையில் இருந்து விலகினால் நாம் செல்வம் மிக்கவர்களாக மாறலாமே என்னும் சபலம் உண்டாகலாம் அப்படிப்பட்ட தடுமாற்றம் உள்ளத்திலே உண்டானால், ஆ! ஆ! இது நாம் கெடுவதற்கு உண்டாகும் அறிகுறிதான் என்பதை ஒருவன் உணர வேண்டும் அப்படி நடுவு நிலைமையோடு வாழ்வதால் ஒருவன் வறுமையடைந்தால் அதை ஒரு இழிவாகவோ, வறுமையாகவோ இவ்வுலகம் நிச்சயமாகக் கொள்ளாது.

இதற்கு உதாரணமாக நாம் துலாக்கோலைக் கொள்ள லாம். முதலில் அது தன்னைச் சமன் செய்கிறது. பின்னர் பொருளை எடை போட்டு அறிவிக்கின்கிறது. அதைப் போலத்தான் உள்ளத்தை முதலில் சமன் செய்து பிறகு பிறரின் தன்மைக்கேற்ப ஒரு பக்கம் சாய்தலில்லாமல் தீர்ப்பளிப்பதுதான் சான்றோர்க்கு அழகாகும். அந்தத் தீர்ப்புதான், தன் உள்ளம், சொல் எனும் இரண்டும் சாய்தல் இல்லாத தன்மையை உணர்த்தும்.

வாணிபம் செய்வதும் அப்படிப்பட்டதே. பிறர் பொருளையும் தம் பொருளைப் போல எண்ணிப் போற்றி நடுநிலைமையோடு செய்யும் வாணிகம்தான் நல்ல வணிகமுறை ஆகும்.

## 38. அடக்கமுடைமை

இல்லறத்திலே வாழும் ஒவ்வொரு வரும் மனம் மொழி மெய்களால் அடக்கத்தோடு வாழ்தல் இன்றியமையாதது. அவ்வடக்கம் தான் ஒருவனை மேன்மை மிக்க அருளில் அடையச் செய்யும், அவ்வடக்கம் இல்லாதவனோ, தீய இருள் போன்ற நெறியிலேதான் சென்றடைவன். இந்த அடக்கத்தைக் காட்டிலும் மேம்பட்ட செல்வம் உயிரினத் துக்கு இல்லையாதலால் அடக்கத்தை உறுதிப் பொருளாகக் கொண்டு காத்தலும், அறிய வேண்டியவற்றை அறிந்து நல்வழியிலே அடக்கத்தோடு வாழ்தலும் மிக மேலான தாகும். மேலும் அதுதான் நல்லவர்களால் அறியப்பட்டு மேன்மையை அடைவிக்கும்.

தன்னுடைய நிலையிலிருந்து மாறுபடாமல் எவன் ஒருவன் அடக்கத்தோடு வாழ்கிறானோ அவன் தோற்றம் மலையைக் காட்டிலும் மிக மேலானது. அது மட்டுமன்று. பணிவுள்ளவனாக வாழ்தல் யாவருக்குமே ஒப்ப நலனுடை யதே; ஆயினும், சிறப்பாக செல்வர்கட்கோ அப்பணிவு— அடக்கம்—தான் மற்றொரு கூட்டுச் செல்வமாகவும் விளங்கும்.

அடக்கத்துக்கு எடுத்துக் காட்டாக ஆமையைக் கூறலாம். தனக்குத் துன்பம் உறும் காலத்திலே ஆமை தன் தலையையும், கால்களையும் தன் ஓட்டுக்குள்ளே இழுத்துக் கொள்ளும். அதைப் போலத் தன் ஐந்து புலன் உணர்ச்சி களையும் ஒருவன் அடக்கி ஆள முடிந்தால் அவனுக்கு அது எப்பிறப்பிலும் தன்னைக் காக்கும் சிறப்பினையும் காவலை யும் உடையதாக அமையும்.

அடக்க வேண்டியவை பல ஆயினும், அவற்றுள் முக்கிய மாக அடக்க வேண்டியது நாக்கு ஒன்றே. அதைக் காவாவிடில் சொற் குற்றத்திற் சிக்கி, "இப்படிச் சொன்

னானே, இவ்வனம் கூறலாமா?'' என்று பிறர் கூறும்படி யானநிலையில் அது நம்மை வீழ்த்தித் துன்புறுத்தும். அடக்கமின்றி நம் நாக்கை நாம் விட்டுவிட்டால் தீச் சொற்களை உளற வேண்டியதாகி அதனுடைய பொருட்பயனால் நம் நலனெல்லாம் தேயும். தீச் சொற்களைக் கூறி அதனால் சுட்ட வடுவோ எக்காலும் மாறாது; மாறாகத் தீயினால் சுட்ட புண்ணோ ஆறிவிடும்.

எனவேதான், சினத்தை அடக்கி, கல்வி கற்று அடக்கமுடைய ஒருவனைச் சென்றடைவதற்கென அறக் கடவுள் கூட நல்ல வாய்ப்புள்ள நேரத்தை எதிர்பார்த்துக் கொண்டு இருக்கும். (தக்க தருணம் பார்த்து அறக் கடவுளும் அவனுக்குத் துணை நிற்கும்.)

## 39. ஒழுக்கமுடைமை

இந்த உலகத்திலே வாழும் மனிதர்களை மேன்மேலும் உயர்த்துவது அவர்கள் கடைப் பிடிக்கும் ஒழுக்கமே ஆகும். எனவே, அவ்வொழுக்கத்தை நம் உயிரைக் காட்டிலும் மேம்பட்டதாகப் போற்ற வேண்டியதல்லவா நம் கடமை. வருந்தியும் போற்றியும் அவ்வொழுக்கத்தையே நாம் காத்தல் வேண்டும். ஏனெனில் எவ்வகையில் ஆராய்ந்து தெளிந்தாலும் நம் வாழ்வின் துணை அவ்வொழுக்கம் மட்டுமே ஆம்.

மற்றும் இவ்வுலகத்தில் ஒழுக்கத்தோடு வாழ்பவனே உயர் குடியில் பிறந்தவனாகக் கருதப்படுவான். ஒழுக்கத்திலிருந்து தவறியவன் இழிந்தவனே. அதோடு வேதப் பொருளை—கற்ற கல்வியை—மறந்து விட்டாலும் மறந்ததை ஓதிக் கொள்ளலாம்; கற்றுக் கொள்ளலாம். ஆனால் உயர் குடியில் பிறந்தவன் கூட ஒழுக்கம் இழந்தால் —தவறினால்—இழந்தது இழந்ததே. பின் அவன்

இழிந்தவன் அல்லாமல் வேறு யார்? குலத்தால் குடிப்பிறப்பால் உயர்ந்தவர் யாரும் இலர். ஒழுக்கத்தால் உயர்ந்தவரே உயர்ந்தவர் ஆவர்.

ஒருவனிடம் பொறாமையிருந்தால் அவனிடம் நிச்சயமாகச் செல்வம் பொருந்தாது. அதைப் போலவே ஒழுக்கம் இல்லாதவன் வாழ்வில் உயர்வே இல்லை, என்பதை உணர்ந்து உள்ளத்திண்மையுடைய சான்றோர் ஒழுக்கத்திலிருந்து தவறவே மாட்டார்கள். அதன் மூலம் மேன்மையடைவார்கள். ஒரு வேளை அவர்கள் ஒழுக்கத்திலிருந்து தவறினாலோ அடையத் தகாத பெரும் பழியை அவர்கள் நிச்சயமாக அடைவர்கள்.

இதிலிருந்து நாம் அறிவது யாதெனில் நல்லொழுக்கம் நன்மையே தருகின்ற அறத்திற்குக் காரணமாக விளங்கும். ஆனால் தீயொழுக்கமோ துன்பத்தை மட்டுமே தரும். அதுவுமன்றித் தீய சொற்களைத் தவறியும் தம் வாயால் சொல்வது ஒழுக்கம் உடையவர்களுக்கு ஒருக்காலும் பொருந்தாத ஒன்றாகும்.

நல்ல நூல் பல கற்றவரே ஆயினும் உலகத்தோடு பொருந்திய ஒழுக்கத்தைக் கல்லாதவர் அறிவில்லாதவரே ஆவர்.

## 40. பிறனில் விழையாமை

பிறன் உரிமையாகி விளங்கும் மாற்றான் மனைவியை விரும்புவது பெரும் பாவம் ஆகும். இந்தப் பேதைமை அறத்தையும் பொருளையும் ஆராய்ந்து கண்டவர்களிடம் அமைவதில்லை. ஏனெனில் அறத்தை விட்டுப் பிறழிய நெறியிலே செல்லும் அனைவரைக் காட்டிலும் பிறன் மனைவியைக் காதலித்துப் பிறன் வாயிலில் அவளுக்காக நிற்பவனைப் போன்ற கடையவன் வேறு எவனும் இல்லை.

நம்மை ஐயப்படாமல் தெளிந்துள்ள ஒருவன் மனைவியைக் காதலித்து அத்தீச் செயலில் ஒழுகுபவன் செத்தவனே பிணமே—ஆவன். தினையளவும் ஆராயாமல் செய்த அத்தீயச் செயலால் அவன் எவ்வளவு பெருமை உடையவன். ஆயினும் அப் பெருமையால் ஒரு பயனும் இல்லாதாகிவிடும். (அச் செயலால் அவன் பெருமையனைத்தும் அழிந்தே விடும்)

எளிய செயலே இச்செயல் என எண்ணிப் பிறன் மனைவியை அடைபவன் அழியாமல் நிற்கும் பழியை மட்டு மன்று, பகையையும் பாவத்தையும் அச்சத்தையும் அடைபவன் ஆகிறான். நிற்க.

அறத்தின் இயல்பிலே நின்று இல்வாழ்க்கை நடத்தும் ஒருவன், பிறனுக்கு உரியவளின் பெண்மையை ஒருக்காலும் விரும்ப மாட்டான். இந்தப் பிறன்மனை நோக்காத நிகரற்ற ஆண்மைக்குணம் இருக்கிறதே அது அறன்மட்டு மன்று, நிறைவு பெற்ற ஒழுக்கமும் ஆகும்.

மற்றும் இவ்வுலகில் நன்மைக்கு உரியவர் யார் என்று ஆராய்ந்து பார்த்தால், பிறர்க்கு உரியவள் தோளைச் சேராதவரே ஆவர். ஒருவன் அறநெறியிலே நிற்காமல் அறச் செயலற்ற பாவங்களைச் செய்தாலும், பிறனுக்கு உரிய வளின் பெண்மையை விரும்பாவிருப்பதே பேரறம் என்பதை உணர்தல் வேண்டும். அதுவே இவ்வாழ்க்கையில் நன்மை பயப்பதாகும்.

## 41. பொறையுடைமை

காரணத்தோடாவது காரணமின்றியாவது, நமக்குப் பிறர் துன்பம் செய்த காலத்தில் நாம் பொறுமையோடு இருத்தல் மிகவும் நன்மையைத் தரும். நம்மைத் தாங்கி நிற்கிறது இந்த நிலம். இதை நாம் குத்தியும் தோண்டியும் பல ஊறுகள் செய்த போதிலும், இந்நிலம் நம்மைத் தாங்கி

நிற்கிறது அன்றோ? அதைப்போலவே நம்மை இகழ்பவரை யும் நாம் பொறுத்தலே தலையானதாகும். அதுமட்டுமா, எக்காலத்திலும் பிறர் செய்த தீமையைப் பொறுத்தலே நல்லது. மற்று அத்தீமையை மறந்து விடுதல் அதைக் காட்டிலும் மிகமிக நல்லது.

பொறுமையோடு இருப்பது கோழைத்தனம் அன்று. அதுவே வீரம் மிக்க செயலாகும். வறுமையுள்ளே மிக்க வறுமை என்பது விருந்தினரை ஏற்றுக் கொள்ளாமையே. அதைப் போலவே வீரத்துள் மிக வீரமானது அறிவிலார் நமக்குச் செய்யும் பிழையை மன்னித்து விடுதலேயாகும். இந்தப் பொறுமைக் குணத்தை நன்கு காத்து வந்தால்தான் தன்னிடம் எக்காலத்தும் நிறைவு என்று சொல்லப்படும் குண நலனாம் செல்வத்தை ஒருவன் பெற்று வாழ முடியும்.

அதற்கு மாறாகத் தன்னிடம் வரம்பு மீறித் தீங்கிழைத்த வர்களைத் தண்டிப்பதென்பதை ஒருவன் கைக் கொள் வானாகில் அது அவனுக்கு ஒரு நாளைய இன்பந்தான். ஆனால் அதற்கு மாறாக அத்தீங்கினைப் பொறுத்துப் பொறுமை என்பதனைக் கடைப்பிடித்து வாழ்பவனுக்குத் தான் அழியும் காலம் வரையில், ஏன்தான் அழிந்த பின்னும், புகழ் ஓங்கும் என்பதை அறிதல் வேண்டும். அப்படிப்பட்ட வர்களையே உலகத்தார் தன் உள்ளத்திலே பொன்போல் போற்றித் தம் இலக்கு இவரே எனக் கொண்டு வாழ்வார் என்க.

தம்பால் தகாத செயல்களைச் செய்தவர்களைக்கூட அறமல்லாத முறையால் தண்டிக்காமல் தாம் தம் தகுதியால் வெல்லுதல் வேண்டும். ஏனெனில் முற்றும் துறந்த துறவி களைக் காட்டிலும், பிறர் வாய்க் கடுஞ் சொற்களைப் பொறுத்தவரே மேம்பட்டவர். உண்ணாநோன்பு நோற்கும் துறவு நெறிப்பட்டவர்களும், அப்படிப்பட்ட பொறுமை சாலிகளுக்குக் கீழ்ப்பட்டவர்களே ஆவர்.

# 42. அழுக்காறாமை

அழுக்காறு என்பது பொறாமை. பிறர் நல்வாழ்வு கண்டு தம் மனத்துள்ளே உண்டாகும் கோணலான கீழ்மை உணர்வாகும் இது. நெஞ்சின்கண் இந்தக் கீழ்மை உணர் வாம் அழுக்காறு இல்லாமல் காப்பதையே தனக்குரிய ஒழுக்கமாக ஒருவன் கொள்ள வேண்டும். ஏனெனில் யாரி டத்தும் அழுக்காறு இல்லாத தன்மையை ஒருவன் பெற்று விடுவானானால் அதைப் போல மேலான செல்வமே ஒரு வனுக்கு வேறொன்றுமில்லை. அப்படியில்லாமல் பிறர் ஆக்கத்தைக் கண்டு ஒருவன் பொறாமை கொள்வானாகில் அவன் தன்னிடம், அறமாகிய பெருஞ்செல்வமே தேவை யற்றது என்று, உதறித் தள்ளி வாழும் உலுத்தனே ஆவான்.

நல்லோர் பொறாமையினால் உந்தப்பட்டு அறனல்லாத செயல்களைச் செய்ய மாட்டார். ஏனெனில் அத்தீநெறி யினால் தமக்கு வரும் கேடுகளை அவர் அறிவர். அது மட்டுமன்று அழுக்காறு உடையவர்களுக்கு வேறு பகையும் தேவையோ? அவர்களின் பொறாமைக் குணமே போதும். பிற பகைவர் தீங்கு செய்யத் தவறினாலும், அவர் களது பொறாமையே அவர்களைக் கேட்டினுள் ஆழ்த்தி விடும்.

பிறனுக்கு உதவுகிறான் ஒருவன். வாரி வழங்குகிறான் ஒரு நல்லவன். அந்த ஈகையைப் பொறாமையால் தடுக் கிறான் மற்றொருவன். இப்படிப்பட்ட செயலால் தடுத்தவன் மட்டுமல்லாமல் அவன் சுற்றமும் உண்ண உணவுக்கும், உடுக்க உடைக்கும் வழி இன்றி அல்லல்பட வேண்டியதே. அப்படிப்பட்டவனுக்குத் திருமகளும் தன் மூத்தவளாகிய மூதேவியைக் காட்டி, தரித்திரத்தை ஊட்டித் தான், அவனிடமிருந்து மறைந்து விடுவாள்.

இந்த அழுக்காறு (பொறாமை) என்பதோ ஒரு பாவி ஆகும். இந்தப் பாவியின் குணம் நற்குணங்களை அழிப்பது மட்டுமன்று, தீயதாகிய கொடுமையிலே கொண்டு சேர்ப்பதும் ஆகும். இந்தப் பொறாமைக்காரன் ஒருவேளை செல்வந்தனாகவும், பொறாமையற்றவன் ஏழையாகவும் வாழ்கிறான் என்றால், ஒருக்கால் அது பழவினையோ என்று ஆராயப்படவேண்டியதே. அப்படியிருப்பின் அது நம்பத் தகுந்ததன்று; குதிரைக் கொம்பு போன்றதே.

எனவே பொறாமையால் மேம்பாடு அடைந்தவரும் இல்லை. பொறாமையின்றிச் செம்மையாய் வாழ்வதால் வறுமையுற்றுக் கீழ்ப்பட்டுத் தாழ்ந்தோரும் இல்லை.

## 43. வெஃகாமை

வெஃகல் என்பது பிறர் பொருளைக் கவர நினைத்தல். உள்ளத்தே பிறர் பொருளைக் கண்டு பொறாமைப்பட்ட பின்னர், அதைக் கவர நினைத்தல் பலர்க்கு இயல்பு. தன் உள்ளம் நடுநிலையில் இருந்து விலகிப் பிறர் பொருளைக் கவர நினைத்தால் அப்படிப்பட்டவனுடைய குடி கெடுவதோடன்றிக் குற்றங்கள் பலவும் அவனுக்கு உண்டாகும். எனவே நடுவு நிலைமையிலிருந்து விலகும் தவறுக்கு நாணும் தன்மையுடையவர்கள், பின்னர்த் தங்களுக்கு உண்டாகும் செல்வ வளத்தை நினைத்து (கருதி) நிச்சயமாகப் பிறர் பொருளைக் கவர நினைக்க மாட்டார்கள்.

அறங்கிடந்த நெஞ்சம் உள்ளவர்கள் நிலையற்ற இவ்வுலக இன்பத்துக்காகவோ தம்மிடம் இவை இல்லையே என்னும் ஏக்கத்தாலோ அறனற்ற இத்தீச்செயலை நினைக்க மாட்டர்கள். ஏனென்றால் அவர்கள் தம் புலன்களை வென்றவர்கள் — குற்றமற்ற தன்மையுடையவர்கள் ஆகலின் என்க. கூர்மையானதாய்ப் பரப்பு மிக்கதாய் உள்ள அறிவினை உடையவர்களும் பிறர் பொருளை இச்சித்து

அறிவோடு படாத செயல்களைச் செய்வார்களாயின் அந்த நுட்பமான பரந்த அறிவால் வரும் பயன் என்ன? மற்றும் அருளை விரும்பி இல்லறமாம் நல்வழியிலே செல்ல விரும்புகின்றவர்களும் பிறர் பொருள் அவாவி (கவர நினைத்து) அச்செயலை விரும்பினால் அவர்கள் நிச்சயமாக அழிய வேண்டியவர்களே.

பிறரிடமிருந்து கவரப்பட்ட பொருள்களை ஒருவன் துய்க்கும் காலத்திலே அதன் பயன்தான் நற்பயன் ஆவதில்லை. ஆகவே, அந்த நினைவையே நீக்கி விடுதல் நன்று. மற்றும் நம் கைப்பொருள் சுருங்காமல் பல்கிப்பெருக வேண்டுமானால் பிறர் பொருளை நாம் இச்சிக்காமலிருப்பதைக் கடைப் பிடித்தலே நலம்.

எனவே அறத்தினை நன்கு ஆராய்ந்து பிறர் பொருளை விரும்பாதிருக்கும்—கவர நினைக்காமல் இருக்கும்—எண்ணத்தை மேற்கொண்டால் ஒருவனை, அவன் திறனை அறிந்து திருமகளும் அடைவாள். அப்படியில்லாமல் பின் விளைவை ஆராயாமல் பிறர் பொருளை ஒருவன் இச்சித்தால், அது அவனுக்கு அழிவை உண்டாக்கும். எனவே வேண்டாமை என்னும் பெருமிதமே யாவருக்கும் தம் வாழ்க்கையில் வெற்றியை உண்டாக்கும் என்க.

## 44. புறங் கூறாமை

புறங் கூறுதல் என்பது ஒருவரின் புறத்தே அவர்களைக் காணாத காலத்தில் இகழ்ந்து பேசுதலாம். சொற் குற்றத்தில் ஒன்றான இதை நாம் நிச்சயமாக அகற்றிவிடவேண்டும். அறநெறிக்கான சொற்களை ஒருவன் சொல்லத் தவறினாலும் அதனால் பெருங்குற்றம் யாதுமில்லை. ஆனால் புறங் கூறினால் வரும் குற்றம் மிகப் பெரியதாகலின் புறங்கூறா திருத்தலே இனியதாகும். அங்ஙனமே அறமற்ற செயல்களைச் செய்தலைக் காட்டிலும் ஒருவனைக் காணாத வழி

அவன் புறத்தே அவனைத் தூற்றி அவனைத் தான் நேரே கண்ட இடத்து முன் சொன்னவற்றுக்கு மாறாகப் பொய்த் துப் பேசிச் சிரித்து மகிழ்தல் மிகத் தீய செயலே ஆகும்.

ஆராய்ந்து பார்க்கும்போது புறங்கூறி வாழ்தல் பொய் வாழ்க்கையே. அதைவிடச் சாவதே மேல். அச்சாதலாவது அப்படிப்பட்டவனுக்கு அறநூல் பயனைத் தரும். பிறர் முகத்தின் முன்னர் நின்று கருணையின்றிக் கடுஞ்சொல் சொல்வதைக் காட்டிலும் பின்னே நின்று பின்விளையும் குற்றத்தினை ஆராய்ந்து புறம் பேசுதலை நீக்குவது இன்றி யமையாதது.

ஒருவன் புறம் பேசுதலாம் அற்பத்தனம் உடையவன் என்றால் அவன் அறஞ்சொல்லும் உள்ளம் உடையவனல்லன் என்பதை நாம் அறிவதோடு அத்தன்மையை உடையவ னுடைய குற்றத்தையும் அவனைப் போலவே பிறரும் அவனுக்குப் பின்னால் நின்று புறங்கூறுவர் என்பதையும் நாம் கருத வேண்டும்.

இவ்வகையான புறங்கூறுபவர்கள் இனிய சொற்களைப் பேசி நட்பினரைக் கூடி மகிழாதவர்கள், புறங்கூறுதலால் தம் நட்பினரையும் பிரித்து விடுவார்கள். தம் நெருங்கிய சுற்றம், நட்பினர்கள் குற்றத்தையும் தூற்றும் தன்மை வாய்ந்த இவர்கள் தம் விரோதிகளைப்பற்றி என்னதான் சொல்ல மாட்டார்கள்.

இந்த நிலவுலகம் இப்படிப்பட்ட புறங்கூறும் அற்பர் களையும் தாங்கிக் கொண்டிருக்கிறது என்றால் அது அறத்தை நோக்கியே ஆகும் என்று உணர வேண்டும். இக் குற்றத்தை நாம் நம்மிடமிருந்து நீக்க வேண்டுமானால், பிறர் குற்றத்தைக் காண்பதைப் போலவே நம் குற்றத்தை யும் காண வேண்டும். அவ்வாறு செய்தால் அதன் பிறகு மக்களினத்திற்குத் தீங்கே இல்லை.

## 45. வாய்மை

பயனில சொல்லாமை கடுஞ்சொல் கூறாமை, புறங் கூறாமை ஆகிய சொற் குற்றங்களைப் போல் அல்லாமல், அவைகளைக் காட்டிலும் தீமை பயப்பதால் அவைகளுக்கு மட்டுமே அல்லாமல் பிற எல்லா மறச் செயல்களுக்கும் (பாவங்கட்கும்) வேர்க்காரணமாக விளங்குவதுமாகிய பொய்யைக் கூறாதிருத்தலே வாய்மை ஆகும். எவ்வகை யிலும் யார்க்கும் தீமை உண்டாக்காத சொற்களைச் சொல்லுவதே வாய்மை எனப்படும். ஒருக்கால் ஒருவன் சொன்ன ஒரு பொய்ச் சொல் குற்றமற்ற நன்மையே உண்டாக்குமானால் அந்தப் பொய்யேகூட வாய்மையோடு வைத்து மதிக்கப்படும். தன் உள்ளத்தில் உண்மை என்று அறிந்ததைப் பொய்யாக்கிப் பொய் கூறா தொழிதல் வேண்டும். மாறாகப் பொய் கூறினாலோ தன் நெஞ்சே தன்னைச் சுட்டுவிடும்.

வாயோடு பொருந்தி நிற்கும்போது வாய்மை எனப் படும். அதுவே உள்ளத்தோடு பொருந்தி வெளிப்படும் போது உண்மை எனும் பெயரும் பெறும். அத்தகைய உண்மையை உள்ளம் பொருந்துமாறு பொய்யாத மொழி யுடன் ஒழுகுபவன் உலகத்தார் உள்ளத்திலெல்லாம் இடம் பெறுவான். இத்தகைய மனத்தோடு பொருந்திய உண்மை யாளன் தவமும் தானமும் செய்பவர்களைக் காட்டிலும் மிகச் சிறந்தவன்.

அது மட்டுமா! பொய்யாமையைக் காட்டிலும் ஒருவனுக்குப் புகழ் தருவது வேறு ஒன்றும் இல்லை. ஏனெனில் அது ஒன்றே வேறு எவ்வகை வருத்தமுமின்றி எல்லா நல்லறங்களையும் அவனுக்கு எய்துவிக்கும்.

இங்ஙனமாக உயர் நெறிக்கண் உய்த்துப் புகழ் சேர்த்த லோடு பிற எல்லா நல்லறங்களையும் அடைவிக்கும் பொய் யாமையாகிய அறத்தைக் கடைப்பிடிப்பவன் வேறு அறச்

செயல்கள் செய்யவேண்டுவதில்லை. பிற அறச் செயல்கள் தாமே வந்து அமையும். நாம் நீரினால் மட்டுமே நம் உடலைத் தூய்மையாக வைத்திருக்கிறோம். அதைப் போலவே வாய்மையால் மட்டுமே நம் உள்ளத்தைத் தூய் மையாக நாம் வைத்திருக்க முடியும்.

உலகத்தில் உள்ள புற இருளை நீக்கும் விளக்கு களெல்லாம் விளக்காகுமோ? அவை விளக்குகளே அல்ல. நம்முடைய உள்ளத்தின் இருளை நீக்குகின்ற பொய்யாமை ஆகிய விளக்கே விளக்காகும். அதுவே சான்றோர்க்கு விளக்கு ஆகும்.

எனவே, வாய்மையைக் காட்டிலும் எவ்வகையிலும் மிக்கனவாகப் பிற அறம் ஏதும் இல்லை. இது யாம் மெய்யாகக் கண்ட முடிவுகள், நூல்கள் இவைகளின் முடிந்த முடிபாகும்.

## 46. பயனில சொல்லாமை

சொற்கள் குற்றம் வாய்ந்தனவாகக் கருதப்படுவன வற்றுள் பயனில்லாத சொற்களைப் பேசுதலும் ஒன்றாகும். இந்தப் பயனிலாச் சொற்கள் பலராலும் வெறுக்கப்படுவ தால், இதைப் பேசுபவனும் எல்லாராலும் எள்ளி நகை யாடப்படுவான்(கேலி செய்யப்படுவான்). ஆகையினால் நம் நண்பர்களிடம் நாம் தவறி நன்மையற்ற தீய செயல்களைச் செய்தால் அது எவ்வளவு தீமையைப் பயக்குமோ, அதைக் காட்டிலும் பல்லோர் முன்னிலையில் பயனற்ற சொற் களைப் பேசுதலும் மிகவும் தீமையையே பயக்கும்.

பயனில்லாத சொற்களை மிகவும் விரிவாகப் பேசும் ஒருவன் நன்மையற்றவன் அதாவது நற்குண நல்லொழுக்கம் இல்லாதவன். அந்தப் பயனற்ற சொற்களைப் பலர் முன்னிலையில் பேசுங் காலத்தில், அச்சொற்கள் தாம்

அப்படிப் பேசுபவனை நன்மையிலிருந்து மட்டுமல்ல அறத்திலிருந்தும் விலக்கிவிடும். ஒருவேளை நல்ல பண்பாளர்கள் கூடத் தம்மை மறந்து பயனற்ற சொற்களைச் சொல்வார்களானால் அவர்கள் தகுதியாம் சான்றாண்மையும் சிறப்பும் அவர்களைவிட்டு அக்கணமே நீங்கிவிடும்.

எனவே இந்தப் பயனற்ற சொற்களைப் பேசும் ஒருவனை மக்கள் கூட்டத்திலிருந்து விலக்கி அவனை மக்களுள் பதர் (உதவாதவன்) என்னும் வரிசையில் வைத்து எண்ணுவர்.

இது பற்றியே நல்ல உயர்ந்த குணம் அமைந்தவர்கள் அறமற்ற சொற்களை ஒருக்கால் பேசினாலும் பயனற்ற சொற்களைத் தவறியும் சொல்ல மாட்டார்கள். தம் சொற்களால் நல்ல பயன் விளைதல் வேண்டும் என்பதே அறிவுடையோர் கொள்கை. ஆகையினால் பயனற்ற சொற்களைச் சொல்வார்களா, என்ன? தங்களிடம் மயக்கம் ஒரு சிறிதும் இல்லாமல் ஒதுக்கி, மாசற்ற தூய உள்ளம் உடையவர்களிடம் பொருளற்ற புன்சொல் கூறும் வழக்கம் சிறிதேனும் உண்டாகுமா என்ன?

எனவே நம் வாழ்வில் எதைப் பற்றி நாம் பேசினாலும் பயனற்ற சொற்களை அறவே விலக்கிவிட வேண்டும். நல்ல பயனுள்ளவற்றையே பேச வேண்டும் என்க.

## 47. தீவினையச்சம்

இது வரையில் சொற்களால் வரும் குற்றங்களை நீக்குவதைப் பற்றிக் கண்டோம். இனி, செயலால் விளையும் குற்றங்களையும் அதனால் வரும் தீமைகளையும் காண்போம். முதற்கண் தீய செயல்களுக்கு அஞ்சுவது என்பதைப் பற்றி ஆராய்வோம்.

இத்தீய செயலைப் பிறருக்குச் செய்ய வேண்டும் என்னும் மன மயக்கத்தினைத் தீவினையுடையவர்கள் அஞ்ச மாட்டார்கள். ஆனால் உயர்ந்த உள்ளமுடைய மேலோர் கள் அஞ்சுவார்கள். ஏனெனில் தீய செயல்கள் தீய பயனையே தந்துவிடும். ஆதலால் நெருப்பைக் காட்டிலும் நாம் அவைகட்கு அதிகமாக அஞ்சித் தீய செயல்களை நம்மிடமிருந்து விலக்கிவிட வேண்டும்.

நாம், நம் பகைவரிடத்தும் தீச் செயல்களைச் செய்யா மல் ஒழுகுதல் வேண்டும். அதுவே நமக்கு உறுதியைப் பயக்கும் அறிவு களிலெல்லாம் உயர்ந்த அறிவாகும். ஆகை யினால் நாம் மறந்தும் மற்றவர்களுக்குக் கேடு பயக்கும் தீச் செயலைச் செய்யவும் எண்ணவும் கூடாது. மாறாக அப்படி ஒருவன் பிறர்க்குத் தீங்கு செய்ய நினைத்தால் அவன் தானே கேடு அடையத்தக்க தீவினையை அறம் அவனிடம் செய்து விட்டுப் பின்னர் அவனை விட்டு நீங்கியே விடும்.

தன்னிடம் பொருள் இல்லாத காரணத்தால் பிறருக்கு ஒருவன் தீவினையைச் செய்தானாகில் அவன் மேலும் மேலும் வறிஞனாவானே ஒழியச் செல்வந்தனாக மாட்டான். அதோடு எவ்விதக் கேடும் தன்னை வந்து அடையக் கூடாது என்று நினைப்பவன் பிறருக்குத் தீமை செய்யாதிருத்தல் வேண்டும். ஏனெனில் வேறு எப்பகை உற்றவரும் அப்பகையிலிருந்து யாதானும் ஒரு வகையால் தப்பி ஈடேறலாம். ஆனால் தீவினையால் பகை உற்றவர் ஒருக்காலும் ஈடேறி உய்ய முடியாது. ஏனெனில் பிறருக்குச் செய்த தீவினை செய்தவனையே நிழல் போலத் தொடர்ந்து சென்று அவனை வீழ்த்திவிடும்.

ஆகையினால் ஒருவன் தன் உயிரை மேலாக மதித்துத் தன்னைக் காத்துக் கொள்ள விரும்பினால் அவன் எவ்வளவு சிறிய தீவினையாயினும் பிறரிடம் செய்யாதொழிதல் வேண்டும். தன் உள்ளம் அறத்திற்கு மாறான தீய வழியிலே ஓடிப் பிறர்க்குத் தீவினை செய்ய நினைத்தால் தான் மிகக்

கேடுற்று அழியவே இவ்வெண்ணம் அவனிடம் தோன்றிற்று என்பதைத் தானறிதல் வேண்டும்.

## 48. கொல்லாமை

அறங்களுள் மிகச் சிறந்ததாய் இல்லறத்தான் கைக்கொள்ளும் தலைசிறந்த ஒழுக்கமாய் விளங்குவது கொல்லாமையே ஆகும். எனவேதான் அறவினை என்பது கொல்லாமை ஒன்றே என்றும், மற்றுக் கொல்வதோ அறம் அல்லாத பிற அதர்ம வினைப் பயன்களை எல்லாம் தரும் என்றும் அறுதியிட்டுச் சொல்லப்படும். அறநூல் (தர்ம சாத்திரம்) வகுத்த அறங்கள் யாவற்றுள்ளும் தலைசிறந்ததாவது: தம் ஊதியத்தைப் பல உயிர்களுக்குப் பகிர்ந்து அளித்து, பின் தான் உண்டு, பிற உயிர்களையும் தம்முயிர் போல் நினைத்துப் பாதுகாத்தலே ஆகும். எனவே கொல்லாமையே மிகச் சிறந்த அறம், அறங்களுள் மேம்பட்ட அறம். கொல்லாமை ஒன்றே நல்ல அறம். அதற்கு அடுத்து நிற்பது பொய்யாமை எனும் அறமே ஆகும்.

பிற உயிர்களைக் கொல்லாமையாகிய அறத்தைக் காக்கும் நெறியே நல்ல நெறியாகும். ஆகையினால் கொலைப் பழிக்கு அஞ்சிக் கொல்லாமையைத் தன் கொள்கையாகக் கொள்பவன் எவனோ, அவனே இல்லற நிலைக்கு அஞ்சி, இவ்வுலகைத் துறந்துவிட்ட துறவிகளைக் காட்டிலும் சிறந்தவனாகின்றான்.

கொல்லாமையாகிய அறத்தை மேற்கொண்டு ஒழுகுபவன் வாழ்நாளைக் கவர்ந்து கொள்ளக் கூற்றமும் அக் அகாலத்திலே அவனிடம் சென்றடையாது. அதாவது அவன் அற்பாயுசாக இறந்துவிட மாட்டான். எனவே தன் உயிர் போவதாயினும், தான் பிற உயிர்களின் அருமையான—

இனிமையான—உயிரைத் தன் உயிர் காத்தற் பொருட்டுக் கூடக் கவராமையைக் கடைப்பிடித்தல் வேண்டும்.

இவ்வுலகில் பலவித நற்செயல்களாகிய யாகம், தவம், தானம் முதலிய நன்றாகிய அற மார்க்கங்களால் உயிருக்கு வரும் ஊதியம் பெரியதாகும் என்று பிறரால் மதிக்கப்படு மாயினும், பிற உயிர்களைக் கொன்று அதனால் செய்யப் படும் யாகம் முதலிய பலவற்றால் வரும் பயனைச் சான்றோர்கள் கீழ்ப்பட்டதாகவே மதிப்பார்கள். எனவே கொல்லாமையால் வரும் பயனே பெரும் பயன் ஆகும்.

கொலை செய்யும் தொழிலை உடையவர்கள் யாவரும் புலைத் தொழில் உடையவர்களே. அவர்கள் தம் உடலோ நோக்கக் கூசும் நோயோடு குற்றம் மிக்குள்ளதாகவும் வாழ்க்கையே செல்லாக் காசைப் போலத் தீயதாகவும் அமையும் என்பதாம்.

## 49. ஒப்புரவறிதல்

உயிர் வாழும் மக்களினம் விலங்கினத்திலிருந்து வேறுபட்டுக் காணப்படுகிறது. மக்களினம் மட்டுமே கருணையின் அடிப்படையில் பிறக்கும் கசிவோடு சமுதாய ஒழுங்கினை அறிந்து வாழ்க்கை நடத்துவது. மழை நாம் உயிர் வாழப் பெய்கிறது. ஆனால் அம்மழை நம்மிடமிருந்து எந்தப் பதில் உதவியையும் எதிர்பார்ப்பது இல்லை. அதைப் போலவே, பலனை எதிர்பார்க்காமல் தன் முயற்சியால் ஈட்டிய பொருளை எல்லாம் தக்கவர்களுக்கு உபகாரம் செய்யவே பயன்படுத்த வேண்டும். ஏனெனில் மேற்கூறிய ஒப்புரவைப் போன்ற நல்லவனாகிய பிற அறம் இவ்வுல கிலோ அவ்வுலகிலோ வேறொன்றும் இல்லை. எனவே, இவ்வுலக நடையை ஒத்ததாம் ஒப்புரவினை நன்கு அறிந்தவனே உயர் வாழ்பவனாகக் கொள்ளப்படுவான்.

மற்றைய பிறரோ செத்தாரோடு வைத்தே எண்ணப் படுவார்கள்.

உலகமே விரும்பும் தன்மை வாய்ந்த பெரிய அறிவாளன் பெற்ற பெருஞ்செல்வம்தான் ஊரார் உண்ணும் பொதுக் குளம் நிறைந்ததைப் போல் விளங்கி யாவர்க்கும் இறைக்க இறைக்கச் சுரந்து விளங்கும் அந்த நீர்க் கேணி போல உதவி நிற்கும்.

மற்றும் அச்செல்வம்தான் அறச்சிந்தை மிக்க ஒப்புர வாளனிடம் நிறைந்திருந்தாலோ ஊர் நடுவே பழமரம் பழுத்துக் குலுங்குவதைப் போல விளங்கி உபயோகப்படும். பழுமரத்திலிருந்து பழங்களை எல்லாம் மாந்தர் கொய்து மொட்டையாக்கி விட்டபோதிலும் அதற்காக அது வருந் தாமல், அடுத்தும் அது பூத்துக் காய்த்துப் பழுத்து அம்மாந் தர்க்கு உதவும் அல்லவா? அதைப் போலவே ஒப்புரவாளன் பெற்ற பெருஞ்செல்வம் பல்லார் பயன் துய்க்க, தான் வருந்தி வாழும் பழுத்துக் குலுங்கும் மரத்தைப் போன்ற தாகும். மற்று அச்செல்வ வளம் பெருந்தகையானிடம் பொருந்தி இருப்பின், அப்பெருந்தகைமையாளன் தன் உடல், பொருள், ஆவி அனைத்தையும் வழங்கி, தன்னுடைய குறையைச் சிறிதும் நோக்காமல் பல்லோர் வருத்தத்தைத் தீர்க்கும் மருந்து மரத்தைப் போல் விளங்கிப் பலருக்கும் பயன்படுவான்.

தாம் பிறர்க்கு உபகாரியாம் தன்மையினால், செல்வ வளம் சுருங்கிய காலத்திலும் ஒப்புரவாளர்கள், தம் கடமை உணர்ந்து பிறர்க்கு உதவி செய்யப் பின் வாங்க மாட்டார்கள். ஒப்புரவாகிய இத்தன்மையினால் ஒருவன் ஏழையாகி விடுவானா! இல்லை. ஏழையாக மாட்டான். மாறாக ஆம் எனில் எப்போது? தனக்காக அல்லாமல் பிறர்க்குத் தன்னால் உதவி செய்ய முடியாத நிலை அவன் அடையும் போதுதான் அவன் ஏழையேயன்றி மற்றக் காலங்களில் அன்று. அப்படிப்பட்ட கேடு ஒருவனுக்குத் தன்

ஒப்புரவினால் உண்டாகுமானால் ஒருவன் தன்னையே விற்றுக் கொண்டாகிலும் அந்தக் கேட்டினை ஏற்றுக் கொள்ள வேண்டியவனே.

## 50. ஈகை

உலக நடையறிந்து உபசரிக்கும் தன்மையிலே உன்னத நிலையை அடைவது ஈகையே. இந்த ஈகைதான், வாழ்விலே நொந்து கெட்டிருக்கும் வறிஞர்க்கும் ஊனமுற்றிருப்பவர் கட்கும் உதவும் காலத்தில்தான் அது ஈகை எனும் அப்பெயர் பெறும். மற்றையோர்க்குக் கொடுக்கும் பொருள் உதவி களும் பிற உதவிகளும் திருப்பிப் பெறும் கடன் போன்றதே. பிற்காலத்தில் நாம் துன்பப்படும் காலத்தில் அவர்கள் நமக்கு உதவமாட்டார்களா? என்றும் பதில் உதவியை எதிர்பார்த் துச் செய்யும் கடனே அந்த உதவியாகும். அஃது ஈகையே அன்று.

பிறரிடம் சென்று இரந்து வாழ்வதுதான் சிறந்த வழி. நல்லாறு—என்பதாக ஒன்றிருக்குமானாலும் நாம் பிறரிடம் ஒன்றைக் கை நீட்டிப் பெற்றுக் கொள்ளுதல் தீதே ஆகும். மாறாக ஈகையினால் மேல் உலகத்திலே நமக்கு இடமில்லை என்று சொல்லப்படுமானாலும் பிறருக்கு ஈதலே நல்ல தாகும். இவ்வகையிலே இல்லை என்னும் இழிவான சொல்லை இருப்பவனிடம் சொல்லாமல், பிறருக்கு ஈயும் தன்மையுடையவனாதல் நல்ல குடியில் பிறந்தவனிடத்திலே தான் அமையும். ஆதலால் இரப்பவர்கள் பிறர்தம் ஈகையால் மகிழ்ச்சியுற்று இனிய முகத்தோடு திரும்பிப் போதல் வேண்டும். இல்லையேல் இரத்தல் மட்டுமல்ல இரக்கப் படுதலும் கொடுமையானதே.

தவவலிமையைக் காட்டினும் மிக மேலான வலிமை வாய்ந்தது, தாம் தம் பசியை அடக்கும் ஆற்றலே ஆகும். அந்த ஆற்றலும் கூடப் பசிப் பிணியைப் போக்கி வறியோர்க்

குதவும் வள்ளல்களின் வல்லமைக்குப் பிற்பட்டதே ஆகும். இந்தக் காரணத்தினால் பொருள் அற்றவர்களை அழிக்கும் படியான பசிப் பிணியை நாம் போக்குதல் வேண்டும். அதுவே நம் கடமை. பொருள் பெற்றவன் தனக்குப் பிற்காலத்திலே உதவுமாறு சேமித்து வைக்கும் (Bank) சேமிப்பு நிலையமாக இவ்வறச் செயல் ஒன்றே விளங்கும் என்க.

மற்றும் தன் உழைப்பின் பயனாகிய ஊதியத்தைப் பங்கிட்டு உண்ணும் பழக்கம் உடையவனைப் பசி என்னும் தீப்பிணி தீண்டவே திண்டாது. அது மட்டுமா? அந்த வகையில் பிறருக்குக் கொடுத்து உண்ணுதலே ஒரு இன்பமாகும். ஆனால் பொருளைப் பிறருக்குக் கொடுக்காமல் தாமே சேமித்து வைத்துப் பின்னர் அதை இழக்கும் கொடியவர்கள் இந்த இன்பத்தை அறிய மாட்டார்கள். மற்றும் பிறர்க்கு ஈதல் குணம் சிறிதுமின்றித் தாமே தனித்து உண்ணும் பழக்கம் பிறரிடம் சென்று இரந்துண்பதைக் காட்டிலும் மிகவும் கொடியது என்பதையும் அவர்கள் அறியமாட்டார்கள்.

இந்த உலகத்தில் சாவதைக் காட்டிலும் கொடியது இல்லை. அந்தச் சாதலும் வறிஞர்கட்கு ஒன்று ஈதல் கைகூடாத காலத்திலே இனிதாகும் என்க!

## 51. புகழ்

உலகத்தில் பிறந்த ஒவ்வொருவரும் பெற ஆசைப்படுவது புகழ் ஒன்றே. புகழை விரும்பாத மனிதன் உலகில் இல்லை. எந்தப் புகழும் ஈகையால் தனக்கு உண்டாகும். ஆனால் ஒரு மனிதனுக்கு அதுவே இரட்டை ஊதியம். எனவே இந்த உலகத்தில் ஈதலும் புகழோடு வாழ்தலுமே உயிர் வாழும் மக்களினத்துக்கு ஊதியம் ஆகும். இப்புகழே அன்றி மக்களினத்துக்கு வேறு பயனே இல்லை. ஏனெனில்

உலகத்திலே இரப்பவர்க்கு ஈயும் கொடையாளிகளின் மேல் நிலைத்து நிற்கும் புகழை மட்டுமே உரையினாலும் பாட்டாலும் புகழ்ந்துரைப்பார் உலகத்தார். ஆகையினால் இந்த நிலவுலகத்தே அழியாமல் நிலைத்து நிற்பது புகழ் ஒன்றே ஆகும். இதனை ஒருவன் பெறுவானானால் தேவர் உலகமும் அவனையல்லாது ஞானிகளைப் போற்றாது என்றால், உலகில் இணையில்லாததாய் ஓங்கி நின்று அழியாமல் நிற்பது புகழே அல்லவா?

இவ்வுலகத்தில் புகழுக்குக் காரணமாகவும் அங்கமாகவும் விளங்கும் கேடும் புகழெய்தி நிலைத்து நிற்கக் காரணமாகும் சாக்காடும் (சாவும்) விவேகிகளுக்கல்லாமல் பிறருக்கு உண்டாகாது. எனவே நாம் இம்மண்ணிலே தோன்றியதன் பயன் புகழோடு வாழ்தல் ஆகும். இல்லையேல் பிறவாமலேயே இருந்திருக்கலாம். பிறந்தும் புகழ் எய்தற்குரிய செயலாற்றவில்லையேல் நம் பிறந்த இப்பிறப்பினால் பயன் ஒன்றுமே இல்லையல்லவா?

தமக்குப் புகழ் உண்டாகத் தக்கவாறு வாழ வழியில்லாதவர்கள் பிறர் தம்மை இகழ்ந்த காலத்தில் இந்த இகழ்ச்சிதாம் புகழ் எய்தும்படி வாழாததால் வந்தது என்பதை உணராமல் தம்மை இகழ்ந்தாரை நோவது ஏனோ? இந்த இசை (புகழ்) மட்டுமே தனக்குப் பின் இவ்வுலகத்தில் நிலைத்து நிற்கும் பெருஞ்செல்வமாகும். இந்த இசை என்னும் செல்வத்தைப் பெறாமல் வாழ்வதே வசை எனப்படும். இவ்வகையான புகழ் சிறிதும் இல்லாத உடலைச் சுமந்து நிற்கும் இந்த மண்ணும் பழிப்பில்லாத வளப்பத்தினை உடைய விளையுளிலே குறைந்துவிடும்.

எனவே, வாழ்பவர்கள் என்று கூறப்படுபவர்கள் வசையற்ற புகழ் மிக்க வாழ்க்கை அமையப் பெற்றவர்களே. அது வன்றிப் புகழ் அற்ற வாழ்க்கை வாழ்பவர் யாவரோ எனில் அவர்கள் வாழ்ந்தும் வாழாதவரே ஆவர்.

## 52. இறைமாட்சி

தனி மனிதனின் ஒழுக்கம்—தன்மைகளைக் கண்டோம். சமுதாயத்தில் தனி மனிதனும், தனிமனிதனிடம் சமுதாயமும் எவ்வண்ணம் பின்னிப் பிணைந்து கிடக்கின்றன. அதில் மனிதன், நாடு, ஆட்சி முறை, தலைவன் இவர்கள் தன்மை என்ன என்பதை அறியவேண்டியது நம் கடமை. முதலில் சமுதாயத்துக்கும் நாட்டுக்கும் தலைமை தாங்கும் அரசன் அல்லது தலைவன் அல்லது ஆளுநன் என்பவனைப் பற்றிச் சிறிது ஆராய்வோம்.

பற்பல அரசர்களிடையே சிங்க ஏறு என்று மதிக்கப் படுபவன் யார் எனில் நல்ல வீரர்படையும், நல்ல குடியும், வற்றாத உணவுப் பெருக்கமும், நல்லமைச்சும், நல்ல நட்பினரும் ஆகிய ஆறு உறுப்பினர்களையும் பெற்றவனே அந்த நல்ல தலைசான்ற அரசனுக்கோ, அஞ்சாமையும் ஈகையும், அறிவும், ஊக்கமும், அணிகலன்களாக இடையீடில் லாமல் பொருந்தி நிற்றல் வேண்டும். அதுமட்டுமா? அரசன் தன் கடமைகளைத் தள்ளிப் போடாமலும், கல்வியும் துணிவும் உடையவனாகவும் இருத்தல் இன்றியமையாதது. இப்படிப்பட்ட நல்ல அரசன், தன் நாட்டிலே அறம் சிறிதும் தவறாமல், அதர்மம் நிலவாமல், தானும் தன் அரசும் வீரத்திலிருந்து வழுவாமல் தாழ்வின்றி ஆள்வானாகில் அதுவே நல்ல அரசு ஆகும்.

மேலும் இப்படிப்பட்ட நல்லரசன் தனக்குப் பொருள் வரும் வழிகளை ஆராய்ந்து இயற்றலும், அவ்வழியே பொருளை ஈட்டுதலும், அப்பொருளைக் காத்தலும், காத்த பொருளைக் குடிகளின் நன்மைக்கென செலவு செய்தலும் வல்லவனாயின் அவனே அரசருள் சிறந்தவன். அதோடு தன் குடிகளோ, தம் குறைகளை விண்ணப்பிக் கின்றவர்களோ, வந்து தன்னைக் காண்பதற்கு அவன் எளியவனாகவும், கடுஞ்சொல் இல்லாதவனாகவும்,

விளங்கின் அவனது மாநிலத்தைப் பிறநாடுகளும் புகழும். இனிய சொற்களும், ஈகையும், அருளும் உடைய அரசனைப் பிறர் புகழ்வதோடு, அவன் ஆணைப்படி நடக்கக் காத்திருப்பர். அவன் எண்ணியது எய்துவன். நல்ல செங்கோல் முறையோடு குடிகளைக் காக்கும் மன்னனை மக்கள் தம் கடவுளெனத் தம் உள்ளத்தில் வைத்துப் போற்றுவர்.

இனி அரசன் அறியாமையால் தவறிழைத்து நெறி தவறுங் காலத்திலே, சான்றோரும், அமைச்சரும் அவனை இடித்துரைப்பர். அவை தன் செவிக்குக் கசப்பாகத் தோன்றினாலும் பொறுத்துத் தன்னைத் திருத்திக் கொள்பவனே பண்புள்ள மன்னன். அவன் குடைக்கீழ் உலகமே தங்கி நிற்கும். அவர்களுள்ளேயும், கொடையும், அருளும் செங்கோன்மையும், தளர்ந்த குடிகளைக் காத்தலுமாகிய செயற்பாடு வாய்ந்தவனே, வேந்தர்களிலேயே மிகப் பேரொளியாக விளங்கும் விளக்கை ஒப்பவன் ஆவன்.

## 53. கல்வி

சமுதாயத்தின் முதல் தேவை அரசன் (ஆள்பவன்). அடுத்த தேவை கல்வியேஆகும். அரசனுக்கு மட்டுமல்லாமல் படைக்கும் குடிகளுக்கும் அமைச்சர்களுக்கும், பிறர் யாவருக்குமே அதாவது சமுதாயம் முழுமைக்குமே இன்றியமையாதது கல்வி ஒன்றே.

கற்க வேண்டிய நூல்களை ஐயம், திரிபு இல்லாமல் (குற்றமின்றி) ஒருவன் கற்க வேண்டும். பிறகு அவன் கற்ற அவ்வழியிலேயே நிற்றல் வேண்டும். கற்றலைப் போலவே அவ்வழி நிற்றல் இன்றியமையாதது. வாழும் மக்கட் சமுதாயத்திற்கு எண் என்றும் எழுத்தென்றும் சொல்லப் படும் கலைகள் யாவும் அறிஞர்கள் கண்ணென்றே

சொல்வர். பிறர் கருத்தையும் உலக நியதியையும் அறியக் கூடிய வகையினாலும், அறிவு நூல்களை அறியக் கூடிய தன்மையினாலும், கற்றவர் முகத்தில் உள்ளனவே கண்ணென்றும் கல்லாதார் முகத்தில் உள்ளன புண்ணென் றும் கூறப்படும்.

இவ்வகையிலே கற்றோர்கள் கூடிப் பேசி மகிழ்ந்து தம் கருத்தைப் பரிமாறிக் கொள்ளும் காலத்திலே மகிழ் வோடு கூடிப் பின் பிரியும் காலத்திலே, இப்படிப்பட்ட அறிஞரைப் பின் காணுவதும், அவர் உரையைக் கேட்பதும் எப்போது வாய்க்கும் என ஏங்குவர். இதுவே கற்றோர் மாண்பு. எனவே, அறிவு மிக்கவனாக விளங்க, செல்வர் முன்னே வறிஞன் ஏங்கி நின்று இரந்து அச்செல்வத்தை அடைவதை ஒப்பக் கற்றோர் முன்னே கல்லாதவன் ஏங்கி நின்று இரந்து கல்வி கற்றல் வேண்டும். அப்படிக் கற்பவனே தலையானவன். மாறாக அதற்கு வெட்கப்படுபவனோ கல்லானாய் மக்களினத்திலே கடைப்பட்டவன் ஆவான்.

இக்கல்விதான் தோண்டத் தோண்ட நீர் சுரக்கும் மணற் கேணியை ஒத்தது. கற்கக் கற்கஅறிவு ஊற்று மிகுந்து பெருக்கெடுக்கும் மற்றுமோர் சிறப்பு, அறிவுநூல் நன்கு கற்றவனுக்கு எந்நாடும் தன் நாடே, எவ்வூரும் தன் ஊரே; அங்ஙனமிருக்க ஒருவன் சாகுங்காலம் வரையிலும் தான் கல்லாதிருத்தல் என்ன பயன் கருதியோ?

இக்கல்விதான், ஒரு பிறவியிலே தான் வருந்திக் கற்ற பின் அவனைத் தொடர்ந்து பல பிறவிகள் தோறும் சென்றடைந்து அவனுக்குத் துணை செய்யும். ஆனால் செல்வமும், நிலமும் வீடும் அங்ஙனமல்ல. அவன் வாழ்நாள் முடிந்தபின் அவை இங்கேயே தங்க வேண்டியனவே. எனவே, கேடில்லாத மேலான செல்வம் கல்வி ஒன்றே. பிற செல்வங்கள் செல்வங்களே அல்ல. மற்றும் கல்வியில் வல்ல அறிஞர்கள் தாமே இன்புறும் தன்மை பெற்ற கல்வியினால் உலகமே இன்பமடையக் காண்டலால் அதையே மேலும் மேலும் விரும்பிக் கற்பார்கள் என்க.

# 54. கல்லாமை

கல்வி கற்றலின் உயர்வையும் சிறப்பையும் கண்டோம். இனிக் கல்லாமையின் இழிவையும் தாழ்வையும் சிறிது காண்போம்.

சதுரங்கம் (வட்டு, சூது) ஆடுவதற்குக் களம் தேவை. களமில்லாமல் சதுரங்கம் ஆடுதல் இயலாது. அறிவை நிரப்பு தற்குக் காரணமான நூல்களைக் கல்லாதவன் பொது மேடையில் அல்லது பலர் முன்னிலையில் தான் பேச விழைந் தால் சொல்லும் பொருளும் ஒன்றுக்கொன்று பொருந் தாமல் அரங்கில்லாமல் வட்டாடியதைப் போல் பயன் சிறிதும் இல்லாமல் போகும். எனவே கல்லாதவன் அறிவுச் சொற்களை அவையில் அறிஞர் முன் பேச விழைதல், இரு மார்பகங்களும் இல்லாதவள் பெண்மையை அடைய இச்சை கொண்டதையே ஒக்கும் அதாவது இச்சையுற்றாலும் நிறைவேறாது என்பதாம். ஆகையினாலே கல்லாதவர்கள் கற்றுவல்ல பெரியவர்கள் நிறைந்த அவையிலே, வாய் திறவாமல் பிறர் சொல்வதை மட்டும் கேட்டுக் கொண்டிருந் தால்தான் அவர்கள் நல்லவர்கள், இல்லையேல் தம் வாய் திறந்து தங்கள் கருத்தைச் சொல்லப் புகுந்தாலோ அதன் மூலம் அவர்கள் தங்களது கல்லாமையையும் அறியாமையை யும் பலர் முன்னே வெளிப்படுத்தி விடுவார்கள். கல்லாத வரும் ஒருக்கால் ஏதாவது ஒரு சமயம் புத்திக் கூர்மையுடைய வராயிருப்பினும் அதைக் கற்றவர்கள் ஒரு பொருட்டாக ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்.

மற்றும் கல்வி இல்லாதவன் தற் பெருமையோடு தன்னைத்தானே மதிக்கும் மதிப்புங்கூடக் கற்றவன் அவனைக் கண்டு உரையாடுகின்ற அந்தக் காலத்தில் அவன் உளறலால் அழியும். ஆகையினால் கல்லாதவர்கள் இந்த உலகத்திலே, ஏதோ உயிர் வாழ்கின்றவர்கள் என்ற பேர் தானே அல்லாமல், அவர்கள் நிலங்களினிடையே சிறிதும் பயன் தராத களர் நிலத்தையே ஒத்தவர்கள் ஆவார்கள்.

அதுமட்டுமா? கல்லாதவர்களின் அழகிய அலங்காரமும் பகட்டாக, எடுப்பாக இருப்பினும் மண் பொம்மைக்குச் செய்த ஒப்பனை போன்றதே. எனவே, நுண்ணிய மாட்சி மைப்பட்ட நூல் அறிவு இல்லாதவர்கள் தம் அழகினால் அடையும் பயன் என்ன? ஒன்றுமில்லை.

கற்றவர்களிடம் செல்வம் இல்லாதிருக்கலாம். கல்லாத வர்களிடம் செல்வம் மிகுதியாகக் குவிந்தும் இருக்கலாம். ஆனால் கல்லாதவனிடமுள்ள செல்வம் கற்றவனுடைய வறுமையைக் காட்டிலும் மிக்கக் கொடியது; தீமையைப் பயப்பது. மற்றும் பிறப்பிலே வேற்றுமையைக் காட்டக் கூடிய வகையில்தான் மேல் குலத்தான் என்று சொல்லிக் கொள்பவனும், கற்றிலன் ஆனால் படித்து மேம்பட்ட கீழ்க் குலத்தவனைக் காட்டிலும் அவன் கீழ்ப்பட்டவனே! சிச்சீ! அவனிலும் கீழ்ப்பட்டவனாகவா இவனைச் சொல்வது? இல்லை இல்லை; கற்றவனோடு கல்லாதவனை ஒப்பிட்டுப் பார்ப்பது, மக்களோடு விலங்குகளை ஒப்பிட்டுப் பார்ப்பதைப் போன்றதேதான்.

## 55. கேள்வி

கல்வி அறிவைப் போலவே கேள்வி அறிவும் மக்களுக்கு அறிவுத் தெளிவை உண்டாக்கி நன்மையைப் பயக்கும். கற்ற வன்கேள்வி அறிவால் மேலும் மேலும் பயன் அடைகிறான். கல்லாதவனும்கூடக் கேள்வி ஞானத்தால் உள்ளம் தெளிந்து அறிவு மேம்பட்டுப் பயன் அடைவான். எனவே மக்களினம் அடையக்கூடிய செல்வங்கள் யாவற்றிலும் தலைசிறந்தது செவிச்செல்வமே ஆகும். செவியால் உண்ணப்படும் அந்தக் கேள்வி ஞானம் நமக்குக் கிட்டாத காலத்திலேதான் நாம் வயிற்றுக்குச் சிறிது உணவுகொடுப்பது நலம். அப்படிப்பட்ட செவி உணவாகிய கேள்வி ஞானத்தை உடையவர்களே இவ்வுலகத்திலேயே அவிவுணவைக் கொள்ளும் தேவர் களோடு ஒப்ப வைத்து மதிக்கப்படுவார்கள் (பாராட்டப் படுவர்.)

ஆகவே, ஒருவன் தான் கற்கவேண்டிய அறிவு நூல்களைக் கல்லாமல் தன் காலத்தைக் கழித்துவிட்டானாயினும், கேள்வி ஞானத்தை மட்டுமாவது கட்டாயம் அடைதல் வேண்டும். ஏனெனில் அக்கேள்வி ஞானம்தான் ஒருவனுக்குத் தளர்ச்சி (வறுமை அறிவின்மையால் வரும் தளர்ச்சி) வரும் காலத்திலே ஒரு பிடிப்பாக—பற்றுக்கோடாக அமைந்து அவனைப் பாதுகாக்கும். வாழ்க்கையிலே வழுக்கி விடும் காலத்திலே நாம் கீழே விழுந்து விடாமல் தாங்கி நிற்க உதவும் ஊன்று கோலைப்போல ஒழுக்கமுடையவர்கள் கூறும் நல்லுரைகள் நமக்கு உற்றுழி உதவும்.

எனவே, எவ்வளவு சிறிய அளவாயினும் நல்ல கேள்வி அறிவாகிய உறுதிப் பொருள்களைக் கேட்க வேண்டும். அதுதான் எவ்வளவு சிறிதாயினும் அக் கேள்வி ஞானம் மிக நிறைந்த பெருமையை அவனுக்குத் தரும். இவ்வகையிலே கேள்வி அறிவால் உறுதிப் பொருள்களைத் தாமும் மிக நுட்பமாக ஆராய்ந்து அறிந்து மேலும் மேலும் கேள்வி ஞானம் அடையப் பெற்றவர்கள் பிறரைப் பிழைபட உணர்ந்த நேரத்திலும் தாம் பேதைமையான சொற்களைப் பேச மாட்டார்கள்.

கண்ணிருந்தும் காணாதபோது பயனில்லை. அதைப் போலவே செவியாகிய உறுப்பிருந்தும், அதனால் கேட்கும் சக்தி படைத்திருந்தும் அதன் பயனாகிய நுண்ணிய கேள்வி ஞானத்தால் அக்காதுகள் துளைக்கப் படவில்லையென்றால், கேட்கும் தன்மையிருந்தும் அவை கேளாக் காதே! மற்றும் நுட்பமான கேள்வி ஞானம் இல்லாதவர்கள் பணிவார்ந்த இனிய சொற்களைக் கூற இயலாதவர்கள். ஏனெனில் வணங்கிய வாய் அவர்களுக்கு அமையாது. எனவே செவிச் சுவை உணராமல் வாய்ச்சுவை மட்டுமே உணர்ந்து மனித உருவில்வாழுகின்ற விலங்குகளை ஒத்தவர்கள் செத்தாலும் வாழ்ந்தாலும் ஒன்றுதான்.

# 56. அறிவுடைமை

பொறிகளால் அறியப்படும் அறிவுக்கப்பாற்பட்டு அவைகளையும் தீ நெறி கடிந்து நன்னெறியிலே உய்க்கவல்ல அறிவை உடையதாம் தன்மையே இவ்வறிவுடைமையாகும். இயல்பாக அமைந்திருக்கும் இவ்வறிவுதான், கல்வியாலும் கேள்வியாலும் மேலும் மேலும் ஒளி வீசும். இந்த அறிவு தான் உயிருக்கு இறுதி வராமல் காக்கும் கருவி மட்டுமன்று, பகைவர்களாலும் முற்றுகையிட்டு அழிக்க முடியாத கோட்டையுமாகும்.

இந்த அறிவு என்பதுதான் என்ன? இதன் இலக்கணம் யாது எனில், நம்முடைய உள்ளத்தை அதன்போக்கிலே போக விடாமல், பொறிவழி தீ நெறிக்கண் செல்லாமல், தீய நெறியை விலக்கி உள்ளத்தை நல்வழியில் செலுத்துவது எதுவோ அதுதான் அறிவு.

அடுத்து யாதொரு பொருளை யார் யார் வாய் சொல்லக் கேட்டாலும் கேட்ட அப்பொருளின் உண்மைத் தன்மையை—உட்கிடையை—உள்ளவாறு அறிவது எதுவோ அதுதான் அறிவு. தான் பிறர்க்கு நல்ல கருத்துக்களைச் சொல்ல நேர்ந்த காலத்தில், அவர்கள் அக்கருத்துக்களை மேலும் சிந்திக்கும்படி சொல்வதும், பிறர் கூறிய நல்ல கருத்துக்களின் நுட்பங்களைத் தான் மேலும் மேலும் ஆராயத் தூண்டுவதும் எதுவோ அதுவே அறிவு.

இந்த அறிவுதான் உலகியலோடு பொருந்தி, உலகினர் நம்மைச் சூழ்ந்து நிற்கும்படி செய்யும் தன்மையது. தாமரை மலரைப்போல முன் மலர்ந்தும் பின் கூம்பியும் இன்றி எக்காலமும் மலர்ச்சியோடு ஒரே நிலையாய்க் காணப்படும் மலரைப் போன்று நிலை கலங்காமல் உள்ளது எதுவோ அதுவே அறிவு. இந்த உலகம் எந்தத் தன்மை யினால் இயங்கிக் கொண்டிருக்கின்றதோ, அந்த இயக்கத்துக் கேற்ப ஒழுகுவது எதுவோ, அது அறிவு.

எனவே இப்படிப்பட்ட தன்மை வாய்ந்த அறிவினை உடையவரே எல்லாம் உடையவர்கள் ஆவர். அவர்கள் தாம் தமக்குப் பின்னால் வரப்போகும் நன்மை தீமைகளை நன்கு உய்த்துணரவல்லவர்கள். அறிவில்லாதவர்களோ அவற்றை அறிய மாட்டாதவர்கள்.

அஞ்ச வேண்டியவைகளுக்கு அஞ்சாமல் இருப்பது தான் மடமை. இவ்வகையில் அஞ்ச வேண்டியவைகளுக்கு அஞ்சுதல்தான் அறிவுடைமையாகும். அதுவே அறிவுடையார்களின் தன்மையாகும். தமக்குப் பின்னே உண்டாகும் நன்மை தீமைகளை அறியவல்ல அறிஞர்களுக்குத் தம் உள்ளம் நடுங்கும்படி வருவதாகிய எந்த ஒரு துன்பமும் உண்டாகாது.

## 57. குற்றங் கடிதல்

குற்றங்கடிதல் என்பது தன்னுள்ளத்தே உண்டாகும் அகப்பகையாகிய குற்றங்களை விலக்குதலே. அக் குற்றங்கள் தாம் காமம், வெகுளி, பற்றுள்ளம், மானம், உவகை, மதம் என்னும் ஆறாகும். தான் தனது என்னும் செருக்கும், வெகுளியும், சிறுமைத்தனத்தைப் பயக்கும் காமமும் எனும் இக்குற்றங்கள் இல்லாதவர்கள் செல்வமே மேலாம் தன்மையினை உடையது.

அதுவன்றிக் கஞ்சத்தனத்தால் கொடுக்க வேண்டுழி பொருள் தராமல் உலோபியாதல், பொய்யான மனத்தை மேற்கொள்ளல், அளவிலா மகிழ்ச்சிப் பெருக்கால் தகாத செயல் செய்தல் ஆகிய இவைகள் நாட்டை ஆளும் அரசனைச் சென்றடையும் குற்றங்கள். எனவே இப்படிப்பட்ட குற்றங்கள் தம்மிடம் தினையளவு வந்த போதினும் அவைகளைப் பனை அளவினவாகக் கொண்டு அப்பழிக்கு அஞ்சி (நாணி) அவை மேலும் தம்மிடம் வராதபடி விலக்குவார்கள்.

ஏனெனில் அக்குற்றங்கள்தாம் தம் உயிருக்கு ஊறு செய்து இறுதியை விளைவிக்கும் வலிமை வாய்ந்தன. ஆகையினாலே அவைகள் தம்மை வந்து அடையாதபடி தம்மைக் காத்துக் கொள்ள வேண்டும். எந்த ஒரு குற்றமும் தன்னை வந்தடையுமுன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளாதவன் வாழ்க்கை எரி முன்னால் வைக்கோல் போரைப்போல் எரிந்து சாம்பலாகிவிடும்.

அரசனோ, குடிகளோ, பிறரோ, யாவரும் பிறர் குற்றத்தைத் தாம் காணுமுன்னதாக—பிறர்க்குச் சுட்டிக் காட்டுமுன், தம் குற்றத்தைக் கண்டு ஆராய்ந்து நீக்க வேண்டும். இந்தத் தன்மை மட்டும் ஒருவனிடம் பொருந்தினால், பின்னர் எந்தக் குற்றமும் அவனை நெருங்காது. எனவே பிறர் குற்றத்தைக் கண்டு விலக்கப் புகு முன்னர், தன் குற்றத்தைக் கடிதல் வேண்டுமென்பதாயிற்று.

பொருளின் பயன் நம் வாழ்க்கையை வளப்படுத்துவதும் பிறர்க்கு உதவுவதும் ஆகும். ஆனால் நாம் ஈட்டிய பொருளால் நம் வாழ்க்கையை வளப்படுத்துவதையோ ஈதலே செய்யாமல், அதைப் பதுக்கிப் பாதுகாத்து வைப்பதையோ செய்தால் அது நம்மிடம் தரித்து நில்லாமல் அழிந்தொழியும். எனவே, பொருளின்பால் கொள்ளும் பற்றுள்ளம் ஆன உலோபத்தனம் பிற குற்றங்களிலும் மிகக் கொடியது. அதை முற்றும் விலக்கிவிட முயலவேண்டும்.

இறுதியாக, தான் எவ்வளவுதான் மக்களுள் சிறந்து ஒளிர்ந்தாலும் தன்னையே தான் மதித்துப் போற்றும் தற்பெருமை என்னும் குற்றம், தன்னை வியவாமல் கடிந்து ஒழுகுவதோடு, தனக்கு எவ்வகையிலும் நன்மை தராத செயல்களை விரும்பாமல் வாழ்தல் வேண்டும்.

மனித உள்ளம் சிற்சில நேரங்களில் ஏதேனும் சபலத்துட் பட்டு விடலாம். மிகச் சிறிய இன்பம் துய்த்தலாகிய குற்றத்திலும் சில நேரங்களில் நம் உள்ளம் தாழ்ந்து விடலாம்.

அடிமனமாக, தான் இச்சிக்கும் பொருளில் உள்ள அவா வினைப் பிறர் அறியாமல் அரசன் அனுபவிக்க வல்லவனா யின் அவனுடைய பகைவர்கள் வஞ்சிக்கும் சூழ்ச்சி அவனை வீழ்த்தலும் முடியாது.

## 58. பெரியாரைத் துணைக்கோடல்

வாழ்க்கைத் துணையாக மனைவியைக் கொள்ளு கிறோம். பழகுவதற்குத் தன்னொத்த நண்பர்களைக் கொள்ளுகிறோம். ஆனால் நம் உள்ளத்திடத்தே நிலவுகின்ற சமுதாயத்தில் உலவுகின்ற—பிறர்க்கு ஊறு விளைவிக்கின்ற குற்றங்களைக் களைய நாம் கொள்ளவேண்டியது அறிவு சான்ற பெரியோர்கள் துணையேஆகும். அவர்கள் அறத்தின் பாகுபாடுகளை எல்லாம் அறிந்தவர்களாய் வயதிலும், அனுபவத்திலும் மூத்தவர்களாய், அறிஞர்களாய் இருத்தல் வேண்டும். அப்படிப்பட்டவர்கள் கேண்மைத் திறனை நாம் அறிந்து நமக்குத் துணையாகக் கொள்ள வேண்டும்.

பெரியார் நாட்டுக்கும் நாட்டின் தலைவனுக்கும், நாட்டோருக்கும் ஏதாவது ஒருவகைத் துன்பம் உற்றபோது அதை நீக்குவதோடு, பின்னால் ஏற்படப் போகும், துன்பங் களை முன்னின்று காக்கவும் வல்லவர்கள். இப்படிப்பட்ட பெரியோர்களைப் பேணிக் காத்து நம்மவர்களாக ஆக்கிக் கொள்ளுதல் அருமையினும் அருமை. அதோடு தம்மைக் காட்டிலும் அறிவு முதலியவற்றால் மிக்க பெரியவரை வழிபட்டு அவர் வழி ஒழுகுதலே வல்லமை யாவற்றுள்ளும் சிறந்த வல்லமையாகும்.

தனக்கு ஆலோசனை நல்கும் பெரியவர்களையே தன் கண்ணாகக் கொண்டு அரசன் தன் ஆட்சியை நடத்த வேண்டியிருப்பதால், அப்பெரியோர்களை நன்கு ஆராய்ந்து தனக்குத் துணையாகத் தேர்ந்தெடுத்தலே நல்லது. ஏனெனில் தக்க பெரியார்களையே தன்னினமாகத்

கொண்டு ஒழுகும் ஒருவனுக்கு அவன் பகைவரால் வரக் கூடிய துன்பம் ஒன்றுமேயில்லை. தீயன கண்ட வழி தன்னை இடித்து அறிவுரை கூறி நெறியுய்க்கும் பெரியவர்களைத் தன்னவராக அமைத்துக் கொண்டவர்களைக் கெடுக்கும் தகுதியாருக்குத்தான் உண்டு? அங்ஙனமின்றி அல்லன கண்டவழி இடித்து அறிவுரை கூறுவாரே இல்லாமல் ஆட்சி நடத்தும் காவலில்லா மன்னனுக்குக் கெடுக்கும் பகைவர் களே தேவையில்லை. அவன் தானே கெட்டொழிந்து விடுவான்.

முதல் இல்லாத எந்த வணிகனுக்கும் எத்தகைய ஊதியமும் கிடைப்பதில்லையல்லவா? அதைப் போலவே தன்னைத்தாங்கும் பெரியவர்கள் துணையில்லாத அரசனுக்கு நல்ல நெறியும் அதன் பயனாகிய நல்ல நிலையும் இல்லை. அதுமட்டுமல்ல. பல்லோரிடம் பகை கொள்வதைக் காட்டி லும் நல்ல அறிவு சான்ற பெரியவர்களின் தொடர்பினைக் கைவிட்டு விடுதல் ஒருவனுக்குப் பத்து மடங்கு துன்பத்தைப் பயப்பதாகும் என உணர்ந்து பெரியாரைத் துணைக் கொண்டு ஒழுகுதல் சாலச் சிறந்ததாகும்.

## 59. சிற்றினம் சேராமை

பெரியாரைத் துணைக் கொள்வதால் நம் வாழ்வுக்கு நன்மையும் வல்லமையும் உண்டு. மாறாக அறிவைத் திரித்துத் தீயவழி உய்க்கும் சிறியார் இனத்தைச் சேர்ந்து ஒழுகினாலோ, வாழ்க்கையில் தீமை, கேடு, வசை முதலிய பலன்களையே அது தந்துவிடும். இதை அறிந்துதான் பெருமை மிக்க பெரியோர், சிற்றினத்தைச் சேர்ந்து ஒழுகுதல் இல்லை. ஆனால் சிறுமைக் குணத்தவர்களோ அச்சிற்றினத்தையே சேர்ந்து அவ்வினத்தையே சுற்றமும் உறவுமாக எண்ணித் துணிந்து விடுவார்கள்.

வானத்தில் இருந்து பெய்த நல்ல நீர் கூட நிலத்தின் கண்ணே வீழ்ந்த பின், மண்ணின் இயல்புக்கு ஏற்றவாறு நிறம் சுவைகளிலே மாறுதல் அடைகின்றது. அதைப் போலவே எவ்வளவு நல்லவன் ஆயினும் அவன் சார்ந்த இடத்தின் தன்மைக்கேற்றபடியே அவன் அறிவும் மாற்ற மடைகிறது. மனத்தின் தன்மைக்கேற்பவே உணர்ச்சியின் தன்மையும் வேறுபாடடைகின்றது. அதைப் போலவே மனிதன் தான் சார்ந்த இனத்தினது பண்பாட்டின் காரண மாகவே, பிறரால் இவன் இத்தன்மையன் என்று சுட்டி அறியப்படுகிறான்—கூறப்படுகிறான்.

அது மட்டுமல்ல, முன்னர் சொன்ன மனத்தின் தன்மைக்கேற்றவாறு உணர்வின் அடிப்படை அறிவும் உள்ளத்திலிருந்து தோன்றுவதைப் போல் காட்டினாலும் அது உண்மையிலே அவன் சார்ந்த இனத்தைச் சார்ந்தே உண்டாகின்றதென்பதையும் உணர்க!

மனத்தின் தூய்மையும் செய்யும் வினையின் தூய்மையும் ஆகிய இரண்டும் நாம் சார்ந்துள்ள இனத்தூய்மையை ஆதாரமாகக் கொண்டே அமையும். மற்றும் மனத்தூய்மை உடையவர்களுக்கு நல்ல எச்சம்-சந்ததி-உண்டாகும். அதைக் காட்டிலும் இனத்தூய்மை உடையவர்களுக்கு நன்றாகா— பழுதுபடும்படியான-செயல் முறைகள் இலவாகி விடும். அதாவது எடுத்த செயல்கள் யாவும் செவ்வனே முடியும்.

சிற்றினத்தை நாம் சேராமலிருக்க நாம் நம் உள்ளத்தைத் தூய்மையுடையதாக அமைத்துக் கொள்ளுதல் வேண்டும். மனநலம்தான் சமுதாயத்திற்கு ஒரு செல்வம். இனநலமோ நம் சமுதாயத்திற்கு எல்லாப் புகழையும் தருவதாகும். எனவே சான்றோர்கள் மனநலம் உடையவர்களே ஆயினும் சிற்றினம் சாராமல் நல்ல இனத்தையே சார்வர் ஆயின் அது அவர்கட்கு இம்மைக்கும் மறுமைக்கும் துணையாகி வலிவுடைத்து மனநலத்தால் மறுமை இன்பம் உண்டாம், அச்சிறப்பும் இனநலத்தால் வலிமை பெறும்,

எனவே அரசனுக்காயினும், குடிகளுக்காயினும் நல்ல இனத்தைக் காட்டிலும் துணை வேறில்லை. அதே நேரத்தில் தீய இனத்தைப் போலத் துன்பம் தருவதும் இல்லை.

## 60. தெரிந்து செயல்வகை

வாழ்க்கையிலே பெரியாரைத் துணைக்கொண்டு, சிற்றினம் சாராமல் வாழும் நாம் செய்ய வேண்டிய செயல்களை எல்லாம் ஆராய்ந்து செய்தல் வேண்டும். நாம் தொடங்கிச் செய்யும் எந்த ஒரு தொழிலின் கண்ணும் ஆக்கமும் உண்டு; அழிவும் உண்டு. எனவே ஆக்கத்தையும் அழிவையும் ஆராய்ந்து பின்னர் அது பயக்கும்படியான ஊதியத்தையும் ஓர்ந்து ஒரு செயலைச் செய்தலே நம் கடமையாகும். இவ்வண்ணமாக ஆராய்ந்து தேர்ந்தெடுத்த செயலை நல்லோர், பெரியோர் உதவியுடன் செய்பவர்களுக்கு எய்துதற்கு அரிய பொருள் யாதொன்றுமில்லை.

பின்னால் நமக்கு ஊதியம் மிகவும் வரலாம் என்று தவறாகக்கணித்து முதலீட்டையே இழந்துவிடும் தொழிலை அறிவுடையோர்கள் மேற்கொள்ள மாட்டார்கள். அது மட்டுமல்ல, இத்தொழிலால் பிற்காலத்தில்தான் தன்னுடைய தன்மானமும் அறிவும் இழந்து பிறரால் இகழப்படும் நிலை அடையலாம் என்று தமக்கு நேரப் போகும் குற்றத்தை முன்னதாக ஆராயும் தன்மையுடையவர்கள், தெளிவற்ற எந்த ஒரு செயலையும் மேற்கொள்ள மாட்டார்கள். ஏனெனில் வகையில்லாத, முழுமையாகச் சிந்தித்து முடிவெடுக்காத ஆக்கப்பணி போர் முதலிய செய்கையை அரசனோ, பிறரோ தொடங்கினால் அது தன் பகைப்பயிர் தன் நிலத்திலேயே செழித்து வளர வழி கோலியதற்கொப்பானதாகும்.

செய்யத்தக்க செயல்களைச் செய்யாமையால் ஒருவன் இன்னலும் அழிவும் எய்துவதைப் போலவே, செய்யத்தகாத

வற்றைச் செய்தாலும் அவன் இன்னலும் அழிவும் எய்து வான். எனவே, எந்த ஒரு செயலையும் செய்யுமுன்னர் அதை நன்கு எண்ணிச் செய்தல் வேண்டும். ஆராயாமல் துணிந்து ஒரு செயலில் இறங்கி விட்டுப் பின்னர் ஆலோசிக் கலாம் என்பது தவறு. ஏனெனில் செய்யத்தக்க செயலை முடியும் உபாயத்தால் முயலாத முயற்சியால் உண்டாகும் இன்னல்களை, நமக்குப் பக்கபலமாகப் பலர் கூடி நின்று காத்தாலும் அச்செயல் நிச்சயமாக நிறைவேறாது. நமக்குத் தீமையே பயக்கும். அதாவது நாம் கருதிய நன்மையைப் பயவாததோடு கருதாத தீமையையும் நல்கிவிடலாம்.

ஆகவே, அரசனோ, தலைவனோ, குடிமகனோ எவரா யினும் ஒரு உதவியையோ தொழிலையோ செய்ய முற்பட்ட காலத்தில் பிறருக்கு நல்லவையே என நினைத்து அதைச் செய்ய முயன்றாலும், அச்செயலால் பாதிக்கப்பட்டவர் களுக்கு சில நேரங்களில் அது தீமையைப் பயத்து விடலாம். அதாவது அவரவர் தம் பண்பினை ஆராய்ந்தறிந்து அதற்குத் தக்கவாறு (அவரவர்கட்குப் பொருந்தும்படி இயை யும்படி) செயலாற்றாக்கால் அப்படி நேரலாம். எனவே, பிறரால் எள்ளப்படாத செயல்களையே நன்கு ஆராய்ந்து செய்தல் வேண்டும். உலக நிலையோடு பொருந்தாத உபாயங்களைக் கடைப்பிடித்து ஒருவன் செயலாற்றின் அச்செயலை உலகம் ஏற்றுக் கொள்ளாது.

## 61. வலியறிதல்

தெரிந்து செயலாற்றும் காலத்திலும் தான் மேற் கொண்ட தொழிலின் திறத்தையும், தன் வலியையும், அதற்குப் பகையாகவோ தடைக்கல்லாகவோ நிற்பார் வலி யையும் நன்கு ஆராய்ந்து தன் வலி மிகுமானால்தான் அச் செயலைத் தான் மேற்கொள்ள வேண்டும். தனக்கு இயலுவது யாது? அதன் வலி என்ன? என்பதை ஆராய்ந்து

அதன் மீது தன் சிந்தனையைச் செலுத்தித் தொழிலாற்று பவனுக்கு அடைய முடியாத ஒரு பொருள் உலகில் இல்லை.

ஆனால் தன் வலியைப் பற்றித் தானே பெருமைப்பட்டுக் கொண்டு தற்பெருமையாக உள்ளத்தின் எழுச்சியால் தன் வலிக்கு மீறிச் செயலாற்ற முனைந்து இடைக்கண் கெட்டு அழிந்தவர்கள் இவ்வுலகிலே பலராவார். ஏனெனில் அயல் வேந்தரோடும் பிறரோடும் பொருந்தி ஒழுகாமல் தன் அளவும் பிறர் அளவும் யாது என்பதையும் அறியாமல் தன்னையே மிக வியந்தவன் விரைவிலே கேடடைதல் நிச்சயம் என்க. மயில்தோகை மிகவும் மென்மையானதே ஆயினும் அப்பண்டத்தையும் அளவுக்கதிகமாக வண்டியில் ஏற்றினால் அதன் அச்சல்லவா முறிந்து விடும். எனவே நுனிக்கொம்பில் ஏறி நிற்பவன் இன்னும் மேலே மேலே ஏற நினைத்தான் என்றால் அது அவன் உயிருக்கே இறுதி பயந்து விடும் அல்லவா? அரசன் வரியும் இறையும் குடிமக்களிடம் வாங்குவதற்கும் இது பொருந்தும்.

இனி அரசனாயினும், குடிமக்களாயினும் தன் பொருளின் எல்லையை-அளவை-நன்கு அறிதல் வேண்டும். தன் பொருள் வல்லமைக்கு ஏற்ப நல்லவழியிலே தான் மேற் கொண்ட செயல் வெற்றியுற அப்பொருளை ஒருவன் செலவழித்தலே நலம். அதுதான் பொருளைப் பாதுகாத்து வழங்கும் நெறியாகும். மற்றும் தனக்குப் பொருள் ஈட்டும் வழிகள், வரும் வழிகள் மிகச் சிலவாயினும், மிகக் குறுகிய தாயினும், பொருள் செலவாகும் வழிகள் மிகப் பல வாகவோ, மிக அகன்றதாகவோ இல்லாமல், வரும் வழி யைக் காட்டிலும் சிலவாகக் குறுகியதாக அமையுமானால் அதனால் எவ்வகைக் கேடும் அவனுக்கு உண்டாகாது.

ஆகவே தன் பொருளின் எல்லையை-அளவை அறிந்து வாழாதவனுடைய வாழ்க்கை முறைகள் முதலில் மிகப் பிரகாசமாகத் தோன்றினாலும், பின்னர் ஒளி குன்றி இல்லையாகி, இறுதியில் அத்தோற்றமும் இல்லையாகிப்

போய் விடும். அது மட்டுமல்ல, யார் ஒருவர் தம் பொருள் அளவினை நன்கு ஆராயாமல் மிகவும் கண்ணோட்டத்தோடு (அளவற்ற தாட்சண்யத்தோடு) பிறருக்கு உபகாரம் செய்கிறார்களோ அவர் தம் செல்வமெல்லாம் அழிவதோடு அவர்களும் விரைவிலே கேடடைவார்கள் என்பது திண்ணம்.

## 62. காலமறிதல்

அரசன் மேற்கொள்ளும் போர்வினையோ, பிற ஆக்க வினையோ குடிமக்கள் மேற்கொள்ளும் வாழ்க்கையின் தொடர்புடைய பல வினைகளோ எவையாயினும் அவற்றின் வலியை நன்கு ஆய்ந்து அறிந்த பின்னர் அவைகளைச் செயல்படுத்தும் காலத்தினையும் நன்கு ஆராய்ந்தே செயலை மேற்கொள்ள வேண்டும். ஏனெனில் தன்னைக் காட்டிலும் வலிவு மிக்க ஆந்தையைக்கூடக் காக்கை பகற் காலத்திலே வெல்கின்றது. ஆகையினால் வேந்தர்க்குக் கால பலம் மிக மிக இன்றியமையாதது ஆகும். காலத்தோடு பொருந்த வினை செய்து ஒழுகுதலே எவரிடத்தும் நில்லாது நீங்கும் செல்வத்தினைத் தன்னிடம் நீங்காமல் பிணிக்கும் கயிறாக விளங்கும்.

எனவே வினை முடித்தற்குத் தக்க கருவிகளின் துணைக் கொண்டு காலத்தினை அறிந்து செயலாற்றினால் மன்னனாலும் மக்களாலும் செய்வதற்கு அருமையான செயல் ஒன்றுமே இல்லை. யார் ஒருவர் காலத்தையும் இடத்தையும் நன்கு அறிந்து காரியம் ஆற்றுகிறார்களோ அவர்களுக்கு உலகமே தம் கீழ்ப்பட விரும்பினாலும் அது கை கூடி விடும். ஆகையால் உலக வெற்றியும் உலகப் புகழும் வேண்டுமென விரும்புகின்றவர்கள் கால பலத்தை மனத்துட்கொண்டு காத்திருப்பர்.

சண்டையில் வீர மிக்க ஆடு பின்னே செல்கின்றது என்றால் அது எதிர் ஆட்டின் மேல் பலத்தோடு சென்று

மோதுவதற்கே அல்லாமல் வேறு எதற்காக? ஆகவே பகைவர்கள் தம்மிடம் தகாத செயல்களைச் செய்த காலத்திலே, உடனே அறிவுடையோர் தம் கோபத்தைக் காட்டி வெகுண்டெழ மாட்டார்கள். காலத்தை நோக்கித் தம் உள்ளத்திலேயே அக்கோபத்தை அடக்கி வைத்திருப்பார்கள்.

அறிவுடையோர் பகை அரசர்களோ பகைவர்களோ தகாதன செய்யும் காலத்திலே அவர்கள் அறியும்படி புறத்து வெகுளார். ஆனால் நம் சீற்றத்தை உள்ளடக்கி அவர்களைத் தாம் வெல்லும் காலம் வரும் வரையிலும் உள்ளத்தின் உள்ளே வெகுள்வர். அங்ஙனமாகவே தாம் வெல்லும் காலம் அதாவது அவர்கள் அழியும் காலமும் வரும்.

அப்போதே அவர்கள் தலை நம் காலடியின் கீழே தள்ளப்பட்டு விழும். எனவே, பகையை வெல்ல நமக்கு எய்துவதற்கு அரிதான ஒரு வாய்ப்பு உண்டாகுமானால் அவ்வாய்ப்பைப் பயன்படுத்திச் செய்தற்கரிய செயல்களை உடனே செய்தல் வேண்டும். கொக்கைப் போல வினைமேற் கொள்ளாத காலத்தில் காத்திருந்து செயலாற்ற வேண்டிய காலத்தில், அது மீனைக் கொத்திக் கவ்வுவதைப் போல விரைந்து செயல்பட வேண்டும்.

## 63. இடன் அறிதல்

அரசன் தான் மேற்கொள்ளும் செயலாற்றுவதிலே சிறந்து விளங்க வலிவையும் காலத்தையும் சீர்தூக்கிப் பார்ப்பதைப் போலவே, இடத்தையும் நன்கு ஆராய்ந்து பார்த்துப் பின் செயலை மேற்கொள்ளல் வேண்டும். எவ்வினையைச் செய்தாயினும் முற்றுகை இடத்தக்க இடத்தைக் கண்டறியுமுன்னர் எவ்விதப் போர் உபாயமும் செய்தல் ஆகாது. பகையரசனை இகழ்தலுமாகாது.

ஏனெனில் தாம் எப்படிப்பட்ட வலியுடையவராயினும் அரணை (மதிலை)ச் சேர்ந்த வலிமை பல பயன்களைப் பகைவர்க்குத் தருமாதலால் தாம் முற்றுகை செய்தற்குரிய இடத்தை முன்னர் கண்டறிதலே நல்லதாம்.

தாக்க வேண்டிய இடத்தை அறிந்து, தம்மை நன்கு பாதுகாத்து, பகைவர் மேற்சென்று போர் செய்வானாகில் வலியற்றவனும் வலிவு மிக்கவனாய்ப் பகைவரை வெற்றி கொள்வான். ஆங்கே இவனை வெல்லக் கருதி இருந்த பகையரசன் தன் எண்ணத்தை இழந்து தோற்பான். ஏனெனில் இவன் இடமறிந்து அரணைச் சார்ந்து பொருந்திப் போர் செய்தவன் என்க.

காட்டாக முதலையைக் கொள்வோம். நீர் நிலையிலே உள்ளபோது தன்னைக் காட்டிலும் வலிமை மிக்க யானையையும் தண்ணீரில் இழுக்க வல்லது முதலை. நீரைவிட்டுத் தரைமீது வந்த பிறகு சாதாரண நாயாலும்' அது வெற்றி கொள்ளப்படுகிறது. மற்றும் காற்றைப் போலக் கடுகி ஓடும் நெடிதான தேரும் கடலின்மீது ஓடாது. அதைப் போலவே கடலின்மீது ஓடும் நாவாயும் (கப்பலும்) நிலத்தின்மீது ஓடாது அன்றோ? இவைகளால் தன் சொந்த இடத்தில் ஒருவனுக்கு உள்ள வல்லமை அவ்விடம் விட்டு வேற்றிடம் சென்றால் வலிமை குறையும் என்றாகிறது.

இனி ஒருவன் செய்ய வேண்டியவற்றைக் குறைவின்றி ஆய்ந்து, இடம் கருதி வினையாற்றுவனாகில் அவனுக்கு அஞ்சாமை ஒன்றைத் தவிர வேறு துணையே வேண்டு வதில்லை; தக்க இடத்திலே அணிவகுத்துப் போர் புரியும் சிறு படைகூட, தம் இடம் பெயர்ந்து தன்னை முற்றுகையிட்டுள்ள பெரிய படையும் வெற்றி கொள்ளும்.

வலிவு மிக்க கோட்டை இல்லை. வீர மிக்க படைத் துணையுமில்லை. ஆயினும் மாற்றரசனை அவன் கோட் டையின்கண் சென்று தாக்கி வீழ்த்துதல் அரிய செயலுள்

ஒன்றே ஆகும். மற்றும் பாகனுக்கும் அஞ்சாமல் பகைவரைக் குத்திக் கோத்தெடுத்த தந்தங்களையுடையதுமான மத யானையும் களர் பூமியில் தன் கால் ஆழ்ந்து புதைந்து விட்டால் சாதாரண நரியாலும் கொல்லப்படும். அதைப் போலவே அரசனும் தன் பகைவரை இடமறிந்து வெல்லுதல் வேண்டும் என்பதாம்.

## 64. தெரிந்து தெளிதல்

அரசன் தனக்குத் துணை நிற்கும் அமைச்சர் முதலியவர்களையோ (இக்காலத்தில் மக்களைத் தங்களை ஆள்வதற்குரிய சட்டசபை உறுப்பினர்கள் அமைச்சர்களையோ) ஆராய்ந்து தெளிந்து தேர்ந்தெடுத்தல், தேர்ந்து தெளிதலாம். அதாவது நல்ல வல்லவர்களைத் தேர்ந்தெடுத்தலே தெளிந்து தெளிதலாம்.

தேர்ந்தெடுக்கப்படுபவன் (தெரிந்து தெளியப்படுபவன்) தனக்கல்லாமல் தன்னலமற்று நாட்டுக்கு நன்மை செய்பவனாக இருத்தல் இன்றியமையாதது. எனவே அறத்தாலும், பொருளாலும், இன்பத்தாலும், உயிருக்கு அஞ்சும் பயத்தாலும் உள்ளம் சிறிதும் மாறுபடாத ஒருவனையே தேர்ந்தெடுத்தல் வேண்டும். அதோடு நல்ல குடியில் பிறந்தவனாக, குற்றம் குறைகளில் நீங்கியவனாய், தனக்குப் பழி உண்டாகுமோ என்று அஞ்சி நாணுபவனாக அவன் அமைதல் நல்லது. ஏனெனில் நல்ல பல நூல்கள் கற்றும் மேற்சொன்ன குற்றங் குறைகளிலிருந்து நீங்கி உள்ளவர்களிடத்தும் நுணுகி நுணுகி ஆராய்ந்தால் அவர்களிடையும் அறியாமை புதைந்திருப்பதைக் காணலாம்.

ஆகவே தேர்ந்தெடுக்கப்பட்டவர்களின் குணங்களையும் அவர்களின் குற்றங்களையும் நன்கு ஆராய்ந்து எது

ஓங்கி மிகுந்துள்ளதோ அதைக் கொண்டு குணமிக்க வர்களைத் தேர்ந்தெடுத்தல் வேண்டும். அதுவுமன்றி அவர்களது பெருமை இதுநாள் வரையிலும் உலகினுக்கு எவ்வகையில் தொண்டாற்றினர்; அவர்கள் செயல்முறை என்ன? என்று அவர்கள் செயலாகிய கட்டளைக் கல் (உரைகல்)லிலே உரைத்துப் பார்த்தால்தான் அவர்களது பெருமையும் சிறுமையும் விளங்கும்.

தேர்ந்தெடுக்கக் கூடாதவர் சுற்றம், குடும்பம் இவை களின் தொடர்பில்லாதவர்களும் அறிய வேண்டியவற்றை அறியாத பேதையரும் ஆவர். முன்னவரைத் தேர்ந்தெடுத் தால் அவர் பற்றிலர். சுற்றம் குடும்பத் தொடர்பில்லாத காரணத்தால் பழி பாவங்கட்கு வெட்கப்பட மாட்டார். இரண்டாமவரைத் தேர்ந்தெடுத்தாலோ, தேர்ந்தெடுத்த வனையே அவர்கள் முட்டாளாக்கி விடுவார்கள்.

ஒருவனை நன்கு ஆராயாமல் தேர்ந்து, தனக்கும் சமுதாயத்துக்கும் துணையாகக் கொண்டால் அது அவனுக்குத் தன் வழி நீங்காத துன்பத்தையே கொடுக்கும். ஆதலால் யாரையும் ஆராயாமல் தேர்ந்து எடுக்கக் கூடாது. தேர்ந்த பின் அவரிடம் தெளிவாகக் கொள்ளத் தகும் பொருளைத் தெளிந்து நம்புதல் வேண்டும். ஏனெனில் எவனொருவன் ஒருவனை ஆராயாது தெளிதலும், ஆராய்ந்து தெளிந்து தேர்ந்தெடுத்தவனிடம் ஐயப்பாட்டை யும் கொள்கிறானோ அவன் நீங்காத துன்பத்தையே அடைவான் என்க.

## 65. தெரிந்து வினையாடல்

அரசனாயினும், குடிமக்களாயினும் தாம் செய்ய வேண்டிய தொழில் முறைகளை நன்கு சீர்தூக்கிப் பார்த்தல் வேண்டும். அவைகளைச் செயலாற்றும் திறத் திலே முதற்கண் தாம் காண வேண்டியது யாதெனில்,

அச்செயலின் விளைவால் உண்டாம் பயன் நன்மையா? தீமையா? என்பதே ஆகும். ஆகும் எவ்வினையையும் நன்கு நாடி நலனையே தரும் தன்மையுடையவை எவையோ அவைகளையே நற்செயல் எனத் தேர்ந்தெடுத்துச் செய்தல் வேண்டும்.

தனக்குப் பொருள் வரும் வழிகளை விரிவுபடுத்தி அப்பொருளால் நாட்டை வளப்படுத்தி அவை வளரவும், உறும் இடையூறுகளை ஆராய்ந்து நீக்கிக் காக்கவும் வல்லவனே அரசனிடம் வினையாற்றத் தக்கவனாவான். அவ்வகை வினை செய்வானை ஆராயும் காலத்து, அன்பும் அறிவும், கலங்காத உள்ளத் தெளிவும், பொருள் தன் கைக்கு வந்த காலத்திலே அதைத் தான் அடைய வேண்டும் என்னும் அவாவின்மையும் உடையவனையே தேர்ந்து அவனிடம் வினையாற்றும் செயலை விட்டுவிட வேண்டும்.

ஏனெனில் எவ்வகையால் நன்கு ஆராய்ந்து தேர்ந் தெடுத்து அவனிடம் வினையை ஒப்படைத்த பின்னரும், செயலாற்றும் காலத்தில் அவன் மனம் வேறுபாடடைய லாம். அத்தகைய மாந்தர் பலர் உலகில் என்ளனர். எனவே ஒருவனுடைய தோற்றம் (Personality) நம்மிடம் அன்புடையவன் என்ற சிறப்பை நோக்கி ஒரு தொழிலை அவனிடம் விட்டு விடுதல் கூடாது. மாறாக அவன் இச் செயலை முற்றவும் சிறப்புடன் திறம்பட முடிக்க வல்லவனா என்பதைக் கண்டு ஆராய்ந்து அறிந்த பின் அவனிடம் அச் செயலைச் செய்து முடிக்க விட வேண்டும்.

எனவே, வினையாற்றுதலின்கண், முதலில், செய்பவன் தன்மையை ஆராய்ந்து வினையின் வலிமையைச் சீர்தூக்கி, பின் காலத்தோடு பொருந்தச் செய்யும் அவன் ஆற்றலை அறிந்து, செய்தல் வேண்டும். நன்மை பயக்கும் இச் செயலை இவனைக் கொண்டு இவன் நன்கு செய்து முடிப்பான் என்பதை நன்கு ஆராய்ந்து அச் செயலை அவனிடமே செய்ததற்கு விடுக. அச்செயலுக்குரியவன்

அவனே என்று தீர்மானித்த பிறகு அவனையே அவ்வினை யாற்றத் தக்க தலைவனாக உயரச் செய்தால்தான், அவ் வினை சிறப்படையும். அப்படியின்றித் தன் வினையின் கண் மிக முயற்சியுடையான் தன்னிடம் கொண்டுள்ள கேண்மையால் மனம் பொறாதார் சொற் கேட்டு அவனை ஐயப்படும் அரசனைத் திருமகள் விட்டு விலகுவாள்.

தனக்காக ஆட்சியின் வினையாற்றலைக் கண்காணிக்கும் ஒருவன், நடுநிலையோடு வினையாற்றினால் உலகமே தன் நடுநிலையில் மாறாது விளங்கும்.

ஆகையினாலே அரசன் அத் தன்மையுடையவன் செயலை நாள்தோறும் ஆராய்தல் வேண்டும்.

## 66. சுற்றந்தழால்

தெளிந்து தேர்ந்தெடுக்கப்பட்டவரிடம், தேர்ந்தெடுத்துச் செய்ய வேண்டிய வினை வகைகளை ஒப்படைக்கும் ஒருவனுக்குத் தான் ஆற்றும் தொழில் துறைகளிலே அவன் சுற்றத்தாரே அவனுக்கு உறுதுணையாக இருப்பர். ஆகையினால் அவன் தன் சுற்றத்தினரைத் தன்னை விட்டு நீங்காமல் அணைத்தல் வேண்டும்.

ஏனெனில் ஒருவன் தன்னுடைய செல்வம் அனைத்தும் இழந்து வறியவனான காலத்தும் அவனுடைய பண்டைய நிலையினைக் கருதி அவனைக் கைவிடாமல் ஆதரிக்கும் தன்மை அச் சுற்றத்தாரிடம் மட்டுமே உள்ளது. இந்தச் சுற்றமும் தாம் செலுத்தும் அன்பிலிருந்து சிறிதும் நீங்காதாயின் அதுவே ஒருவனுக்குப் பல வகையாகக் கிளைத்துச் செழிக்கும் செல்வத்தைக் கொழிக்கும். மற்றும் அச் சுற்றத் தோடு மனம் கலந்து வாழாதான் வாழ்க்கையே கரையிலாக் குளத்து நீர் போலப் புறத்திலே வழிந்து வீணாகும்.

எனவே, ஒருவன் தான் அடைந்த செல்வத்தின் பயனாகத்தான் தன் சுற்றத்தவரால் சூழப்பட்டு விளங்கு வது அவர்தம் அறிவுரைப்படி வாழ்வதேயாகும் என்க.

இனி இச் சுற்றத்தினரால் தான் சூழப்பட்டு வாழும் வகை யாதெனில், தான் அவர்களுக்கு உதவ வேண்டும் காலத்தில் உதவிப் பொருள் கொடுத்தலும் இன் சொல்லோடு பழகுதலே ஆகும். மிகப் பெரிய வள்ளல் என்று புகழும்படி பெரிய கொடையாளியாய்க் வெகுளி தன்னை அடையாமல் வாழும் ஒருவனைப் போலச் சுற்றத் தினை உடையார் இவ்வுலகில் வேறு எவரும் இலர். காக்கைகள் தம் இரையைக் கண்டவுடனே தம் சுற்றத்தைக் கரைந்து அழைத்து உண்ணுவதைப் போல, சுற்றத்தார் எய்தும் செல்வவளனும் அத்தன்மையுடையவர்களிடமே அமையும்.

ஆட்சி செய்யும் அரசனும் இக்கருத்துக்களை எல்லாம் உள்ளத்துட் கொண்டு, தன்னிடம் வினை செய்பவரைப் பொது நோக்கால் நோக்காமல் அவர்தம் வரிசையறிந்து, திறமையறிந்து, அறிஞர், அமைச்சர், நண்பர், சுற்றத்தார், வீரர், என அறிந்து தன் பார்வையை அவர்மீது பதிய வைப்பானாகில், அதை நோக்கி அவனைச் சூழ்ந்து வாழ்வோர் பலராவர்.

முன்னர் தமக்கு உறவினராய், பின்னர் ஏதோ ஒரு காரணத்தால் தன்னைப் பிரிந்து சென்று விட்டவர் பிறிதோர் முறை வந்து சுற்றமாதல், முன்பு இருந்த பொருந்தாக் காரணம் தன்னிடம் இல்லையாதலால் உண்டாகும். எனவே, அப்படிப் பிரிந்து சென்று பின் காரணத்தோடு வந்து கூடிய சுற்றத்தின் தன்மையினையும், வந்த நோக்கத்தையும் ஆராய்ந்து, நன்றெனக் கண்ட பின்னரே அவரை நாம் நம்பிச் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்க.

# 67. பொச்சாவாமை

தன்னைக் காத்துக் கொள்ளும் செயலிலும், மாற்றாரை வெற்றி கொள்ளும் வினையிலும், சோர்வின்மை (தளர்ச்சி யின்மை) இல்லாமையே பொச்சாவாமை ஆகும். ஒருவனுக்கு அளவு கடந்து வரும் சினத்தைக் காட்டிலும் அளவுக்கு அதிகமாக உண்டாகும் மகிழ்வால் ஏற்படும் அலட்சியமும் அதன் பயனாக ஏற்படும் மறதியும் மிகத் தீமையை உண் டாக்கும். இடையீடு இல்லாமல் நிலைத்திருக்கும் வறுமை ஒருவனுடைய அறிவினைக் கொல்வதைப் போலத் தன் னிடம் நிலை பெற்றிருக்கும் புகழை ஒருவன் மறதி கெடுத்தே விடும். இந்த மறதி ஒருவன் புகழையே அழிக்கும் என்பது எல்லா அறிவாளர் நூலாலும் ஒப்புக் கொள்ளப்பட்ட முடிந்த முடிவாகும்.

மற்றும் தினம் தினம் அஞ்சிச் சாகிறவனுக்கு எப்படி, எவ்வகைப் பாதுகாப்பும் இல்லையோ அப்படியே உள்ளத் தினிடத்தே சோர்வும் மறதியும் உடையவனுக்கு நல்ல செல்வ வசதி இருந்தும் பயனில்லை.

தன்னால் காக்கப்படும் துன்பங்களை விழிப்போடு அவை வருமுன் அறிந்து, தன்னைக் காத்துக் கொள்ளாமல் மறந்திருந்தவன், அத் துன்பம் வந்தபோது தன்னுடைய சோர்வாகிய தவற்றுக்குப் பெரிதும் வருந்துவான்.

எனவே, யாவரிடத்திலும் எக்காலமும் மறதியும் சோர்வும் இல்லாதிருந்தால் இதற்கு ஒப்பான நன்மையே வேறில்லை. அது மட்டுமன்று. விழிப்போடு மறத்தல் இல்லாத உள்ளத்துடனே ஒருவன் தான் செய்ய வேண்டிய வற்றை எண்ணிச் செய்வானாகில் அவனுக்குச் செய்ய முடியாத செயல் என்று இந்த உலகத்தில் எதுவுமே இல்லை.

எனவே, இத்தகைய செயல்களைச் செய்தலாலே புகழ் எய்தும் என்று ஆன்றோரால் சொல்லப்படும் தொழில்

களைக் கடைப்பிடித்துச் சோர்வின்றிச் செய்தல் வேண்டும். அங்ஙனமின்றி அதை மறந்தார்க்கு இப்பிறப்பில் மட்டும் அன்று, எழுவகைப் பிறப்பிலும் நன்மை என்பதே இல்லை.

இந்தப் பொச்சாப்பு (மறதி) நம்மிடம் அமையாமல் இருக்க வேண்டி நாம் கைக் கொள்ள வேண்டியது யாதெனில் நாம் நமது வெற்றி மகிழ்வில் திளைத்து நம்மையும் நம் கடமையும், உலகையும் மறந்திருக்கும் போது, இப்படிச் செருக்கோடு தன்னை மறந்து விட்ட தன்மையால் கெட்டழிந்து விட்டவர்களை நாம் நினைத்தாலே போதும். பொச்சாப்பு பறந்து ஓடிப் போகும். எனவே, மறதி சிறிதும் இன்றி, தான் நினைத்த வைகளையே திண்மையோடு நினைக்க வல்லவன், தான் நினைத்த அனைத்தும் எளிதாக அடைவான்.

## 68. செங்கோன்மை

செம்மையோடு ஆளும் தன்மையே செங்கோன்மை ஆகும். அரசனுக்கு மட்டுமன்று குடும்பத்தலைவன், கட்சித் தலைவன், அனைவருக்கும் இது பொருந்தும். குடிமக்கள் குற்றம் செய்தால் செய்த அக்குற்றம் யாதென ஆராய்ந்து யாவரிடத்தும் தாட்சண்யம் காட்டாமல் நடுநிலைமை யோடு பொருந்திக் குற்றத்திற்கு ஏற்ற தண்டனையை நீதி நூலோடு ஒப்பச் செய்வதே செங்கோன்மை என்று கூறப்படும்.

இவ்வண்ணமாகச் செங்கோல் நடத்தும் அரசனது நீதி நெறியாலேயே, மழை நோக்கி வாழும் உலகத்து உயிர்கள் போல, குடிமக்கள் தம் அரசனின் செங்கோலை நோக்கியே வாழ்கின்றனர். இப்படிப்பட்ட மன்னனது செங்கோலே அந்தணர் போற்றுகின்ற மறைக்கும் அதில் உரைக்கப்பட்ட அறத்திற்கும் மூலகாரணமாகி நிலைபெற்று நிற்பதாம்.

மன்னன் என்பவன் சர்வாதிகாரியல்லன். குடிமக்களுக்காக மன்னனே அல்லாமல், மன்னனுக்காகக் குடிகள் அல்லர். எனவே, குடிகளை அணைத்துக் கொண்டு அவர்கள் நல் வாழ்வுக்காக செங்கோல் செலுத்தும் மன்னனுடைய அடிகளைப் பொருந்தியே உலகோர் வாழ்கின்றனர். இங்ஙனமாக நல்லியல்போடு செங்கோல் செலுத்தும் அரசன் நாட்டிலே பருவமழையும் குன்றாத விளையுளும் ஒருங்கே உண்டு எனில் அந்நாட்டு மக்களுக்கு வேறு குறைதான் என்ன?

போர் முகத்திலே வேல் கொண்டு மாற்றாரை வீழ்த்திக் கொன்று குவித்தலால் ஏற்பட்ட வெற்றி, பெரு வெற்றி அன்று. அதைக் காட்டிலும் ஒரு புறமும் சாய்தல் இல்லாத செங்கோலை முறையோடு செலுத்தலே அரசனின் பெரு வெற்றி ஆகும். அரசன் தன் ஆட்சிக்குட்பட்ட உலகைக் காக்கிறான். அவனைக் காப்பது எது? அவன் தன் நீதி முறையே! அந்த முறையும் எந்தவிதமான முட்டுப்பாடும் இல்லாமல் அரசனால் செலுத்தப்படுமானால், அப்போது அது அரசனையே காப்பாற்றும்.

இனி, செங்கோன்மை தவறினால் வரும் குற்றம் யாதெனில், எந்த ஒரு அரசன் குடிகளின் குறைகளைக் "கேட்பதற்கு நேரமில்லை, பார்க்க முடியாது" என்று எளிமையாகக் காணக் கூடாதவனாகி நீதி நெறியை விட்டு விலகி விடுகிறானோ அவன் தாழ்ந்து பழிபாவத்திலே நிலைத்து நின்று, கெடுப்பாரின்றியும் கெடுவான்.

இனி, மன்னனது தொழில் என்னவெனில், தன்னுடைய குடிமக்களைப் பிறர் வருத்தாமல் காத்து, அவர்கள் குற்றம் புரிந்த காலத்திலே அவர்களைத் தண்டித்தலே ஆகும். தண்டித்தல் அரசனுக்கு வடு அன்று; வேந்தன் தொழில். ஆகவே தண்டித்தலைக் கைவிட்டால், களைகள் பயிருக்கு ஊறு செய்வதைப் போல, குற்றவாளிகள் நல்லோரையும்

கெடுப்பர். எனவே கொலைத் தண்டனையால் கொடியவர் களைத் தண்டித்தல், பயிருக்குக் களை எடுத்துப் பயிரைக் காப்பது போன்றதே.

## 69. கொடுங்கோன்மை

அரசன் தன் நீதியினின்றும் மாறிக் கொடுமையாக ஆட்சி நடத்தலே கொடுங்கோன்மை ஆகும். குடிகளை அலைய வைத்து அவர்கள் பொருள்களைப் பல வகையாகக் கவர்ந்து நீதி முறைக்கு மாறாக ஆளும் அரசன், கொலை ஞனைக் காட்டிலும் மிக்க கொடியவன். வழிப்பறிக் கொள்ளைக்காரன் வழிப்போக்கன் எதிரே வேலோடு நின்று உன்னிடம் உள்ள பொருள்களை எடு, இடு என்பதைப் போன்றதே கையிலே கோலேந்தி ஆளும் அரசன், குடிக ளிடம் வருந்தி மனங்கலங்க வாங்கும், வரி ஆகும்.

எந்த ஒரு மன்னன் நாள்தோறும் தன் நாட்டிலே நிகழும் நன்மை தீமைகளை ஆராயாமலும், அதற்குத் தக்க நீதி நூலின்படி முறை செய்யாமலும் இருக்கின்றானோ, அவன் ஆட்சி நாள்தோறும் சிறிது சிறிதாக வீழ்ச்சி யடையும். ஏனெனில் நன்றாக ஆராயாது, முறையிலிருந்து விலகி, ஆட்சி செய்யும் மன்னவன் தன்னுடைய வளத்தையும் குடிகளின் உள்ளத்தையும் ஒருங்கே இழந்து விடுவான். எங்ஙனமெனில், நீதி முறையிலிருந்து விலகி மன்னவன் கொடுங்கோலாட்சி செய்கிறான் என்றால், குடிகள் நிலை மிகவும் வருந்தத்தக்க நிலையே. அவர்கள் தம் ஆற்றாமை யால் கண்ணீர் விட்டுக் கதறித் துடிப்பர். அக்கண்ணீரே அவன் செல்வத்தைத் தேய்த்தழிக்கும் ஆயுதமாக அமையும். குடிகள் மனமும் அவனிடமிருந்து சிறிது சிறிதாக விலகிப் போய் விடும்.

மன்னர்கள் புகழை நிலை பெற்று நிலைக்க வைப்பது அவர் தம் செங்கோலே. அஃதில்லையேல் அவர்களுக்குப்

புகழே நிலை பெற்று நிற்காது. மழை இல்லாமல் போகுமானால் உலகம் எப்படி வாடிப் போகுமோ, உயிர்கள் எப்படிப்பட்ட துன்பத்துக்கு உள்ளாவார்களோ, அப்படியே வேந்தனுடைய கருணையில்லாத நாட்டில் வாழும் குடிமக்கள் மிகவும் வாடுவர்; துன்புறுவர். அப்படிப்பட்ட நீதி அற்ற கொடுங்கோலன் ஆட்சிக்குட்பட்டிருக்கும் செல்வந்தன் நிலையும் மிகவும் இரங்கத்தக்கதே. பிற நல்லாட்சி அமைந்த வேற்று நாட்டிலே வசிக்கும் வறிஞனின் நிலையை விட மேற்சொன்ன செல்வந்தன் நிலையும் அவல நிலையே என்க.

கொடுங்கோலாட்சி நடத்தும் மன்னவன் நாட்டில் பருவ மழையும் பெய்யாது பொய்த்துப்போம். காத்தலைச் செய்ய வேண்டிய மன்னன் கொடுங்கோன்மையால் மக்களைக் காப்பாற்றாக் காலை, அந்நாட்டிலுள்ள பசுக்களும் பால் தரா. அந்தணர்களும் தங்கள் அறநூலை மறந்து வேறு வகை அதர்மப் பணிகளில் ஈடுபடுவார்கள்; தொழில் செய்பவர்களும் தங்கள் கடமையை மறப்பர்.

## 70. வெருவந்த செய்யாமை

ஆளும் அரசனோ கட்சித் தலைவனோ மூத்த குடிமகனோ யாவராயினும் தம் குடிகள் அஞ்சத்தக்க, தம்மிடம் பணியாற்றும் அமைச்சரும் பிறரும் அஞ்சத்தக்க, தானே அஞ்சத்தக்க, தீய செயல்களைச் செய்யாமலிருப்பதே வெருவந்த செய்யாமையாகும்.

நீதிவழுவாமல் தான் ஆளும் காலத்திலே, மெலியாரை வலியார் துன்புறுத்திய காலத்தில், தக்கவாறு அக்குற்றங்களை நடுநிலையில் ஆராய்ந்து மீண்டும் அக்குற்றம் நேராதபடி அக்குற்றத்திற்கேற்ற தண்டனை விதிப்பவனே அரசன் என்னும் பெயருக்குப் பொருத்தமானவன். மற்று அதுவும்

அவன் தண்டனை தருங்கால், கடுமையாகத் தண்டிப்பது போல் தோன்றலாகாது. அளவு மீறாமல் தண்டிப்பது ஒன்றே, தன் ஆட்சிச் செல்வம் தன்னைவிட்டு நீங்காமலிருக் கும் நெறிஆகும். ஏனெனில் குடிகள் அஞ்சத்தக்க கொடுமை கள் பல செய்யும் அரசன், ஒரு கொடுங்கோலன். அவன் உறுதியாக விரைவிலே கெட்டழிவான். "நம் அரசன் கொடியவன்" எனக் குடிகளால் தூற்றப்படும் அரசன் ஆயுளும் கெட்டு, செல்வமுமிழந்து விரைவில் அழிவான்.

தம் குறைகளைக் கூறவந்த குடிகளைக் காண வாய்ப் பளிக்காதவனும், கடுகடுப்பான முகத்தை யுடையவனுமான அவனது அரசபோகம், பேய் காத்த புதையலைப்போலவே அவனுக்கும் குடிமக்களுக்கும் பயன்படாது. மேற்கூறிய தீக்குணங்களோடு கடுஞ்சொல் பேசி, தாட்சண்யமும் இன்றி, அவ்வரசன் அமைந்துவிட்டாலோ, அவனது அரச போகமாம் பெருஞ்செல்வம் நீடித்தல் இன்றி உடனே அழிவது திண்ணம். ஏனெனில் கடுமையான மொழியும், அளவுக்கு மீறிய தண்டனையும், அவன் பெற்றிருக்கும் பகைவரை வெல்லும் வலியைத் தேய்த்து அழிக்கும் அரம் போன்றவையாகும்.

தன் இனமான ஆட்சிக் குழுவுடன் கலந்து ஆலோசிக் காதவன்,ஆட்சி நடத்தி அதனால் பிழை நேர்ந்த காலத்தில் தன் மந்திரி பிரதானிகளின்மேல் பழி சுமத்தி அவர்கள்மேல் வெகுண்டு தன் ஆளுகையைச் செலுத்துவானானால் அவனது அரச போகமான திரு, நாள்தோறும் சுருங்கி அழியும்.

தனக்கு உரிய பாதுகாப்பான அரணையும், படை அமைச்சு முதலிய தற்காப்பையும் செய்து கொள்ளாத வேந்தன், போர் நேர்ந்த காலத்தில் யாதொரு தற்காப்பு மின்றி அஞ்சி விரைவில் அழிவெய்துவான். இவ்வண்ணம் பிறர் அஞ்சத் தக்கவாறு கொடுங்கோலைச் செலுத்தும் ஒரு மன்னனுக்குத் துணை நிற்பவர்கள்,அறநூல் நீதிநூல்களைக்

கல்லாதவரே ஆவர். அக்கூட்டம் தான் இந்தப் பூமிக்குப் பெரும் பாரமே ஒழிய அவர்களால் மக்கட்குப் பயன் ஏதும் இல்லை.

## 71. கண்ணோட்டம்

கண்களிலே இயல்பாகக் கசியும் கருணை நோக்கமே கண்ணோட்டம் எனப்படும். அரசன் செங்கோல் முறை தவறாமல் செலுத்தவேண்டிய காலத்திலே, கண்ணோட்டம் செய்க என்றாராயினும், மன்னிக்கத்தக்க சிறு குற்றங்கள் கண்ட காலத்திலும், மற்றும் அவரால் அரசியலுக்கு ஆற்ற வேண்டிய தொண்டுகள் பல கண்ட காலத்திலும், அரசன் தாட்சண்யத்தோடு பொறுக்க வேண்டியதைப் பொறுத் தருள் செய்வதற்கே கண்ணோட்டம் தேவை என்பதாம்.

இவ்வுலகம் நிலைபெற்றிருக்கிறது; உலகம் நடை பெறு கிறது, என்றால் இங்கும் கண்ணோட்டம் என்னும் பேரன்பாம் அழகு நிலவுகின்றதாலேயே என்பது பெறப் படும். இக் கண்ணோட்டமே உலகியலாகும். இது இல்லாதவர் இருந்து வாழ்வது பூமிக்குப் பாரமே ஆகும். பாட்டொடு பொருந்தாத பண்(ராகம்) எப்படிப் பயன் அற்றதோ, அப்படியே கண்ணோட்டமில்லாத கண்களும் பயனற்றனவே. தக்க அளவோடு கண்ணோட்டம் அமையாத கண்களைப் பெற்ற முகத்தில் கண் உண்டு என்பதல்லாமல் வேறு பயனே இல்லை. ஏனெனில் கண் களுக்கு ஆபரணமாக விளங்குவது கண்ணோட்டமே. அஃதில்லாத கண்கள் கண்களே அல்ல; புண்களே. எனவே கண் பெற்றிருந்தும், கண்ணோட்டமில்லாத மாந்தர்கள் மண்ணிலே நிலைத்து நிற்கும் மரம் போன்றவர்களே அல்லாமல் மக்களே அல்லர்.

ஆகையினால் கண்ணோட்டம் இல்லாத மாந்தர்கள் கண் அற்றவர்கள் என்பதும், உண்மையிலே கண்ணுள்ளவர்

களாயின், அவர்கள் கண்ணோட்டத்தோடு விளங்குவார் என்பதும் பெறப்படும்.

ஆனால் இந்தக் கண்ணோட்டத்தினால், நாம் நம் கடமை அழியாமல், சிதைந்து விடாமல் பார்த்துக் கொள்ளல் வேண்டும். உலகிலே தாட்சண்யத்தினால் பல நல்ல செயல்கள் சிதைந்து விடுவதைக் காணலாம். அங்ஙன மின்றி நம் கடமைகளுக்கு அழிவு வராமல் கண்ணோட்டத் தோடு ஆளவல்ல அரசனுக்கு அருமையான பொருள் இங்கு ஒன்றுமே இல்லை. எனவே தண்டிக்க வேண்டியவரிடத்தும் கூடியவரை மன்னிக்கக் கூடிய குற்றமானால் பொறுத்தருளும் பண்பாடே சிறந்ததாகும்.

இக்கண்ணோட்டத்தையே நாகரிகம் என்று சொல் கிறோம். நஞ்சொத்த, தாம் விரும்பி ஏற்காத, பிறவற்றை, தமக்குத், தம் உரிமையாலோ, நட்பாலோ தம்மிடம் தொடர்புள்ளவர்கள் பெய்து அளித்த காலையும் அவற்றை உண்டு அவர்களோடு பழகுபவர் மிக்க நாகரிகம் வாய்ந்து விளங்கும் பண்பாளர்கள் என்றால், இக்கண்ணோட்டத்தின் பெருமைதான் என்னே!

## 72. ஒற்றாடல்

முகத்திலே இயல்பாக அமைந்துள்ள கண்களிலே கண்ணோட்டம் பொருந்தி இருப்பதோடு வேறு இரு கண் களையும் அரசன் பெற்றிருக்க வேண்டும். அவைகளில் ஒன்று, ஒற்று, மற்றொன்று புகழ் வாய்ந்த அரசியல் நீதி நூல். மன்னவன் கண்களுக்கு, மறைந்துள்ளவற்றைத் தெளி வாகக் காட்டுவன, ஒற்றும் அரசியல் நூலுமே. ஆகையால் அரசன் இவைகளைத் தன் கண்ணெனத் தெளிதலே நன்று. தன் நாட்டினுள்ளும் பிற நாட்டினுள்ளும் உள்ள எல்லா இடத்தும் நிகழ்பவை யாவற்றையும் நாள்தோறும் ஒற்றன் மூலம் விரைந்து அறிதலே, வேந்தனது தொழிலாகும்.

அப்படி ஒற்றர்களால் அறிந்த பின்னும், அவற்றின் பயனை நன்கு ஆய்ந்துணராத மன்னவன் தன் பகைவர்க்கு எளியன். ஆதலால் பிறரை வெற்றியடையும் வழி வேறு ஒன்றுமே அவனுக்கு இல்லை.

இனி ஒற்றர்கள் தன்மை, குணம், உருவம் முதலியன எவ்வண்ணம் அமைய வேண்டும் எனில், தன்னிடம் பணியாற்றுபவர், அரசில் பெரும் பதவி வகிப்பவர்கள் ஆயினும், அவரையும், தன் சுற்றத்தாரையும், பகைவரையும் மற்றும் பிறரையும், அவர் தம் சொல்லாலும் செயலாலும் ஆராய்பவனும், பிறர் கண்டு ஐயப்படாத வகையிலே உருவத்தையும், உடைமையையும், உடையையும் மாற்றி, ஒருக்கால் பிறர் இவன் ஒற்றனோ எனக் கண்டு கொண்ட போதும் அதற்கு அஞ்சாதவனும், பகைவர்களின் எப்படிப் பட்ட உபாயத்தாலும், தன் உள்ளத்துள் புதைந்துள்ள இரகசியத்தை வெளியிடாதவனும் ஆன அவனே ஒற்றன் எனத் தக்கவன். துறந்தவர் வடிவத்தோடு பல அரிய இடங்களுள் சென்று ஆராய்பவனும், ஒருக்கால் பிறர் தம்மைக் கண்டுபிடித்து அடித்துத் துன்பம் செய்தாலும் தன்னை ஒற்றனென வெளிப்படுத்தாதவனுமான அவனே ஒற்றன். மறைவாகச் சொல்லப்பட்டவை, செய்யப் பட்டவைகளைக் கேட்கவும் அறியவும் வல்லவனும், அப்படி அறிந்தவைகளைப் பின்னர் ஐயப்பாடில்லாமல் துணிய வல்லவனுமான அவனே ஒற்றன்.

இங்ஙனமாக ஓர் ஒற்றன் தான் அறிந்து வந்த செய்தியை தன் அரசனிடம் கூறினால் அரசன் அப்படியே அதைக் கொள்ளுதல் தீது. அச் செய்தியையே மற்றோர் ஒற்றனைக் கொண்டு முன்னவன் அறியா வகையில் உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். இவ்விரு செய்திகளையும் மூன்றாமவனால் ஒருவனை ஒருவன் அறியாமல் நிச்சயப்படுத்திக் கொள்ள வேண்டும். இதுவே நன்மை பயக்கும்.

இப்படிப்பட்ட ஒற்றர்களால் நாட்டுக்கும், அரசனுக்கும் உண்டாகும் நன்மை பலவேயாயினும் அவனுக்கு, அரசன்

தான் செய்யும் சிறப்பினைப் பலர் அறியுமாறு செய்தல் கூடாது. அப்படிச் செய்தால் "அவன் ஒற்றன்" என்பதை யும் அவன் ஆராய்ந்து கூறியவை இவை என்பதையும் பலர் அறிய, தானே இரகசியத்தை வெளிப்படுத்தியவாறு ஆகும்.

## 73. ஊக்கமுடைமை

எவ்வகைச் செயலாற்றலுக்கும் தேவைப்படுவது ஊக்கமே. இதுதான் உள்ளத்தளர்ச்சி இல்லாமல் எழுச்சி யோடு செயலாற்றலாகும். இந்த ஊக்கம் இல்லாது வேறெவ்வகைச் செல்வம் பெற்றவர் யாவரேயாயினும் அவர்கள் யாதும் இல்லாதவரே. எனவே உடையவர்கள் என்று சொல்லப்படுபவர்கள் ஊக்கம் உடையவர்களே. மற்றுப் பொருளுடைமையோ ஒருவனிடம் நிலை பெற்று நில்லாமல் நீங்கும் தன்மை உடையது. இந்த ஊக்கமாகிய பெருஞ்செல்வத்தைத் தம் கைப் பொருளாக உடையவர்கள் யாங்கள் "அனைத்தும் இழந்து விட்டோமே" என்று எக்காலமும் வருந்தார்கள். ஏனெனில் உள்ளம் உடைமை யாகிய ஊக்கமே ஒரு செல்வம். அது மட்டுமன்று அது நம் செல்வத்தையும் இழக்காமல் காக்கும் ஒரு சக்தியும் ஆகும். அதோடு வேறு பிற செல்வங்களனைத்தும் ஊக்கம் உடையவன் உள்ள இடத்திற்குத் தாமே வழி கேட்டுக் கொண்டு அவனைச் சென்றடையும்.

உள்ளமுடைமையாகிய இந்த ஊக்கத்தால் மாந்தர் அடைவதும், காப்பதும் செல்வம் மட்டுமா? எனில் இல்லை. உள்ளம் எந்த அளவு உயர்ந்தும், ஊக்கம் எவ்வளவு ஓங்கியும் உள்ளதோ, அந்த அளவு உயர்ச்சியையே மாந்தர் தம் வாழ்விலே அடைவர். தாமரை மலரின் நீளம் அது பூத்து விளங்கும் குளத்து நீரின் அளவினதே அல்லவா? அதைப் போலவே உலகில் நாம் அடையும் உயர்வும் நம் ஊக்கத்தின் அளவினதே, எனவே நம் சிந்தனைகள் நம் குறிக்கோள்கள்

அனைத்துமே உயர்வானதாகவே அமைதல் நன்று. இந்த உயரிய குறிக்கோள்களை நாம் எய்த முடியாமல் போய் விடினும் அதனால் ஏதும் தாழ்வில்லை. அதை நாம் எய்திய தையே ஒக்கும்.

மற்றும் ஊக்கம் உடையவர்கள் தாம் கருதிய உயர்ச்சிக்குத் தடையாக ஏற்படும் இடையூறுகளால் துன்புற்ற காலத்தும், உடல் முழுவதும் அம்புகளால் தைக்கப் பட்டுத் துன்புற்ற யானை, தளராமல் எவ்வண்ணம் தன் பெருமையை (கம்பீரத்தை) நிலை நிறுத்துமோ, அவ்வண்ணமே மனந்தளர மாட்டார்கள். மாறாக இத்தகைய ஊக்கம் அற்றவர்களோ இவ்வுலகில் யாங்கள் வண்மையுடையோம் (ஈகைக்குணம் உடையோம்) என்னும் பெருமதிப்பை, சுய கவுரவத்தை அடையக் கொடுத்து வைக் காதவர்கள் ஆவர்.

எனவே, எவ்வளவு செல்வமும் படையும், பலமும், துணையும் உடைய பெரிய அரசனே ஆயினும் ஊக்க மற்றவன், பேருடம்பும் கூரிய தந்தமும் உடைய யானை தன்னைப் புலி எதிர்க்கும் காலத்தில் பயந்து நடுங்குவதைப் போல, பிற ஊக்கமுடைய எளிய அரசர் முன்னேயும் நடுங்கு வான். ஆகையினால் ஒருவனுக்கு ஈடில்லாத செல்வமாக விளங்குவது அவனுடைய ஊக்க மிகுதியே ஆகும். அதைப் பெறாதவர்கள் மரமே ஆவர். அவர் உருவம் மட்டுமே மனித உருவாகும் என்க.

# 74. மடியின்மை

தாம் கருதிய கருமங்களைச் செய்யும் காலத்திலே இடையில் சோம்பலால் செயலற்றிருக்கும் தன்மையே மடி ஆகும். ஊக்கம் உடையவனும், சில நேரங்களில் சோம்பல் வயப்படுவான். ஆகையினால் இச்சோம்பல் நம்மிடமிருந்து களையப்பட வேண்டிய ஒன்றாகும். இந்தச் சோம்பல் மாசு படியப் படியத் தான் பிறந்த குடி என்னும் ஒளிகுறைவு படா மாணிக்கம் தன் ஒளியில் குன்றிக் கெடும். எனவே, தான் பிறந்த குடும்பத்தை ஒருவன் மேன்மேலும் உயர்ந்த நற்குடியாக ஓங்கி விளக்கமுறச் செய்ய வேண்டுமானால், சோம்பல் தன்னிடம் அணுகாமல் முயன்று ஒழுகல் வேண்டும். ஏனெனில் தன்னையே அழிக்கும் சோம்பலைப் பூண்டு ஒழுகும் அறிவிலியின் குடும்பம் அவன் கண் முன்னேயே அழியும். அங்ஙனம் மடியால் குடி அழிவது மட்டுமன்று. அந்த மடியால் தன்னிடம் மாட்சியுற்ற முயற்சி யில்லாமையால், தன் வாழ்க்கையிலே குற்றங்கள் பலவும் பெருகும்.

எனவே, இவ்வுலகில் கெட்டொழியும் தன்மை வாய்ந்த வர்கள், வாழ்க்கைக் கடலைக் கடக்கத் தாம் விரும்பி ஏறு கின்ற மரக்கலம் யாதெனில் நெடுநீர்மை, எனும் காலம் தாழ்த்தலும், மறதியும், சோம்பலும், துயிலும் ஆகிய இந்த நான்குமே ஆகும். ஒருவனுக்கு இந்த நில உலகை ஆளும் அரசனின் உறவும் வலியத்தானே வந்து கிடைக்குமானாலும் அவன் சோம்பல் மிகுந்தவனாயின் அவ்வுறவால் அவன் எவ்விதமான மாட்சிமை மிக்க பயனையும் அடைதல் இல்லை. அத்தோடு சோம்பல் மிக்கவராய்ச் சிறப்பு மிக்க முயற்சி இல்லாதவர்களை அவர் தம் நண்பர்களும் தம்முன் இடித்து நல்லுரை கூறிப் பின் இழித்துரைக்கவும் செய்வர். மற்று இச்சோம்பல்தான் நல்ல குடிப்பிறந்தவனிடத்தே அமைந்திருக்குமானால், அது அவனைத் தம் பகைவர்க்கு அடிமையாக்கும் நிலையினை உண்டாக்கும்.

ஆகையால், எவன் ஒருவன் தன்னிடமுள்ள சோம்பலை உதறித் தள்ளி ஆண்மையோடும் ஊக்கத்தோடும் செயலாற்ற முற்படுகிறானோ அவனுடைய குடியிலும் ஆண்மையிலும் இதுவரையில் பொருந்தியிருந்த குற்றங்கள் யாவும், நீர்ந்து அக்குடி சிறப்பெய்தும். அதோடு திருமால் திருவிக்கிரமனாகி தன்னுடைய காலடியால் ஒரே தாவாகத் தாவி அளந்த இந்த உலகப் பரப்பு முழுமையும் கூடத் தான் அடைய வேண்டின் சோம்பலில்லாத அரசனே அதை ஒருசேர அடைய முடியும்.

## 75. ஆள்வினையுடைமை

தனிமனிதனாயினும், சமுதாயமாயினும், அரசனா யினும், தான் எடுத்துக் கொண்ட வினையின்கண் இடை விடாத மெய்ம் முயற்சியுடையவன் ஆதல் வேண்டும். அதுவே ஆள்வினையுடைமையாகும்.

எடுத்துக் கொண்ட தொழிலின் பெருமையையும் தன்னுடைய பலவீனத்தையும், சீர்தூக்கி இது மிகவும் கடினமான தொழிலெனத் தளர்ச்சியிலன் ஆதலே நன்று. அந்தத் தொழிலை முடித்தற்கண் பெருமையையும் நன்முயற்சியே உண்டாக்கி விடும். ஏனெனில் தாம் செய்ய எடுத்துக் கொண்ட தொழிலை இடையிலே தளர்ந்து கைவிட்டவர்களை உலகமே கைவிட்டுவிடும். ஆகையினால் எடுத்துக் கொண்ட வினையாற்றலை இடையிலே கை விடுவதை ஒழித்தல் வேண்டும். இங்ஙனம் இடைவிடாது தொழிலிலே எடுத்துக் கொள்ளும் முயற்சி என்னும் உயர்ந்த குணத்திலே தான் பிறர்க்கு உபகாரம் செய்தல் என்னும் மேம்பாடு நிலை பெற்று நிற்கும். ஆகை யினால் இந்த முயற்சி என்னும் மேன்மையில்லாதவனிடம் பொருந்தியுள்ள உபகாரத்தன்மை நிச்சயமாகப் பேடிகை

யிலே அகப்பட்ட வாளாண்மையைப் போலப் (வாள் ஆளும் தன்மைபோல்) பயனின்றிக் கெட்டொழியும்.

தனக்காக இன்பத்தை விரும்பாமல் (தன்னல மற்ற), தான் எடுத்துக் கொண்ட வினையை நன்கு முடித்தற்கு விரும்புகிறவன் எவனோ, அவன் தன் சுற்றத்தாரின் துன்பங்களைத் துடைத்து ஊன்றுகின்ற தூண் போன்றவன் ஆவான். எனவே முயற்சி ஒன்றுதான் ஒருவனுக்குத் திருவாகிய நற்செல்வத்தை உண்டாக்கும். ஆனால் முயற்சி இல்லாத சோம்பலோ அவனை வறுமையுள்ளே ஆழ்த்தும். இக்கருத்தே, சோம்பலிலே கருமை நிறமுடைய மூதேவி வாழ்கிறாள் என்றும் முயற்சியிலே தாமரை மலராள் ஆகிய சீதேவி வாழ்கிறாள் என்றும் கூறப்படுகிறது.

எனவே, ஒருவனுக்கு ஊழ்வலிமை இல்லை, என்று சொல்லப்படுவது பழியே அன்று. அறிய வேண்டியவைகளை எல்லாம் அறிந்து முயன்று வினையிலன் ஆக வாழ்வதே பழியாகும். இந்த முயற்சியை உடையவன் விதியினால்— தெய்வவல்லமையினால் மிகுந்த நன்மையை அடைய முடியாவிடினும் தன் மெய் வருந்த அதற்கேற்ற ஊதியத்தைக் கட்டாயம் அடைவான். ஆகையினால் சோர்வில்லாமல், தாழ்வில்லாமல் முயற்சி செய்பவர்கள் மேற்கூறிய விதியைக் கூட புறமுதுகிட்டோட வைப்பார்கள் என்பது நிச்சயம்.

# 76. இடுக்கண் அழியாமை

இனி இவ்வண்ணமாக முயற்சி செய்யும் ஒருவனுக்கு ஊழ்வலியாலாவது, பொருள் இல்லாமையாலாவது, உடல் வருத்தத்தினாலாவது துன்பம் நேர்ந்த காலத்தில் அதற்காக அவன் மனம் கலங்காமை வேண்டும். மேற்கூறிய பல இடையூறுகளுள் யாதானு மொன்றால் ஏற்படும் துன்பம் ஒருவனுக்கு வந்தால், அதைக் கண்டு உள்ள மகிழ்ச்சியோடு சிரித்தல் வேண்டும். ஏனெனில் அத்துன்பத்தைத் தொடர்ந்து எதிர்த்து வெல்ல வல்லது அம்மகிழ்வே.

அந்த வகையில் தன்னையே அடித்துச் செல்லத் தக்க ஆற்று வெள்ளத்தைப் போன்ற துன்பமும், அறிவுடைய ஒருவன் தன் உள்ளத்தினால் உறுதியோடு சிந்தித்துப் பார்த்தால் அழிந்து விடும். அங்ஙனமாகத் துன்பத்துக்கு வளைந்து கொடுக்காமல் எதிர்த்து நிற்பவர் தாம் அத்துன்பங்களுக்கே துன்பம் செய்தவர்கள் ஆவார்கள். இவர்களைக் கண்டு அத்துன்பமே பயந்து நடுங்கிவிடும்! விட்டு விலகும்.

எனவே, மேடு பள்ளம், களர் எனும் தடை ஏற்படும் இடத்திலெல்லாம் வண்டியை வலிவோடு இழுத்துச் செல்லும் எருதைப் போன்றவனுக்கு ஏற்படும் துன்பம் தானே இடர்ப்பட்டு விலகும். அதலால் மேலும் மேலும் அடுக்கடுக்காகத் தாக்கும் துன்பம் வந்துற்றாலும் உள்ளம் சிறிதும் அழியாதவன் உற்ற துன்பம், அங்ஙனமே இடுக்கணுற்று அழிந்து விடும்.

இனி, பொருள் இல்லாக் காலத்தில் தாம் உற்ற இடர்ப்பாடுகளால், ஆ! ஆ! இந்த வறுமையால் அல்லவா இந்தத் துன்பம் நமக்கு வந்தது? என்று வள்ளலாய் வாழ்ந்தோர் வருந்தார்.

ஏனெனில் செல்வந்தராய்த் தாம் இருந்த காலத்தில் அச்செல்வத்தைப் பேணாது, காப்பாற்றாமல், பலர்க்குத்

தாம் உபகரித்த காரணத்தினால், செல்வமும் வறுமையும் மாறிமாறி வரும் என்றும் உணர்ந்ததால் அவர்கள் இல்லாமைக்காகச் சிறிதும் வருந்த மாட்டார்கள். அதோடு இந்த உடல்தான் துன்பத்துக்கே நிலைக்களன் ஆனது என்பதை நன்கு உணர்ந்த மேலோர்கள், தாம் துன்பம் அடைந்த காலத்தில் அதற்காகச் சிறிதும் கலங்க மாட்டார்கள்.

இவைகளால் நாம் அறிவது யாதெனில் மெய் வருத்தத்திற்குக் காரணம் அறியாமையே ஆகும். எவன் ஒருவன் இன்பத்தைத்தேடி அலையாமல், துன்பம் ஏற்பட்டால் அது இயற்கை என்று கருதுகிறானோ அவனையும், இன்பம் ஏற்பட்ட காலத்தும் அதை அனுபவித்தவாறே உள்ளத்தைச் சிறிதும் அதில் ஈடுபடுத்தாமல் விலகி நிற்கிறானோ அவனையும், துன்பம் ஒருக்காலும் தீண்டவே தீண்டாது. மற்றும் தான் வினை செய்யும் காலத்திலே வரும் துன்பத்தையே இன்பமாக எவன் கருதுகிறானோ, அவன் தன் பகைவரும் மதித்துச் சிறப்பிக்கும் பெரும் சிறப்பினை அடைவான்.

## 77. அமைச்சு

இனி அரசியல் நடத்தும் காலத்தில், அரசனுக்கு உறு துணையாக நிற்க வேண்டிய அமைச்சர்கள் இலக்கணம் என்ன என்பதைப்பற்றி ஆராய்வோம்.

அமைச்சர் (மந்திரி) என்னும் தகுதிக்கு உரியவன் யாரெனில் அரசியலில் மேற்கொள்ள வேண்டிய தொழில்களுக்குத் தக்க கருவிகளும், செய்ய வேண்டிய காலமும், செய்யும் வழிவகையும், செய்யப்படும் அரிய செயலும் வாய்க்கும்படி ஆராய்பவனாகி, செயலாற்றும் காலத்தில் சோம்பலற்று, அஞ்சாமையுடன், தன் கீழ் உள்ள குடிகளைக் காக்கும் திறனோடு கற்றறிந்த அரசியல் அறிவும் நன் முயற்சியும் உடையவன் எவனோ அவனே அமைச்சன். அதோடு

பகைவர்களுக்குத் துணை நின்றோரைப் பிரித்தலும், தனக்குத் துணை நின்றோரைப் பாதுகாத்தலும், தம்மிடம் மாறுபட்டு விலகிச் சென்றோரை மீண்டும் சேர்த்துக் கொள்ளும் வல்லமையும் உடையவன் எவனோ, அவனே அமைச்சன் ஆவான். அவன் பல வகையிலும் தான் மேற் கொண்ட செயலாற்றலை ஆராய்தல் வேண்டும். ஆராய்ந்து, பின்னர் அதைத் தேர்ந்தெடுத்துச் செய்தலும், துணிவோடு தன் கருத்தைப் பிறர்க்கு எடுத்துச் சொல்லலில் வல்லவனாய், திட்பம் உடையவனாய் விளங்குபவனே அமைச்சன் ஆவான்.

இப்படிப்பட்டவன் தன் அரசன் ஆற்றும் அரச நீதியினை (அரசியலை) நன்கறிந்து, கல்வியால் நிறைந்து அமைந்த சொற்களை உடையவனாய்ச் செயலாற்றும் திறனை எக்காலமும் அறிந்திருப்பின் அவனே அரசனுக்குத் துணையாவான். இவ்வளவு சிறப்பும் இயற்கையாகிய அரசி யல் நுண்ணறிவும் அமைந்த அமைச்சனுக்கு, மிக்க நுட்பத் தினை உடையதாய் அவனை எதிர்த்து நிற்கும் பகைவர் சூழ்ச்சி ஏதுமில்லை.

இனி நூலறிவால் வினையாற்றுந்திறன் அறிந்தவனா யினும், உலக இயல்பினை அறிந்து அதற்குத் தக்கவாறு பொருந்த நடத்தல் அமைச்சனது கடமை. அரசன் தானும் உணரானாய், பின் நிகழ்வதை முன்னுரைக்கும் அறிவோர், அமைச்சர்கள் சொற்களையும் மேற்கொள்ளாதவனாய் அமைச்சனை அவமதித்த காலத்திலும், அமைச்சன் அரச னுக்கு உறுதிபயக்கும் உரைகளைக் கூறுதலே அவன் கடமை ஆகும்.

எந்த ஒரு அமைச்சன் தன் அரசனுக்கு நன்மை உண்டா வதை விலக்கித், தீமை பயக்கும் துர்ப்போதனைகளைச் செய்கிறானோ, உட்பகையாய்த் தவறு எண்ணுகிறானோ, அப்படிப்பட்ட அமைச்சனைவிட எழுபது கோடி பகைவர்

களே மேம்பட்டவர்கள் ஆவர். முறையாக ஆராய்ந்து முடிவு செய்திருந்தும் செயலாற்றும் போது அரை குறையாகச் செய்யும் அமைச்சரும், செய்திறன் இல்லா அமைச்சரும் விலக்கத் தக்கவரே ஆவர்.

## 78. சொல்வன்மை

அரசனுக்குத் துணை நிற்கும் அமைச்சன், சமுதாயத்துக்கும் நாட்டுக்கும் தொண்டாற்றும் தலைவன், ஆகியவர்களுக்கும், குடிமக்களுக்கும் தம்மிடம் குறையில்லாமல் பெற்றிருக்க வேண்டிய நலன், சொல் வன்மையே ஆகும். இதுவே ஒருவன் எண்ணத்தினது தெளிவை விளக்கும் கருவி ஆகும்.

நாவினது நலம் (சொல்வன்மை) என்று சொல்லப்படும் செல்வமே உண்மையான செல்வம் ஆகும். அவ்வாற்றல் தான் வேறு எவ்வகைச் செல்வத்துள்ளும் அடங்காத மேன்மையுடைத்து. சிறப்புடைய அச்சொல்லாற்றலால்-சொல்வன்மையினால், ஒருவனுக்குச் செல்வம் உண்டாகும். மாறாகச் சொற் சோர்வினால் கேடும் உண்டாகும். ஆகையினாலே நாம் உரையாடும் போது சொல்லில் சோர்வுண்டாகாதபடி காத்தல் வேண்டும்.

இனி, சொல்லின் இலக்கணம் யாதெனில் சொற்களை ஒருவன் பிறரிடம் பேசும் காலத்திலே அது கேட்டாரைத் தன்வயப் படுத்தும் பண்பினை அவாவி நின்று, கேளாரும் (பகைவரும்) விரும்பிக் கேட்கும் வண்ணம் திறமையுடன் பேசுவதே ஆகும். எனவே, சொல்லைப் பயன்படுத்தும் காலத்திலே சொல்லின் திறமறிந்து சொல்வதைக் காட்டிலும் சிறந்த அறமோ, பொருளோ வேறொன்றும் இல்லை. ஆகையினால் ஒருவன் சொல்லின் திறனறிந்து வாய்ச்சொல்லை வழங்குதல் வேண்டும். அங்ஙனம்

சொல்லாடும் காலத்திலும் வேறோர் சொல் நாம் கூறிய சொற்களை வெல்லும்படி அமையாமல், நாம் சொல்லுதல் வேண்டும். அதோடு நாம் நம் கருத்துக்களைப் பிறர்க்குச் சொல்லும்போது அவர்கள் நம் சொற்களை மேலும் மேலும் விரும்பிக் கேட்கும்படி சொல்வதோடு, பிறர் நம்மிடம் கூறிய சொற்களுள் பொதிந்துள்ள நுண்பயனை ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும். இதுவே குற்றமற்ற பெரிய வர்கள் துணிவு என்க.

தன் கருத்தைச் சொல்லுதலிலே பிறர் ஏற்கச் சொல்ல வல்லவனாய், சோர்வில்லாதவனாய், அவைக்கு அஞ்சாத வனாய் உள்ள ஒருவனைப், பிறர் பகைத்தும், மாறுபட்டும், வெல்ல முடியாது. அதோடு சொல்ல வேண்டியவைகளை முறைப்படுத்திக், கோவையாக, இனிமையாகச், சொல்ல வல்லவனிடம் உலக மக்கள் விரைந்து சென்று பணிகேட்டு அவனது ஏவலின்படி நடப்பார்கள்.

குற்றமற்ற சில நல்ல சொற்களில் தம் கருத்தைச் சொல்லத் தெரியாதவர்களே, பலபடக் கூறும் பயனற்ற சொற்களைக் கூற விரும்புவார்கள். மற்றும் தாம் கற்ற நூல்களிலே சொல்லப்பட்ட நல்ல கருத்துகளைப் பிறருக்குத் தெளிவாக விரித்துச் சொல்ல மாட்டாதவர்கள் கொத்தாக மலர்ந்திருந்தும் நறுமணம் வீசாத மலர்களுக்கு ஒப்பாவார்கள்.

## 79. வினைத் தூய்மை

சொல்லுதலில் வல்லவனாக ஒருவன் இருந்தால் மட்டும் போதாது. சமுதாயத்தில் உள்ள ஒவ்வொரு வனும் சிறப்பாக அமைச்சனும், தலைமைப் பீடத்தில் உள்ள வனும், தான் மேற்கொள்ளும் செயல்முறைகள் யாவும் தூயதாக அமையக் காணல் வேண்டும். ஏனெனில் செய்யப் படும் வினைகளாலேயே, பொருளேயன்றி, அறமும் புகழும் ஒருவனுக்கு உண்டாகும். எவ்வண்ணம் நல்ல துணைவரீ

களது உறவு செல்வத்தைத் தருமோ, அவ்வண்ணமே தூய வினையால் உண்டாகும் நன்மை அவன் வேண்டிய அனைத்துமே தரும். எனவே புகழும், நன்மையும் நமக்கு நல்காத வினைகள் நம் வாழ்வினிடையே குறுக்கிடுமானால், அவைகளை எக்காலத்தும் விலக்கி விடுதலே நம் கடமை. நாம் நம் வாழ்வில் ஒளிமிக்க புகழோடு விளங்க வேண்டும், என்னும் கருத்துடையவர்கள் ஒளி கெடத்தக்க தீவினை களைச் செய்யாதொழித்தல் நன்று.

இனி ஒருவன் ஏதாவது ஒரு துன்பத்திலே அகப்பட்டு வருந்தும் காலத்தில், அதைத் தீர்க்கும் பொருட்டு, ஏதாவது இழிதொழிலைச் செய்தாவது தீர்த்துக் கொள்ளலாமோ எனின், அது முறையன்று. நடுக்கமில்லாத தெளிவான அறிவை உடையவர்கள் அங்ஙனம் செய்யார். ஆகையினால் நாம் எந்த ஒரு செயலைச் செய்யப் புகுந்தாலும் செயலுக்குப் பின்னர், நாம் இப்படிச் செய்யலாமா? செய்து விட்டோமே! என இரங்கி வருந்தும்படியான செயலை ஒரு போதும் செய்தலாகாது. ஒருக்கால் சூழ்நிலையால் அங்ஙனம் பின்னர் இரங்கி வருந்தும்படியான செயல்களைச் செய்து விட்டால், மீண்டும் அதைச் செய்யா தொழிதலே நன்று. மற்றும் சூழ்நிலை காரணமாகத் தீவினை செய்தலை யும் தவிர்த்தல் வேண்டும். காட்டாக, தன் தாய் ஒருக்கால் பசியால் வருந்திய காலத்திலும் ஆபத்துக்குப் பாவமில்லை என நினைத்துத் தீவினையால் அப்பசியைக் களைய முற்படலாகாது. ஏனெனில், பழி பாவம் கலந்த தீவினை யால் வரும் செல்வத்தைக் காட்டிலும், தூய வினை யாற்றும் சான்றோர்கள் அனுபவிக்கும் வறுமையே மேலானதாகும். நிற்க,

அறநூல்களால் விலக்கப்பட்ட தீய செயல்களைப் பொருள் கருதித்தான் விலக்காமல், மேலும் மேலும் முயன்று அவைகளைச் செய்து முடித்தாலும் அதனால் ஒருவன் தீமையே அடைவான். ஏனெனில், பிறர் அழ அழத் தாம் கொண்ட செல்வம் அனைத்தும், நாம் அழ அழ நம்மை

விட்டுச் சென்றுவிடும். ஆனால் நல்வழி வந்த செல்வமோ முன்பு இழக்கநேரிட்டாலும் பிற்காலத்தில் நல்ல பயனையே தரும்.

எனவே, தீய வழியில் பொருள் ஈட்டி அதைக் காப்பது என்பது, பச்சை மண் பானையில் நீரைப் பெய்து அதைக் காப்பதுபோலப் பயனின்றாம். தண்ணீரும் பானையும் ஒரு சேரக் கெடுவது போல் தானும், தீய வழிவந்து சேர்ந்த பொருளும் ஒருங்கே கெடும் என்க.

## 80. வினைத் திட்பம்

தான் மேற்கொண்ட தொழிலினது முறையும், வகையும், தூய்மையானதாக அமையக் கண்ட ஒருவனுக்கு, அதைச் செய்து முடிக்க வேண்டிய மனஉறுதி தேவைப்படும். எனவே வினைக்குரிய திட்பம் என்று சொல்லப்படுவது வினையை முடிக்க வேண்டிய மனஉறுதியே. அந்த மனத்திட்பம் அல்லாத பிற படை, அரண் முதலிய திட்பங்களால் பயனே இல்லை. ஆகவே அவை வினைத்திட்பம் அல்ல.

இத்தகு வினைத் திட்பத்தோடு ஒருவன் செயலாற்றும் போது கவனிக்க வேண்டியவை இரண்டு. ஒன்று பழுதுண்டாம் வினைகளை நீக்க வேண்டும். மற்றொன்று எடுத்த செயலில் ஏதாவது பழுது ஏற்படுமானால் அது கண்டு தன் உள்ளம் தாழ்தல் ஆகாது. இதுவே நீதி நூல் ஆய்ந்தோர் துணிபு. அதுவேயுமன்றித் தான் மேற்கொண்ட செயலை முற்ற முடித்த பின்னரே வெளிப்படுத்தல் வேண்டும். அதுவே ஆண்மை. இடையில் அது வெளிப்பட்டால் அதனால் விளைவது துன்பமே ஆகும். ஏனெனில் செயலைச் செய்யும் முறைகளையும் வகைகளையும் சொல்லுதல் யார்க்கும் மிக மிக எளிதே. ஆனால் திட்டமிட்டபடி, தாம் சொல்லிய முறைப்படி அதைச் செய்து முடித்தல் மிக அரிது.

ஆகவே மேற்கண்ட எண்ணத்தால், உறுதி வாய்ந்த செயல் திறனால் சிறப்படைந்தவர்களின் வினைத் திட்பமானது நாடாளும் வேந்தனாலும் பிறராலும் நன்கு மதிக்கப்படும்.

உள்ளத்தின் உறுதிப்பாடே, நாம் மேற்கொண்ட செயலை முற்ற எய்துவிக்கும். எண்ணியவர்கள் உள்ளத் திண்மை கொண்டவர்களாக விளங்கினால் எண்ணிய செயல் யாவும் எண்ணியபடியே நன்கு முடியும்.

நிற்க. நம்மிடையே பழகும் பலரது வெளித் தோற்றத் தைக் கொண்டு நாம் அவர்களைத் தாழ்வாக மதிப்பிடுதல் ஆகாது. அவர்களாலும் பல அரிய செயல்களை ஆற்ற முடியும். அப்படிப்பட்டவர்கள் தேர்க்கு அச்சாணியைப் போன்றவர்கள். சமுதாயத்தில் அத்தகையோரும் பலர் உளர்.

இனி இங்ஙனம் உள்ளத்திட்பத்தோடு ஒருவன் ஒரு செயலை மேற்கொண்ட காலத்தில் அதைச் செய்யும் வழி வகை யாதெனில் தன் உள்ளம் கலங்காமலும், தான் தேர்ந் தெடுத்த செயலின்கண் சோர்வடையாமலும், காலம் தாழ்த் தாமலும், வினையாற்றுதல் மூலம் இடையிலே தனக்குப் பல இடையூறுகள், துன்பங்கள் ஏற்பட்டாலும், உள்ளத் துணிவையே துணையாகக் கொண்டு இறுதியில் இன்பம் தரும் நல்வினையை உறுதியாகச் செய்து முடித்தல் வேண்டும்.

ஏனெனில், எவ்வகைப்பட்ட வேறு பல உறுதிப்பாடுகள், வலிமைகள் அமைந்திருந்த போதிலும் மேற்கொண்ட செயலின்கண் மன உறுதி இல்லாதாரை இந்த உலகம் விரும்பி மதிக்காது ஆதலின் என்க.

## 81. வினை செயல்வகை

செய்யும் செயல் தூய தன்மை வாய்ந்ததாக ஆராய்ந்து, பின் அதைச் செய்ய உள்ளத்தினை உறுதி உடையதாக்கிய பிறகு, அவ்வினையை மேற்கொண்டு ஒருவன் செய்யும் திறனே வினை செயல் வகையாம்.

தான் செய்ய வேண்டிய தொழிலைச் செய்யும் வழி வகைகளை நன்கு ஆராய்ந்து, விளையும் நற்பயன் கருதி, எண்ணுவதின் எல்லை, அதைச் செய்யும் துணிவைத் தன் உள்ளம் பெறுவதே ஆகும். அதைப் பெற்ற பின்னும் செயலாற்றுவதில் காலம் தாழ்த்தினால், அது பிறரால் அறியப்பட்டு அதனால் குற்றமே உண்டாகும். எனவே தான் மேற்கொண்ட எத்தொழிலும் காலம் தாழ்த்திச் செய்ய வேண்டியதைக் காலம் தாழ்த்தியும், உடனே செய்ய வேண்டியதை விரைந்து செய்தும் முடிக்க வேண்டும் என்க.

அது மட்டுமன்று, தான் செயலாற்ற வேண்டிய காலத்தினால் தன்னால் இயன்ற அளவு—தன்னால் செய்யக் கூடியதை மட்டுமே—செயலாற்ற வேண்டும். அதுவே நன்மை பயக்கும். இல்லையானால் பயன்படும் இடத்தை நோக்கி முடியும் உபாயத்தை ஆராய்ந்து அதற்கேற்றவர் களிடம் வினை செய்ய விட வேண்டும்.

ஏனெனில் தொடங்கி முற்ற முடியாமல், இடையிலே விட்ட வினையாயினும், பகையாயினும் விட்ட குறையினால், அணைக்காமல் விட்டு விட்ட "தீ" பின்னர் மூண்டு தானே பற்றி எரிந்து அழிப்பதைப் போல நமக்குத் தெரியாமல் வினை, பகை இரண்டும் வளர்ந்து ஒருவனைக் கெடுக்கும். எனவே வினை ஆற்றத் தொடங்கு முன் தேவையான பொருள், ஏற்ற கருவி, தகுதியான காலம், மேற்கொண்ட தொழில் உரிய இடம் ஆகிய ஐந்தையும் தன் மனமயக்கம் தீர எண்ணி ஆய்ந்து, பின் அச்செயலைச் செய்யத் தொடங்குதல் சாலச் சிறந்தது.

இனி செயலாற்றும் போது அது முடிவதற்குத் தேவைப் படும் முயற்சி, அதற்கு இடையில் ஏற்படும் இடையூறுகள். முடிந்த பின் கிடைக்கும் பயன் இவைகளையும் நன்கு ஆராய்ந்து வினையாற்றுதலே முறையாகும். ஏனெனில் தொழில் செய்பவன் தான் செயலாற்ற வேண்டிய முறை, யாதெனில் அத்தொழிலின் உட்கிடக்கையை (இரகசியத்தை) அனுபவத்தால் அறிந்த ஒருவன் உள்ளக்கருத்தையும் உபாயத்தையும் தெரிந்து நன்கு ஏற்றுக் கொள்வதே ஆகுது

மற்றும் திறமை மிக்க ஒருவன் ஒரு செயலைச் செய்து முடிக்கும் போது அதன் சார்பாகிய மற்றொரு செயலையும் அதனோடு செய்து முடித்துக் கொள்ள வேண்டும். மதம் கொண்ட யானையை, மற்றோர் யானையைக் கொண்டு பிடித்தலைப் போன்ற திறம் இது. எனவே தொடங்கிய தொழிலால் அதைப் போன்ற தொழிலையும் முடித்துக் கொள்க என்பதாம்.

அதோடு தான் வினையாற்றும் காலத்திலே, தன் நண்பர்களுக்கு இனியவற்றைச் செய்து, அவர்களைத் தன் துணையாக்கிக் கொள்வது நல்லது. அதைக் காட்டிலும் தன் பகைவரைத் தன் வசப்படுத்தித் துணையாக்கிக் கொள் வதில் ஒருவன் விரைவு காட்டி அதை மேற்கொள்ளல் அதனினும் நன்று. ஏனெனில் வலி குறைந்த நாட்டு அமைச்சர்கள், தம்மின் வலிமிக்க அரசர் எதிர்த்த காலத்தில் தம் குடிமக்கள் பிறரால் அஞ்சப்படும் நிலை ஏற்பட்டால், வலிமிக்கவரைப் பணிந்து அவரைத் தம் தலைவராக ஏற்றுக் கொள்வர். ஆகையால் வலி குறைந்தும் தம் பகைவரையும் தம் வசப்படுத்துதல் நன்று என்பதாம்.

# 82. தூது

அரசனுக்கோ, மற்று நாட்டில் ஆட்சிப் பொறுப் பேற்றிருக்கும் தலைவருக்கோ அமைந்த அமைச்சனுக்கு அடுத்தபடி துணை நிற்பவன் தூதனே. அவன் பொருத் தலிலும், பிரித்தலிலும் வல்லவனாய் இருப்பான். தூதுவர் வகுத்துச் சொல்வோன், சொல்லியது சொல்வோன் என இரு வகைப்படுவர்.

அவன் நாட்டிலே மேற்கொண்டிருக்கும் தொழில், செயல், ஆற்றல்களில் வேற்று வேந்தரோ, பிறரோ குறுக்கிடின் அவர்களிடத்துச் சென்று, அமைதியோ, பிறவோ நாட்டுதல் தூதர் தொழில். அத்தூதுவனோ உள்ளத்திலே அன்புடையவனாய், மதிப்பு மிக்க நல்ல குடி யிலே தோன்றியவனாய், வேந்தனும் விரும்பி ஏற்கும் பண்புடையவனாய் இருத்தல் வேண்டும். அவனிடம் பொருந்தி அமைய வேண்டிய இன்றியமையாத குணங்கள் மூன்று. அவை தன் அரசனிடத்தில் அன்புடைமை, அவனுக்கு ஆகும் அவைகளை அறியும் அறிவுடைமை, வேற்று வேந்தரிடம் செல்லுங்கால் ஆராய்ந்த சொல் வன்மை ஆகிய இவையே.

வேலேந்திய வேற்றரசனிடம் தூது சென்று தன் அரசனின் வெற்றி தரும் வினையைச் சொல்பவனுக்கு இலக்கணமாவது, நல்ல அரசியல் நீதி நூல்களில் வல்ல அமைச்சரிடையே தானும் அவைகளில் வல்லவனாக இருத்தலே.

இனி இத்தகைய தூது செல்லும் வினைக்குத் தக்கவன் நல்ல அறிவுடையவனாய் அமைந்தால் மட்டும் போதாது. கண்டார் மதிக்கும் தோற்றப் பொலிவும், பலவாற்றானும் ஆராய்ந்த கல்வி அறிவும் பொருந்தியவனாய் அவன் அமைதல் வேண்டும். அத்தன்மையுடைய தூதன் வேற்ற ரசனிடத்திலே பல செயல்களைத் தொகுத்துச் சொல்லியும்,

தீய சொற்களை நீக்கியும், அவர்கள் மகிழும்படி சொல்லியும் தன் அரசனுக்கு நன்மை உண்டாக்குவனாயின் அவனே தூதருட் சிறந்தவனாவான்.

அது மட்டுமல்லாமல் கற்க வேண்டிய அரசியல் நூல்களை நன்கு கற்று, மாற்றாரின் பார்வைக்கு அஞ்சாமல், அவர் உள்ளத்திலே தான் உரைத்தவை நன்கு பதியச் சொல்லி, காலத்தோடு பொருந்தத்தக்க உபாயத்தை அறிபவனே நல்ல தூதன்.

தன் கடமையை உணர்ந்து, காலத்தையும் இடத்தையும் தக்கவாறு அறிந்து, செல்லவேண்டியவைகளை எண்ணி ஆராய்ந்து சொல்பவன், தூதருட் சிறந்தவனாவான். தூது செல்லும் ஒருவன் தானே தன் கருத்தில் உதித்ததைச் சொல்லவல்ல பண்புகள் இவைகளாம். இவைகளே வகுத்துச் சொல்லுவானது இலக்கணமாம்.

இனி அரசன் சொல்லிய வண்ணமே வேற்றரசனிடம் சென்று தூது உரைக்கும் தூதுவன், தூய்மையும் துணிவும் தன்னிடம் அமைய, அவ்வரசன் சார்பிலேயும் துணை உடையவனாய், இவற்றோடு வாய்மையுடையவனாய் இருப்பதாம். மற்றும் குற்றம் வாய்ந்த சொற்களையும், தன் அரசனுக்கு தாழ்வான சொற்களையும் பிற அரசனிடம் வாய் தவறியும் சொல்லாத உறுதியுடையவனாய் இருப்பவனே தூதன் ஆவான். இங்ஙனம் தூது உரைக்கும் தன்மையால் தன் அரசன் சொல்லிவிட்ட தூதன் வேற்றரசனிடம் சென்று உரைக்கத் தக்கவன், தன் உயிருக்கு இறுதி உண்டாயினும் அதற்கு அஞ்சிப் பின் வாங்காமல் தன் அரசனுக்கு நன்மை உண்டாமாறு அவன் சிறப்பை வேற்றரசனிடம் சொல்பவனே சிறந்த தூதன் ஆவான்.

## 83. மன்னரைச் சேர்ந்தொழுகல்

மன்னவனாயினும் மற்று எந்தத் தலைவனாயினும் அமைச்சர், பிரதானிகள், குடிகளிடம் கலந்து பழக வேண்டியவரே. தன்னிடம் கலந்து பழகும் மன்னனிடம், பிறர் எவ்வண்ணம் பொருந்தி இருக்கவேண்டும் எனின், குளிர்காயும் காலத்தில் எப்படி ஒருவன் நெருப்பை விட்டுச் சேய்மையில் விலகாமலும், மிக அண்மையில் செல்லாமலும் தீக்காய்கிறானோ, அப்படியே அரசனிடம் பக்குவமாகப் பழகுதல் வேண்டும். அதே நேரத்தில் அரசன் எதை மிகவும் இச்சிக்கிறானோ அதை அமைச்சனும் பிறரும் விரும்பாமல் விடுதல் வேண்டும். அத்தன்மை அவர்கட்கு நிலைபெற்ற செல்வத்தை நல்கும். தம்மிடத்தே மன்னனால் பொறுத்தற்கு அரிதான குற்றங்கள் வாராமல் தம்மைக் காத்தல் அமைச்சர்க்கு இன்றியமையாதது. ஏனெனில் அக்குற்றங்கள் அமைச்சர், பிரதானிகளிடம் வந்துற்றதாகக் கேள்வியுற்று ஐயுற்றால், மன்னன் மன்னர் நம்பிக்கைக்குத் தாம் பாத்திரமாகும்படி தெளிவிக்க ஒருவராலும் ஆகாது.

மற்றும்அறிவு சான்ற தலைவர் அல்லது அரசன் முன்னிலையிலே, தாம் பிறரிடம் இரகசியம் பேசுதலோ பிறர்முகம் நோக்கி நகைத்தலோ ஆகாது. அதோடு தலைவன் பிறரிடம் ஏதாவது தனித்துப் பேசும் மறை பொருளைத் தாம் செவி மடுப்பதும், அதைத் தான் அறிய வேண்டும் என்னும் ஆர்வத்தால் அரசனை முடுகி வினவுவதும் ஆகாது. ஒரு வேளை அரசனே சொல்ல வேண்டிய நேரம் வந்தால், தானே சொல்வானாகில் அப்போது மட்டுமே கேட்டல் வேண்டும்.

இனி அரசனுக்குத்தான் ஏதேனும் செய்தி சொல்ல வேண்டியிருந்தால் அவன் குறிப்பறிந்து, காலத்தை நோக்கி வெறுப்பில்லாதவாகிய கருத்துக்களை அவன் விரும்பும் வண்ணம் சொல்லி, பயனற்றவாகிய சொற்களை அவன்

ஒருவேளை கேட்பினும் சொல்லாமல் விட்டு விட வேண்டும்.

அரசனோ தலைவனோ தம்மின் இளையராகவோ சுற்றமாகவோ இருக்கலாம். வயதில் சிறியவன் தானே. உறவினன்தானே, என்று யாரும் எண்ணுதல் கூடாது. அரசன் என்ற மதிப்போடும் மரியாதையோடும் பழகுதல் நன்று. அதுமட்டுமின்றி அரசனால் நன்கு மதிக்கப் பட்டோமே என்றும் மயக்கத்தால் அவன் விரும்பாத செயல்களைச் செய்தலாகாது. செய்யாமல் விடுதலே நன்மை பயக்கும். மற்று அரசனோடு பழகிய நீண்ட நாள் பழக்கத் தால் அரசனின் பண்புக்குப் புறம்பான செயல்களைச் செய் யும் உரிமைதான் மந்திரிகளுக்குக் கேட்டை விளைவிக்கும்.

## 84. குறிப்பறிதல்

அரசனைச் சேர்ந்தொழுகும் காலத்தில் அரசன் குறிப்பைத் தான் அறிந்து ஒழுகுதல் மிக முக்கியமானது. அரசன் தான் வாய் திறந்து சொல்லாமலேயே அவன் உள்ளக் குறிப்பை அறிபவன் உலகினுக்குச் சிறந்த ஆபரணத்தைப் போன்றவன். ஒருவன் உளத்து நிகழும் மனக்குறிப்பினை ஒரு சிறிதும் ஐயப்பாடின்றி உணரவல்ல வனைத் தெய்வத்தோடு ஒப்ப எண்ணி அரசன் தேர்ந்து எடுத்துக் கொள்ள வேண்டும். இங்ஙனமாக அரசன் உள்ளக் குறிப்பை அறிந்து பிறர் கருத்தறியவல்ல அமைச்சன், தூதன் மற்றும் பிறரை, ஒரு அரசன், தன் நாடு, பொருள், படை முதலிய உறுப்பினைக் கொடுத்தாயினும் தன் துணையாகக் கொள்ள வேண்டும்.

மேற்குறிப்பிட்ட குறிப்பறிதலில் வல்லவனோடு கண் முதலிய உறுப்புக்களால் பிறர் ஒத்திருப்பினும் அறிவால் மேம்பட்டவரே. ஆகவே, பிறர் முகக் குறிப்பினா

லேயே அவர்கள் மனக்குறிப்பினை, குறித்தது காணவல்ல தம் கண்ணால் அறிய மாட்டாதவராயின், கண்கள் இருந்து தான் பயன் என்ன?

நிலைக் கண்ணாடி (பளிங்கு) தன்முன் நிற்கும் பொருள்களைத் தெள்ளத் தெளியக் காட்டுவதைப் போல, தன் நெஞ்சில் தோன்றும் உணர்ச்சிகளை முகமே தெளிவாகக் காட்டிவிடும். பிறரோடு நாம் மகிழும் காலத்தில் மலர்ந்தும், சினம் வருத்தம் கொள்ளும் காலத்தில் கூம்பியும் மாறும் தன்மை முகத்திற்கு உண்டு. எனவே முகத்தைக் காட்டிலும் அறிவு மிக்க உறுப்பு வேறு இல்லை. இத்தன்மையால் முகம் நோக்கியே உள்ளத்தின் குறிப்பை அறிய வல்லவனே அரசனுக்கு உற்ற துணையாவான்.

எனவே தன் மனக் குறிப்பைக் கண்டு உணரவல்ல அமைச்சனையும், தலைவனையும் ஒரு அரசன் பெற்றிருந் தானாகில், அவன் அத்தன்மை மிக்கவர்களை முகம் நோக்கவே தன் கருத்து முற்றும் நிறைவேறிவிடும்.

நிற்க, இக்குறிப்பறிதலாம் செயலில், முகத்தைக் காட்டிலும் மிக நுட்பமானது கண்ணேயாகும். வேந்தர்களது, பார்வையிலுள்ள வேறுபாட்டின் தன்மையை நன்கு உணரவல்ல அமைச்சர்களை ஒரு அரசன் பெற்றிருப்பானாயின், அவன் பார்வையைக் கொண்டே தன் பாலடைந்த பிறன், பகைவனா, நண்பனா, என்பதை அரசன் கண்டறியலாம். ஆகையினால் மிகநுட்பமான அறிவுள்ள அமைச்சர்கள் பிறரை அளக்கும் அளவுகோல் யாதெனில் பிறர் கருத்தினை நன்கு அளக்கத்தக்கதான கண்களே ஆகும்.

# 85. அவையறிதல்

எந்த ஒரு கருத்தையும் அவையில் ஒருவன் சொல்ல தொடங்கும் முன்னர் கேட்கும் அவையின் தன்மை அறிதல் இன்றியமையாதது ஆகும். தான் சொல்ல தொடங்கிய சொற்களின் தொகை, வகை, கூறுபாடுகளின் தன்மையை நன்கு அறிந்த உளத்தூய்மை உள்ளவர்க மேற்கூறிய அவையினை நன்கு அறிந்து, ஆராய்ந்து பேசுத வேண்டும். அது மட்டுமன்று தாம்பேசும் பேச்சின் பொருள் பயக்கும் நன்மையை நன்குணர்ந்த பயக்கும் பேச்சாளர்கள் அறிஞர்கள், அவையின் தன்மையை நன்கு ஆராய்வதோ அவையோர் விரும்பிக் கேட்கும் சமயமறிந்து வழுப்படாம பேசுவார்கள். இங்ஙனமின்றி அவையின் தன்மையை அறிய மல் பேசுவதை ஒருவன் மேற்கொள்வானாகில் அத்தன்மை யுடையவன் சொற்களின் கூறுபாடுகளையும் அறியாதவ என்பது மட்டுமின்றி கற்றுவல்ல கலைகள் எதிலும் அவ வல்லவனல்லன் என்பதும் பெறப்படும்.

எனவே, அவையை நன்கு ஆராய்ந்து அறிந்தவன், நன்கு கற்றுள்ள அறிஞர்கள் முன் தான் பேசப் புகுந்தால், அவர்களைக் காட்டிலும் மேம்பட்ட அறிஞனாக விளங்கி யும், அறிவிலார் கூட்டத்தில் ஒருகால் பழக நேர்ந்தால், அவர்களைப் போலவே தானும் அறியாமை மேற்கொண் டொழுகுதல் வேண்டும்.

மற்றும் நல்லன என்று சொல்லப்பட்ட பலவற்றுள்ளும் மேலான நல்லது யாதெனில், தம்மினும் மிக்க அறிஞர் கூட்டத்திலே அவர்களுக்கு முற்பட்டு ஒன்றையும் தான் சொல்லாத அடக்கமே ஆகும். ஏனெனில் கற்றுவல்ல நல்ல நுண்ணுணர்வு உடையார் மிக்க அவையினிடத்தே ஒருவன் பேசப் புகுந்து சொல் இழுக்குப் படுவதாம் குற்றம் தம் நிலை நிற்கும் துறவிகள் தம் நிலையிலிருந்து தாழ்ந்து வீழும் வீழ்ச்சிக்கு ஒப்பானதே ஆகும். அங்ஙனமின்றித்

தன் கல்வித்திறன் விளங்க ஒருவன் குற்றமற்ற சொற்களை ஆராய்ந்தார் அவையில் பேசவல்லவன் எனில், அவன் கல்வி அச்சபையில் நன்கு விளங்கித் தோன்றும். அப்படிப் பட்ட நல்ல கருத்துணர்வுடையார் முன் பேசும் பேச்சுக்கள் தானே வளரும் பயிருக்கு மேலும் தண்ணீர் பாய்ச்சியதைப் போல் நல்ல பயனைத் தரும் ஆகையின் என்க.

இதற்கு மாறாக அற்பர்கள் (புல்லர்கள்) சபையின் ஒருவன் இருக்க வேண்டிய நிலை உண்டானால் அவன் மேற்கண்டவாறு பேரறிஞர்கள் சபையில் பேசவல்லான் ஆயினும், அவ்வறிவு மிக்க சொற்களை இங்கு மறந்தாயினும் பேசாதிருத்தல் நன்று. ஏனெனில் அறிவற்றவர்கள் முன் அறிஞர்கள் கூறும் நல்லுரைகள் சாய்க்கடையில் கொட்டப் பட்ட அமிர்தத்தை (பாலை) ஒத்துப் பயனற்றுப் போகும்.

## 86. அவையஞ்சாமை

பேசப் புகுந்தவன் அவையை ஆராய்வது மட்டுமின்றி அங்ஙனம் ஆராய்ந்த அவைக்குத்தான் அஞ்சாமையும் பெறல்வேண்டும். சொல்லின் தொகையனைத்தும் நன்கு அறிந்த தூய்மை குணமிக்க பேச்சாளர்கள், கற்ற அவை மற்ற அவைகளை ஆராய்ந்த பின் வலிமிக்க அவைக்குத் தாம் அஞ்சி வாய் சோர்ந்து சொற் குற்றப்படுதல் இலர். எனவே, கற்றுவல்ல அறிஞர் அவையில் அவர்களும் பாராட்டும்படி தாம் கற்றவைகளை அவர்தம் உள்ளங் கொள்ளச் செய்பவர்களையே கற்றவர்களில் மேம்பட்டவர் என்று பாராட்டுப்படும்.

போர்முனையில் பகைவர்முன் அஞ்சாது படைக்கலம் ஏந்திப் போரிட்டுச் சாவார் வீரம்மிக்க பலர். ஆனால் அவையினிடத்தே அஞ்சாமல் தாம் கற்றதை உரைக்க வல்லவர்கள் அவர்களைப் போல் பலர் அல்லர். மிகச் சிலரே இவ்வுலகில் உள்ளனர்.

இங்ஙனமாகக் கற்று வல்லார் அவையினிடத்து அவர்கள் உள்ளம் கொள்ளும் வழி சொல்லும் வன்மை உடையவன் தான் கற்றவற்றைக் காட்டிலும் மிக்கறிந்த வரிடமிருந்துதான் அறிய வேண்டியவற்றை அறிந்துணர்தல் நலனாகும்.

இங்ஙனமாகத் தக்க வழியிலே தருக்கநூல் அளவை களால் ஒரு பேச்சாளன் தன்னை வல்லவனாக்கிக் கொள்ளக் கற்றல் வேண்டும். அதுதான் அவனுக்குப் பேசும் சபையினிடையே அஞ்சாமை உண்டாக்குவதோடு வேற்று வேந்தர் அவையினர் கேட்கும் கேள்விகட்கும் அஞ்சாமல் பதில் சொல்லவும் உதவும்.

வீரமற்றவனிடம் வாள் எப்படிப் பயனற்றுப் போகுமோ அப்படியே சபைக்கு அஞ்சும் கோழையிடம் அவன் கற்ற நூல்கள் பயனற்றுப் போகும். எனவே, பேடிகை வாளா யுதம், பகைமுன் நடுங்கி வீழ்வதைப் போல, அவைமுன், அஞ்சுபவன் கற்ற நூலும் பயனற்று வீழ்ச்சியடையும். இப்படிப்பட்டவர்கள் பல நூல்களைக் கற்றாலும் நல்லார் அவையில் நல்ல சொற் பொருள்களைச் சொல்ல மாட்டாத காரணத்தினால் பயன் அற்றவர்களே ஆவர். அவர்கள் கற்றறிந்தவர்களே ஆயினும் சபைக் கோழையாகி விடுவதால் கல்லாத மூடர்களினும் கீழ்ப்பட்டவர்களே. கலைவல்லார் மன்றத்தை அஞ்சித் தாம் கற்றவைகளைச் சொல்ல மாட்டாதவர்கள், உயிரோடு உள்ளவரே ஆயினும் இறந்தவர்களோடு ஒப்பானவர்களே ஆவர் என்க.

# 87. நாடு

இனி இத்தகைய அரசனையும் அமைச்சர்களையும் குடிமக்களையும் கொண்டுள்ள நாட்டின் இலக்கணம் என்ன என்பதைச் சற்று நோக்குவாம்.

உழவர்களால் குறையாத விளை பொருள்கள் அமையப் பெற்றதாய், நல்ல அறிவும் கேடில்லாத செல்வமும் உடைய மக்கள் தொகை நிறைந்ததாய், உள்ள தெதுவோ அதுவே நாடு எனப்படும். பொருள் வளம் மிகுந்ததாய் அமைந்திருப்பதோடு பலராலும், பல நாட்டவரால் விரும்பத்தக்கதாய், எவ்வகையாலும் கேடடையாமல் விளையுள் மிக்கிருப்பதோடு பிற நாட்டார் தன் நாட்டின் மேல் ஒருங்கு வந்து குடியேறினாலும் அவர்களைத் தாங்கக் கூடியதாய், ஆட்சிக்குத் தேவைப் படும் வரிப் பொருளைத் தருவதாய், உள்ளதே நல்ல நாடு, மற்றும் மிகப் பசியும், நீங்காத நோயும், புறத்தே இருந்து வந்து தாக்கி அழிக்கும் பகையும், தன்னிடம் சேராமல் இயன்று இருப்பது எதுவோ அதுதான் நல்ல நாடு.

அப்படிப்பட்ட நல்ல நாட்டில் பலவகை வேற்றுமை யுள்ள கட்சிகளும், நாட்டுக்குள்ளே உடனிருந்தே பாழ் செய்கின்ற உட்பகையும், சமயம் வந்தால் அரசனை வருத்துகின்ற கொலைத் தொழில் வல்ல குறும்பும் இல்லாமல், அமைந்து, பகைவர்களால் அழித்தற்கு முடியாத தாய், ஒரு கால் கேடடையினும் தன் வளத்தில் குன்றாமல் விளக்கமுறுவது எதுவோ அதுவே தலைசிறந்த நாடென்று சொல்லப்படும்.

இப்படிப்பட்ட நல்ல நாட்டுக்கு உறுப்பாக அமைந்து விளங்குவன யாவை எனில், தேக்கி வைத்திருக்கும் ஏரி நீரும், சுரக்கும் ஊற்று நீரும், நாட்டின் பாதுகாவலாக அமைந்துள்ள மலைகளும், அவைகளிலிருந்து ஓடி நாட்டை

வளப்படுத்தும் ஆறுகளும், பகைவர்களால், அழிக்க முடியாத வலிய கோட்டைகளுமே ஆகும்.

இங்ஙனம் அமைந்த நாட்டில் வாழ்வார் பிணி யில்லாமல் வாழ்ந்து, செல்வமும் விளைபொருள்களும், பிற வளங்களும், இன்ப வாழ்வும், நல்ல காவலும் எனும் ஐந்தையும் பெற்றிருத்தல் வேண்டும். இத்தகைய நாட்டில் உள்ளவர்கள் பிறநாட்டை நாடாமலும் வருந்தி முயலாமலும் தாமே அவர்களிடம் சென்று ஈயும் வளத்தை உடையதே நாடெனக் கூறத்தகும். அப்படியின்றி வருந்திப் பொருள் தேடினால் மட்டுமே வளந்தரும் நாட்டை, நாடெனக் கூறுதல் பொருந்தாது.

இங்கு கூறிய எல்லா நல்விலக்கணங்களும் அமைந்திருந்த போதிலும் நல்ல அரசனுடைய நல்லாட்சியைப் பொருந்தாத நாடு பயனற்ற நாடே என்க.

## 88. அரண்

மேற்கூறியவாறெல்லாம் அமைந்த நாட்டினைப் பாதுகாப்பது அரண் (கோட்டை) ஒன்றேயாம். அறிவு, ஆண்மை, பெருமை எனும் ஆற்றலிலே சிறந்து பிற நாட்டின்மீது போர் தொடுக்கவல்ல அரசனாயினும், பிறஅரசன் தன்மீது படையெடுத்து வர, அதற்கு அஞ்சிப் பதுங்கி வாழும் சிற்றரசனாயினும் தன், நாட்டுக்குள்ளே வசிக்க கோட்டையையே தம்முடைய மிகச் சிறந்த பொருளாகக் கொள்வர். நாட்டுக்கு அமைய வேண்டிய இயற்கை அரண், தெளிந்த நீரால், சூழ்தலும், நீரும் நிழலும், மற்ற வெள்ளிடை நிலமும், உயர்ந்த மலைகளும் உடைமையும், காடுகள் அடர்ந்து விளங்குதலே ஆம். அதோடு அரசியல் நூல்வல்லவர்கள் நாட்டைக் காக்கின்ற செயற்கை அரண் மிக உயர்ந்தும் நன்கு அகன்றும் வலி

மிக்கதாயும் பகைவரால் அணுகுவதற்கும், அழித்தற்கும்; அருமையானதாயும் அமைதல் நன்று என்று கூறுவர்.

இனி அந்த அரண்தான் அமைந்திருக்க வேண்டிய முறை யாதெனில் அதைக் காகக வேண்டிய இடம் சிறிதாகவும், ஆனால் காக்கப்பட வேண்டிய நிலப் பரப்பு மிகப்பெரிதாகவும் முற்றுகையிட்டுத் தாக்குவோர் தம் உள்ளத்தின் ஊக்கத்தைத் தன் திண்மையால் அழிக்க வல்லதாயும், அப்பகைவர்களால் கைப்பற்ற முடியாததாய், பகைவர் எத்தனை காலம் முற்றுகையிட்ட போதிலும் உள் நாட்டாருக்குப் போதிய உணவும் மற்ற பிறவும், அளிக்கும் தன்மை வாய்ந்ததாயும், கோட்டையைக் காக்கும் வீரர்கள் போர் நிலைக்கு எளிதாக இருப்பதே ஆகும்.

உணவுப் பொருள்கள் மட்டுமல்லாமல் மற்ற எல்லாப் பொருள்களையும் தன்னிடத்தே உடையதாய், நெருக்கடியான நேரத்திலே வலிமிக்க வீரர்களை உதவக் கூடியதாய் அமைந்ததே அரணாகும். அத்தகு அரணை முற்றுகையிட்டோ, முற்றுகை இடாமல் போர் செய்தோ, இரண்டுமின்றி வஞ்சகமாக மாற்றாரால் கைக் கொள்ளவோ முடியாததாக அமைந்து உள்ளதெதுவே அதுவே அரண்.

இவ்வகையாக அமைந்த அரணைப் புறத்தே நின்று சேனை வல்லமையால் முற்றுகை இட்டவர்களையும் உள் நின்று அதைக் காப்போர் தாம் நின்ற நிலையிலிருந்து தம் அரணை வீழ்ச்சியடையாமல் காத்து, முற்றுகையிட்டோரை வென்றி கொள்ளத் தக்கவாறு அமைந்துள்ளது எதுவோ அதுவே அரண் ஆகும். மற்று போர் முனையிலே அப்போர் தொடங்கிய அளவில் பகைவர் அழியும்படி உள்நின்று காப்போர், தம் போர்த்திறனால் மாட்சிமையில் சிறக்க நிற்பதுவே அரண்.

மேற்சொன்ன எல்லாச் சிறப்புகளையும் பெற்றிருந்த போதிலும், போர் முறை, இராஜதந்திரம் எனும் அரசியல் வினையின் மேம்பாடில்லாத அரசனிடம் அவ்வரண் இருந்தாலும், அவ்வரணால் எப்பயனும் இல்லையாம்,

## 89. பொருள் செயல் வகை

இப்புவியிலே செல்வத்தின் நிலை மிகமிக உயர்ந்தது. அதை உடையவன் பிற எவ்வகைச் சிறப்பும் மதிப்பும் அற்றவன் ஆயினும், அவனிடத்துள்ள அச்செல்வத்தால் மட்டுமே அவன் ஒப்பற்றவனாக ஒரு பொருளாக மதிக்கப் படுவான். ஆகையினாலே பொருட் செல்வத்தைக் காட்டிலும் சிறப்புடைய பொருள் வேறு ஒன்றும் இல்லை. மற்றுப் பொருள் இல்லாதவனை அவன் வேறுவகையில் எவ்வளவு உயர்ந்தவன் ஆனாலும் இகழ்வார்கள். ஆனால் செல்வத்தைத் தன்னிடம் குவித்தவனாயின் அவன் எவ்வளவு அற்பன் ஆயினும் அவனை யாவரும் சிறப்பிப்பர். இது உலக இயல்பு.

இந்தப் பொருள்தான் ஒருவனுக்குச் சிறப்பினை உண்டாக்கும் அணையாத விளக்கினைப் போன்றது. அது அவன் நினைத்த இடத்துக்கும் நாட்டுக்கும் விரைந்து சென்று அவனுக்கு ஏற்படும் இடைஞ்சல்களையும் பகைகளையும் அழித்துவிடும். இப்படிப்பட்ட சிறப்புக்களை யெல்லாம் பொருள் பெற்றுள்ளதேயாயினும் அது தீதில்லாமல் ஈட்டப்பெற்றதாயின் மட்டுமே அது அறத்தையும் இன்பத்தையும் தரும். எனவேதான் அற வழியிலேயும், அன்புவழியிலேயும் வராத பொருள் செல்வத்தை ஒருவன் ஏற்றுக் கொள்ளாமல் நீக்கி விடுதல் வேண்டும்.

இனி அரசனுக்குப் பொருளாக வந்து சேர வேண்டியவை யாவை எனில், தன் குடிகளிடம் இறையாகவும், தன் மூதாதையர் மூலமாகவும், உடையார் இல்லாமையாலும், தன்னை வந்து அடையும் பொருளும், சுங்கமாகச் சேரும் பொருளும், தன்னுடைய பகையரசர்களால் திறையாகச் செலுத்தும் பொருள்களுமே ஆகும். மற்றும் இப் பொருள்தான் அருள் என்று சொல்லப்படுகின்ற அன்பு ஈன்ற குழந்தையை வளர்க்கும் செவிலித் தாய் (Nurse)

போன்றது என்றால் அன்புக்கும் அருளுக்கும் இதுவே ஆதாரமாகின்றதல்லவா?

இத்தகு பொருட்செல்வம் தன்னை அடைந்த பிறகு தன் கையிலே பொருட்செல்வம் பெற்றபின் கையில் பொருள் உடையவனாய் ஒருவன் தொழிலாற்றுதல், மலையின் மேல் ஏறி யானைப் போரைக் காண்பதைப் போல எளிமையும் அச்சமுமின்றி அவன் ஏற்ற தொழில் முடியும் என்க. எனவே, நம் பகைவர் செருக்கினை அடியோடு அழிக்கும் ஆற்றல் உள்ளதும், ஈட்டி போலக் கூர்மையானதுமான பொருட்செல்வத்தை ஒருவன்தேடுதல், ஈட்டுதல், வேண்டும். அப்படி நல்ல நெறியால் பொருளை நிரம்பப் பெற்றவர்க்கு, மற்றைய அறனும் இன்பமும் ஒரு சேரக் கைகூடும் எளிய பொருள்களாகும்.

## 90. பகை மாட்சி

ஒரு அரசனுக்கு நாடும் கோட்டையும் பொருளும் எப்படி இன்றியமையாதனவோ அவ்வளவு இன்றியமை யாதது படைவல்லமையும் என்க.

இந்தப் படைதான் எல்லா உறுப்புகளும் (அக்காலத்தில் யானை, குதிரை, தேர், காலாள் இக்காலத்தில் தரைப் படை, கடற்படை, விமானப்படை, டாங்க், பீரங்கி முதலியன)போன்றவை பெற்று படை வீரர்கள் போர்க்களத் தில் ஏற்படும் விபத்துகளுக்கு அஞ்சாமல் வெல்லும் தன்மை நன்கமைந்திருப்பின் அதுவே அரசனுக்குச் சிறந்த செல்வ மாகும். அதுவுமன்றி அப்படைதான் தொன்றுதொட்டு வழி வழியாக (பரம்பரையாக) வந்ததாயின், தன் அளவில் அது சிறுமையுற்றிருப்பினும், அரசனுக்கு ஆபத்துக் காலத்தில் தன் அழிவையும் நோக்காது மேன்மேலும் முன்னேறிப் போரிடும். எலிகள் பல கடல் போலக் கூடி நின்று எதிர்ப்பினும், ஒரு நாகம் எதிர்த்துச் சீறினால் அதன்

மூச்சில் முன்னே எலிகள் கெட்டொழிவதைப் போல, சிறு படையாயினும் வீரம் மிக்கதாயின் எதிரியின் அழிவு நிச்சயம் என்க.

எனவே, படையின் இலக்கணம் யாதெனின் போரிலே அழிவில்லாததாய், பகைவரால் வஞ்சிக்கப்படாததாய், வழி வழி வந்த மரபை உடையதாய், வீர மிக்கதாய் அமைவதே படை ஆகும். மற்றும் எமனே தம்மீது சினந்து போர்க்குப் புறப்பட்டு வந்தாலும் தாம் ஒன்று கூடி எதிர்த்து நிற்கும் ஆற்றல் மிக்கதாய் அமைவதே படை எனப்படும் என்க.

இனி, இப்படிப்பட்ட படைக்குக் காவலாக விளங்குவது வீரமும் மானமும், தமக்கு முன் வீரர் சென்ற சிறந்த வழிச் செல்லும் பண்பும், சேனைத் தலைவரின் நம்பிக்கையும் ஆகிய இந்நான்குமே ஆகும். இந்தச் சேனையோ மாற்றாரின் படை எடுப்பைத் தாங்கும் தன்மையினை அறிந்து அவர்களின் முன்னணிச் சேனையினைக், காலாட் படையினை, முறியடிக்கக் கூடிய வன்மை பெற்றிருப்பின் அதையே நல்ல படை எனக் கூறத்தகும்.

மற்றும் அப்படைக்குப் போரிடும் வீரமும் எதிர்ப்பைத் தாங்கும் ஆற்றலும் இல்லையாயினும் தோற்றப் பொலிவோடு அது நன்கு அணிவகுக்கப்பட்டிருப்பின் அதுவே அதற்குப் பெருமை தருவதாகும்.

படை தன் அளவில் தேய்தலும், படை வீரர்கள் தன் தலைவனிடம் வெறுப்பை உமிழ்தலும், படை வீரர்கள் வறுமை அடைதலும், ஏற்படாதிருந்தால் மட்டுமே போரில் அப்படை நிச்சயமாக வெற்றி பெறும். மற்றும் போரிலே உள்ளம் நிலைத்த நிலைமிக்க போர்வீரர்கள் பலரைப் பெற்றிருப்பினும், நல்ல தானைத் தலைவரைப் பெற்றில தானால்—படை நடத்திச் செல்லும் தளபதிகளை இல்லாத படைக்கு எவ்விதப் பெருமையும் வெற்றியும் கிடையாது என்க.

# 91. படைச் செருக்கு

மேற்கூறியவாறு அமைந்த படையில் உள்ள வீரர்கள் ஒவ்வொருவரும் வீரம் மிக்கவர்களாக அமைந்திருத்தல் அவசியம். ''என் தலைவன் வீரம் மிக்கவன்; அந்த வீரத் தலைவன் முன் நின்று எதிர்த்த எதிரிகளோ நடு கல்லாகி நிற்கும்படி இறந்து விட்டனர். எனவே என் தலைவன் எதிர் போரேற்று நில்லாமல் பிழைத்துப் போய் விடுங்கள்'' எனக் கூறும் வீரர்களையே படையானது கொண்டிருக்கவேண்டும். அவர்கள் இலக்கு மேலானதாய், காட்டிடை ஓடும் முயலை வீழ்த்திய அம்பை ஏந்துவதைவிட, வெட்ட வெளியிலே தன் வேல்பட்டுத் தப்பி ஓடிய யானையைக் குத்திய வேலை ஏந்தி நிற்றலே வீரமிக்க செயல் எனக் கருதுவதாய், மிக உயர்ந்த குறிக்கோள் உடையதாய் அமைய வேண்டும். எனவே பேராண்மை என்று கூறப்படுவது பகைவரை நெஞ்சுறுதியோடு எதிர்க்கும் வீரமே. ஆனால் தம் பகைவர்க்கும் ஒரு ஆபத்து, துன்பம் உண்டான காலத்தில் உடனே அதை நீக்கி உதவுவதையே அந்தப் பேராண்மையின் கூர்மை என்று கூறுவர் அறிஞர்.

படை வீரர்கள் தங்களுக்கு ஏற்படும் விழுப்புண்ணாகிய ஊறுகளுக்கு அஞ்சாமை வேண்டும். அத்தகைய வீரனானவன் தன்னை எதிர்த்து வந்த யாளை மேல் தன் வேலை எறிந்து விட்டு வெறுங்கையனாய், மேல்வரும் யானைக்கு வேறு வேல் தேடிவர, அப்போது தன் பகைவர் தன் மார்பின் மீது பாய்ச்சிய வேலைப் பிடுங்கி, வீரச்சிரிப்புடன் போர் செய்யும் அஞ்சாமை வாய்ந்தவனாவான். பகைவரை விழித்துப் பார்க்கும் கண்கள் மாற்றார் வீசும் வேல்கண்டு இமைத்தலும் பகைவர்க்குப் புறங் கொடுத்து ஓடுதலே, தனக்குத் தோல்வியே, என்பது அவனுக்கு நன்கு தெரியும். எனவேதான் அப்படிப் பட்டவன் சென்ற நாட்களை எடுத்தெண்ணி, அவற்றுள் விழுப்புண் படாத நாட்களை

எல்லாம் வீணாய்க் கழித்த நாள் என்னும் பட்டியலில் சேர்த்து வைக்கிறான்.

மற்றும் எந்த ஒரு வீரன் இந்த உலகில் பரந்து நிற்கும் புகழை விரும்பித் தன் உயிரைத் துச்சமாக மதிக்கிறானோ அவன் காலில் அணியும் கழலே வீரக்கழல். அதுவே அழகு மிக்கது. அப்படிப்பட்ட வீரர் போர்க்களத்தில் உயிருக்கு அஞ்சாமல் பகைவரை வீழ்த்துங்காலத்தில் தன் அரசன் அது வேண்டா எனத் தடுத்துச் சினந்தாலும் அவர்தம் வீர மிகுதி யில் குறைவில்லாதவராவர். ஆகவே, தாம் போர் மேல் செல்லுங்கால் கூறிய வஞ்சினத்தின்படி-ஏற்றுக் கொண்ட சபதத்தின்படி-போரிட்டுச் சாகவல்லவரை யாரே தண்டிக்க வல்லார்? யாரே இகழவல்லார்?

இத்தகைய வீரர்களின் வீரத்துக்காகவும், நாட்டுப் பற்றுக்காகவும், கடமை, கண்ணியத்துக்காகவும் அரசனே தன் கண்ணீர் சிந்தி அழும்படியான நிலையில் ஒருவன் சாக முடியுமானால் அச்சாவுதான் அவன் இரந்தாவது பெற்றுக் கொள்ளத் தக்கதாம்.

## 92. நட்பு

இவ்வுலகில் மனித இனத்துக்கு மிகமிக வேண்டப் படுவ தாய், வாழ்க்கைக்குத் தேவைப்பட்ட பற்றுக் கோடாய் விளங்குவது நட்பு ஒன்றுதான். எனவேதான் நம் தெய்வப் புலவர் இந்நட்பைப் பற்றிக் கூறுவதற்கும் விதி முகத்தால் ஐந்து அதிகாரங்களும் எதிர்மறை முகத்தால் பன்னிரண்டு அதிகாரங்களுமாகப் பதினேழு அதிகாரங்களை எடுத்துக் கொண்டார் என்றால் இதன் பெருமை எவ்வளவு அளவிடற் கரியது என்பதை நாம் உணரலாம். இந்த நட்பினைப் போல் கொள்வதற்கு அருமையானது ஒன்றுமிவ்வுலகில் வேறில்லை. அதைப் போலவே நாம் மேற் கொள்ளும் வினைக்கு (தொழிலுக்கு) காவலாக அமைவது அந்த நட்பைக் காட்டிலும் மேலானது வேறு ஒன்றும் கிடையாது.

இந்த நட்புதான் நாம் அறிவுடையவரிடம் கொண்டால் வளர்பிறைபோல் வளரும் தன்மையது. மாறாக அறிவிலார் நட்போ தேய்பிறை போல் தேய்ந்துஅழியும் தன்மையதாம். எனவே பண்புள்ள அறிஞர்கள் தொடர்பு தான் கற்கும் தோறும் கற்குந்தோறும் உண்டாகும் இலக்கிய நயத்தால் உண்டாகும் இன்பத்தைப் போலப் பழகப் பழக மிக இனிக்கும் என்க.

இப்படிப்பட்ட நட்பின் பயன் யாதெனில், தம்மிடம் நட்புக் கொண்டவர்கள் நன்னெறி விட்டுத் தீ நெறிக்கண் ஒரு வேளை மனம், மொழி, மெய்களால் தவறிய காலத்தில், அவர்கள் தீய அறிவின்மேல் சென்று தடுத்து இடித்துக் கூறுவதற்கேயன்றி, வெறும் சிரித்துப் பேசி மகிழ் வதற்கு மட்டுமல்ல, என்று தாம் உணர்தலே ஆகும். இத்தகு நட்புக்கு ஆதாரம் அன்பும், அதன் வழித்தோன்றும் உணர்ச்சியுமே. ஆகையினால் நட்பு கொள்ளத் தொடர்பும் பழக்கமும் தேவையில்லை. உணர்ச்சி மட்டுமே நட்பாகிய நல்ல உரிமையை உண்டாக்கும்.

இனி நட்பின் இலக்கணம் யாதென ஆய்வோம். நட்பென்பது, கண்டவிடத்து உள்ளம் ஒன்றாமல், முகம் மட்டுமே மலர்ச்சியோடு சிரிப்பது மட்டுமல்ல. மற்று அன்பாய் உள்ளம் மலர மகிழ்பூத்து நட்பாடுவதே நட்பா கும். நண்பனை அழிவுதரும் தீமையிலிருந்து விலக்குதலும், நல்வழிச்செலுத்தலும் அவன் துன்பம் அடையுங் காலத்தில் உடனிருந்து தாமும் துன்புறுதலுமே நட்பின் சின்னங்கள் ஆகும். உதரணமாக நாம் ஆடை அவிழ்ந்து விட்ட காலத் தில் நம்முடைய கை எப்படி விரைந்து உதவி மானம் காக் கின்றதோ, அப்படி நண்பனுக்குத் துன்பம்வந்து உற்ற காலத் தில், அப்போதே சென்று உதவி, துன்பத்தைக் களைவதும் எக்காலத்தும் மனம் மாறுபடாமல், வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் உதவி செய்து தாங்குவதும் நட்பின் சிறந்த உயரிய திண்ணிய நிலையாகும்.

"இவர் என்னிடம் இவ்வளவு அன்பினை உடையவர் யானும் அவரும் இவ்வளவு நெருங்கிய நட்பினர்" என்று ஒருவருக்கொருவர் சிறப்பித்துச் சொல்லினும் அவர்களின் நட்பின் நிலை அற்பமானதாகிவிடும்.

## 93. நட்பாராய்தல்

மேற் குறிப்பிட்ட அத்துணை சிறப்பமைந்த நட்பினை நாம் கொள்ளும் போது குணநலன், செய்கை நலன்களை நன்கு ஆராய்ந்தே நட்பினரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். எனவே நட்பினை விரும்பி அந்நட்பினிடத்தே நிலை நிற்ப வர்கள் ஆராய்தலின்றி ஒருவரிடம் நட்பு கொல்லுதலைப் போன்ற தீங்கு தருவதுவேறொன்றில்லை. ஏனெனில் நட்பு கொண்டபின் நட்பினை ஆளுந்திறம் உடைய நல்லவர்க்கு அதிலிருந்து விலகி நீங்குதல் தீது; ஆகையின் என்க. இங்ஙனம் பலமுறை ஆராய்ந்து ஆராய்ந்துதேர்ந்தெடுக்காத நட்பானது தான் சாவதற்கு ஏதுவான துன்பத்தைத் தனக்கு உண்டாக்கும் தன்மைத்தாம். இவர்களைவிட வேறு பகைவர்களே வேண்டாம்.

இந்த நட்பினை ஆராய்தல் எங்ஙனம் எனில் நண்பனாகத் தகுந்தவன் நற்குணமுடையவனாய், நல்ல குடியில் பிறந்தவனாய் இருத்தல் வேண்டும். அவனிடமுள்ள குறைபாடுகளையும் அவன் குறையற்ற சுற்றத்தாரின் இயல் பையும் நாம் கண்டு ஆராய்ந்து பின்னரே நட்பு கொள் ளுதல் வேண்டும். அங்ஙனமாக நற்குடியில் பிறந்து தனக்கு வரும் பழியைக் கண்டு நாணுகின்றவனாய் இருப்பவன் நட்பைப் பொருள் கொடுத்தாவது கொள்ள வேண்டும். அதோடு நண்பன் தகாத செயல்களைச் செய்யக் கருதினால் அவன் திருந்தும்படி அழ அழச் சொல்லியும் அதையும் கேவாமல் மீறிச் செய்தால் இடித்துக் கூறியும் உலக வழக்கின் தன்மையை நன்கு அறிந்து நல்வழிப்படுத்த வல்ல

வனின் நட்பினையே நன்கு ஆராய்ந்து தேர்ந்து எடுத்தல் நலம். இந்த நட்பாம் நலங்களைக் குறையாமல், அளப்பதற்கு ஒரு அளவு கோலாக உதவுவது, நமக்கு வரும் துன்பமும் கேடுமேயாம். இந்தக் கேடுதான் நன் மக்களின் இயல்புகளை நீட்டி அளக்க உதவுவதால் நாம் நம் துன்பக் காலத்தில் உதவும் நண்பர்களையே தேர்ந்தெடுத்தல் நலம்.

இனி நாம் கொள்ளக் கூடாத நட்பினர் யாவரெனில் அறிவில்லாதவரே என்க. அறிவிலார் நட்பை நம்மிலிருந்து விலக்கி விடுவதே நாம் பெறும் பெரும் பேறு ஆகும். உள்ளத்தில் ஊக்கத்தையும் பெருமையையும் சுருக்கி விடும் நினைவை விட்டொழித்தல் எவ்வளவு நன்மை பயக்குமோ அவ்வளவு நன்மை பயக்கும் நம் அல்லல் காலத்தில் கைவிடும் நட்பினரைக் கொள்ளாது விலக்கி விடுதல் என்க. அங்ஙனம் நம் கெடுங்காலத்திலே — துன்பக்காலத்திலே நம்மைக் கைவிட்டு ஓடும் நண்பர்களின் முன்னாளைய நட்பை நம் இறுதிக் காலத்தில் நினைத்தாலும் நம் உள்ளம் நம்மைத் தீயெனச் சுடும் அல்லவா?

எனவே உள்ளத் தூய்மை உடையவர் நட்பினையே எந்நாளும் கொள்க. அதில்லாமல் உலகத்தோடு ஒத்தலில்லாத தகாதவர், தீயவர் நட்பினைத் தாம் அறியாது கொண்டாரானால் அவர் விரும்பும் ஏதாவதொன்றைக் கொடுத்தாயினும் அவரை விலக்கி விடுக.

## 94. பழைமை

இங்ஙனமாக ஆராய்ந்து நட்பு கொண்டு அவரோடு பல நாள் பழகிய பின்னர், தம் நண்பர் ஏதாவது தவறு செய்வாராயின் அவர் தம்மிடம் பழகிய காரணத்தால் அவர் செய்த தவறுகளை உரிமை பற்றிச் செய்தவை எனப் பொறுத்தலே —ஏற்றுக் கொள்ளுதலே பழைமை எனப்படும்.

ஆகவே நட்புக்கு உறுப்பு என்று சொல்லப்படுவது நண்பர்களுடைய உரிமைச் செயலே. ஆகையினால் அந்த

உரிமைக்கு உடன்பட்டு, உணவுக்கு உப்பைப் போல இனிமை யராக நிற்றலே சான்றோர் தம் கடமை. இங்ஙனமின்றி பழகிய காரணத்தால் நட்பினர் உரிமையோடு செய்த பிழை யைத் தாம் செய்தது போல உடன்பட்டு, ஏந்தி ஏற்றுக் கொள்ளாவிடில் நெடுங்காலம் பழகிய நட்பினால் ஆகும் பயன்தான் என்ன?

எனவே தம்மைக் கேளாமலேயே தம்மிடம் உள்ள உரிமையால் நண்பர்கள் செய்த செயலை அவ்வுரிமையைப் போற்றும் நல்லவர்கள் அச்செயலது விரும்பப்படும் தன்மை நோக்கித் தம்மதாகவே ஏற்றுக் கொள்வார்களே அன்றி விலக்க மாட்டார்கள். அதோடு அத்தகைய உரிமையால் நண்பர்கள் ஒருக்கால் தமக்கு வெறுக்கத்தக்க துன்பத் தினைத் தரும் செயல்களைச் செய்தாரெனில் அதை அவர்கள் அறியாமையால் செய்தனர் என்றாவது அல்லது தம்மிடத்துள்ள உரிமையால் செய்தனர் என்றாவது உணர்தல் வேண்டும்.

நட்பினது எல்லைக் கோட்டைத் தாண்டாது நட்பின் வரம்பிலே நிலை நிற்பவர்கள், தம்மோடு பழமையிலே வேறு படாமல் நின்ற, நீண்ட கால நண்பர் தமக்கு ஒரு வேளை பொருட் கேடோ, உடற் கேடோ தரும் செயல்கள் செய் தாலும், அவர்களது தொடர்பைக் கைவிட மாட்டார்கள். அவர்கள் அன்புடனே பழைமையாய் வந்த நட்பினை உடையவர்களாகையினால் அவர்கள் கேடு செய்த காலத் திலும் அவர்களிடமுள்ள அன்பு நீங்காமலிருப்பர்.

தம்மிடம் நீண்ட காலம் பழகிய நண்பரைப் பற்றி இழுக்கைப் பற்றிப்—பிறர் கூறும் கோள் சொல்லைக்கேளாக் காதினை உடையவராக இருத்தலே நன்று. அங்ஙனம் கூறப்படும் கோள் சொல்லைக் கேளாத நட்புரிமை பாராட்டு மொழிக்கு அந்த நண்பர்கள் பிழையைச் செய்தா ரானால்,அந்நாளே கோட் சொல்லைக் கேளாத நண்பருக்கு ஏிக்க நல்ல நாள் என உணர்தல் வேண்டும்.

மற்றும் பல காரணங்களாலும் தன் பிரிவு படாமலும் உரிமை கெடாமலும் தொன்று தொட்டுப் பழகி வரும் பழைமையான நண்பரை, நட்பினை, அவர் பிழை நோக்கிக் கைவிடாத நல்ல பண்புள்ளவர்களையே இவ்வுலகம் நட்புக் குறித்து விரும்பிப் போற்றும். அதோடு பழைமையாக வருகின்ற நட்புரிமையாகிய பண்பிலிருந்து சிறிதும் மாறாத வர்களையே பகைவர்களும் விரும்பிப் பாராட்டுவர்.

## 95. தீ நட்பு

நட்பின் இலக்கணத்தையும் அதை ஆராயும் வகைகளை யும் நீண்டகால நட்பினர் தம் பெருமையையும் கண்டோம். நட்பின் பண்பிற்கு மாறாக உள்ள, விடற்பாலதாகிய நட்பு, தீ நட்பும் கூடா நட்புமாம். இவற்றில் தீயவர் தம் நட்பின் தன்மையை இங்கு காண்போம்.

அன்பின் மிகுதியால் நம்மையே பருகி விடும் தன்மை யுள்ளவர்கள் போல் காணப்பட்டாலும், பண்பில்லாதார் நட்பு வளர்வதைக் காட்டிலும் குறைந்து போவது நல்லது. ஏனெனில் தீயவர்கள் தமக்குப் பயன் கிடைக்கும் போது தான் நண்பர்கள் ஆவார்கள். தமக்குப் பயனில்லாத காலத்தில் நீங்கி விடுவார்கள். இப்படிப்பட்ட மனம் ஒப்பில்லாதவர்களின் நட்பைப் பெற்றாலும் இழந்தாலும் ஒன்றுதான். ஒரு பயனும் இல்லை. எனவே இவர்களை அயலாராகவே கருதுதல் நலம். நட்பின் அன்பு நோக்காமல் இவ்வகையானவரோடு நட்பு கொண்டால், இந்த லாபம் வரும் என்று பிரயோசன அளவை அளந்து அறியும் நண்பர் கள் கொடுப்பாரைக் கொள்ளாமல் விலையைக் கொள்ளும் அன்பற்ற விலை மகளிரையும், பிறர் கேடு நோக்காது அவர் சோர்வு பார்க்கும் கள்வரையுமே ஒப்பானவர்கள் ஆவர்.

போர் வாராத காலத்தில் எல்லாம் தாங்குவது போன்று கனைக்கும் குதிரை, போர் வந்த காலத்தில் மும்முரமான

போரின்கண், தான் சுமந்த வீரனைக் கீழே தள்ளி விட்டுத் தான் மட்டும் உயிர் பிழைக்க ஓடும் போர்த் திறமில்லாத குதிரையைப் போன்றவர்களின் நட்பு இருப்பதை விடத் தனித்திருப்பதே மேல் அல்லவா? எல்லாச் சிறப்புகளையும் பெருமைகளையும் செய்தாலும் தானும் பயனடையாது செய்தானுக்கும் சிறப்புத் தராத அற்பர்களது தீ நட்பு ஏற்படுவதைக் காட்டிலும் ஏற்படாமலிருப்பதே நன்று.

'அற்ப சிநேகிதம் பிராண சங்கடம்' என்பது பழமொழி. அற்பர்களோடு, அறிவில்லாதவரோடு மிக நெருங்கிப் பழகும் நட்பைக் காட்டிலும் அறிவுடையார் பகையே கோடி மடங்கு மேம்பட்டது. எப்படி எனில் அறிவிலார் நண்பர்களாயினும் ஆபத்தில் உதவ மாட்டார். ஆனால் பகைவரேயாயினும் அறிவுடையார் நம் ஆபத்துக் காலத்தில் நிச்சயம் உதவுவர்.

மேலும் நிலைத்திராத இன்பத்தைக் கொடுக்கக் கூடிய பல துறைகளில் இழுத்துச் செல்லச் சிரித்துப் பொழுது போக்கும் தீய நட்பினரால் வளரும் ஊதியத்தைக் காட்டிலும், தம்மை எதிர்த்து நிற்கும் பகைவரால் வரும் துன்பம் பத்து கோடி மடங்கு நல்லதாம். மற்றும் தம்மால் எளிதாகச் செய்யக் கூடிய நல்ல செயல்களைக் கூட உடனிருந்தே தடைப்படுத்திக் கெடுத்து விடுபவர்கள் நட்பினை அவர் அறிய வெளியே சொல்லாமல் நீக்கி விடுதல் நலம்.

எனவே, சொல்லும் செயலும் ஒவ்வாமல் வேறு வேறு எனக் கருதி வாழ்பவர்கள் நட்பினை ஒருவன் நனவில் மட்டு மல்ல, கனவிலும் கருதுதல் துன்பம் தரும். அதோடு வீட்டில் தனித்துள்ள காலத்தில் நட்பாடி, நம்மைப் புகழ்ந்து பலர் முன்னிலையில்—மன்றிடத்து—நம்மைப் பழித்து மானம் வாங்கித் தூற்றுபவர் நட்பினை நிச்சயமாக அணுவள வேனும் நம்மைத் தொடாமல் நீக்கி விடுதலே நலம்.

# 96. கூடா நட்பு

தீயவர், அறிவிலார் ஆகியோர் நட்பினை எப்படி நாம் விலக்க வேண்டுமோ அப்படியே உள்ளத்தால் ஒன்றுபடாமல் பகைத்து, புறத்தே நம்மிடம் நண்பரைப் போன்று ஒழுகுபவர்கள் நட்பினையும் நாம் விலக்குதல் வேண்டும். ஏனெனில் அத்தகையவர் நட்பு பொற்கொல்லன் அல்லது கருமார் ஒரு பொருளை வெட்ட உதவும் பட்டடையைப் போன்றது. அதுதான் பொருள்களைத் தாங்குவது போன்று இருந்து, வெட்டிரும்பால் வெட்டுங்காலத்து நன்கு துண்டிக்க உதவுவது போல, கூடா நட்பினர் சமயம் வரும் துணையும் துணையாகித் தாங்கி நின்று, ஆபத்துக்காலத்தில் நம் விரோதிகளுக்குத் துணை நின்று நம்மை அடியோடு அழிப்பர்.

இப்படிப்பட்ட நல்லவர் போன்று உறாதார் நட்பு விலைமகளிர் தம் உள்ளத்தைப் போல, இன்பம் கண்டவிடத்து மாறும் இயல்புடையது. இவர்கள் எவ்வளவு நல்ல அறநூல்களை அறக் கற்றவர்களாயினும் இயற்கையாக நல்ல குண நலம், மனத்தூய்மையில்லாதவர்கள், போலி நட்பைக் கொண்டொழுகுபவர்கள். ஆகையால் பகையுள்ளம் கொண்ட இவர்கள் மனம் திருந்தி நட்புக்குரிய எண்ணங்களைப் பெற்று நல்லவனாக ஆதல் அரிது. இங்ஙனம் கண்ட போது முகத்திலே வஞ்சச் சிரிப்புடன் பழகி, எக்காலும் உள்ளத்திலே இன்னாதாராகிய வஞ்சகரை அஞ்சி விழிப்போடு வாழ்தல் வேண்டும். எனவே நம் உள்ளத்தோடு உள்ளம் கலந்து அமையாத அந்த நட்பினர் அல்லாதாரை எக்காரணம் கொண்டும் அவர்களது இனிமையான தேன் போன்ற சொற்களைக் கொண்டு நம்பித் தெளிதல் கூடாது.

ஏனெனில் அவர்கள் நண்பர்களைப் போலப் பல நன்மைகளைச் செய்வதாய் இனிமையான சொற்களைப் பேசிய

போதிலும் தன்னோடு உள்ளங்கலவாதவர்—பகை உணர்வு உடையவர்—அவர்கள் பேச்சின் தன்மையை—வினையை—மிகவிரைவிலேயே நாம் அறிந்து கொள்ள முடியும். அறிய வேண்டும்.

"வளைந்தது வில்லு, விளைந்தது பூசல்," என்றபடி வில் வளைந்தால் அங்கே எதிர்த்தவர்க்குத் தீங்கு உண்டாகும். இதை அறிந்தவர்கள், பகைவர்களோ நண்பரைப் போல நடிக்கும் விரோதிகளோ வணக்கத்தோடு பேசிப் பழகினால் வில் வணக்கத்தைப் போலவே சொல் வணக்கமும் தீங்கு பயக்கும். ஆகையால் அதை நம்ப மாட்டார்கள். அவர்கள் கூடா நட்பினர், கும்பிடும் கைகள் இடையிலும் கொல்லத்தக்க கூரிய ஆயுதம் மறைந்திருக்கும். அவர்கள் அழுது வடியும் கண்ணீரும்கூடத் தம் பகை எண்ணத்தை மறைக்கவே பயன்படுவதாகும். இம்முறையில் உள்ளம் ஒன்றாத் தன்மையால் கூடா நட்பினர் சொல்வணக்கமும் உடல் வணக்கமும், கண்ணீரும் ஆபத்தானவையே.

இப்படிப்பட்டவர்கள் நம்மோடு பழகவேண்டி, வேடதாரிகளாய்ப் பகைமை தோன்றாமல் நாடகமாடினால், புறத்தே மிகுதியாக நட்புப் பாராட்டி, உள்ளத்தினால் நம்மை இகழ்ந்தால் நாமும் அவ்வண்ணமே பழகி, அவர்களிடம் சிரிக்கப் பேசி உள்ளத்திலே அந்நட்பு அழிந்து போகப் பழகுதல் வேண்டும். எனவே பகைவர்கள் நமக்கு நண்பராகும் காலம் ஒருக்கால் வரும்போது அவர்களிடத்து நாம் முகமலர்ச்சியோடு நண்பர்களாகப் பழகி, அகத்தால் சிறிது சிறிதாக விலக்கிப் பின் அடியோடு விலக்கிவிடுதல் வேண்டும்.

## 97. பேதமை

நல்ல நட்புக்கு மாறுபட்டது பகைமை. அந்தப் பகைமைதான் சினத்தாலும் பேராசையாலும் விளைவது. இவை இரண்டுக்கும் அடிப்படையோ பேதைமை என்னும் யாதும் அறியாமையே—மடமையே ஆகும். இப்பேதமை தான் மற்றைய குற்றங்கள் யாவற்றினும் மிக்கதாம் ஒன்று. இது தனக்கு வரத் தக்கதாய செல்வம், புகழ் அறமாகிய ஊதியத்தை உதறித் தள்ளிவிட்டு பழி, பாவம் ஆகிய கேட்டினைக் கொள்ளுகின்ற மடமை அறியாமை ஆகும். இந்தப் பேதமையின் உச்சக்கட்டம், அறியாமையின் சிகரம் எது எனில் தனக்கும் தன் வாழ்க்கைக்கும் பொருத்த மில்லாத தீயொழுக்கத்திலே பற்றுள்ளங்கொண்டு நல்லோர் கடிந்த தீச்செயல்களைச் செய்தலாம்.

இங்ஙனமாகப் பேதைக்காம மூடனின் செயல்கள் யாவை எனில், பழி பாவங்களுக்கு நாணாமையும், விலக்கு வனவற்றை விலக்கிச் செய்ய வேண்டியவைகளை நாடாமை யும், பிறரிடம் தாட்சண்யம் இல்லாமையும், காக்கவேண்டிய கல்வி, ஒழுக்கம், குடிப்பிறப்பு இவைகளைக் காவாமையுமே ஆகும். இப்பேதைதான் மனம், மொழி, மெய்கள் அடங்கக் காரணமான நூல்களை நன்கு ஓதியும், உணர்ந் தும், பிறர்க்குரைத்தும் தான் அடங்கான். இப்பேதையைப் போன்று வேறு மூடர் இவ்வுலகில் இல்லவே இல்லை. இத்தன்மை இவன் பெற்றுள்ள காரணத்தினாலே தனக்கு அடுத்துவரும் ஏழு பிறப்புள்ளும் அனுபவிக்க வேண்டிய நரகத் துன்பத்துக்கான எல்லாத் தீச்செயல்களையும் இப் பிறப்பிலேயே தன் பேதைமையால் இவன் செய்து முடிக்கும் வல்லவனாவான். பேதைமையின் செயலும் வல்லமையும் இப்படிப்பட்டன.

இனி, இப்படிப்பட்ட செய்யும் முறையை அறியாத அறிவிலி, ஏதாவது தொழிலை மேற்கொள்வானானால்

அவன் பொய்யானாகிப் போவது மட்டுமல்ல, தான் ஏற்றுக் கொண்ட அச்செயலும் முற்றுப் பெறாது. தன் கைகட்கும் விலங்கு மாட்டிக்கொண்டு அவமானம் அடைவான். இவனிடம் ஏதாவது ஒருவகையில் பெருஞ்செல்வம் சிக்கிக் கொண்டாலோ, அப்பொருளால் அவனது துணைவரோ, சுற்றமோ, நட்பினரோ பயனடையார்கள். அவர்கள் பசித்து வாட மாற்றார், அயலார் அதை நன்கு அனுபவிப்பர். பைத்தியம் பிடித்த ஒருவன் கள்ளையும் குடித்துவிட்டால் எங்ஙனம் தன் நிலை கெட்டு நிதானம் இழந்து விடுவானோ அதைப் போலப் பேதமையாம் பைத்தியம் பிடித்தவன் பெருஞ் செல்வமாகிய கட்குடியில் மூழ்கி, தன் நிலை கெட்டு, நிதானமிழந்து தானும் கெட்டுப் பிறரையும் கெடுப்பான்.

இப்பேதையர் நட்பு மிகப் பெரிது. ஏனெனில் அவர்கள் நம்மை விட்டு நீங்கும் போது நம் உள்ளம் துன்பப்படுவதில்லை அப்பா! தொலைந்தார்கள் என்றே இன்பமடையும். எனவே, பேதையர் நட்பு பெரிது இனிதே!

மற்றும் அறிவிலி, அறிஞர் கூட்டத்தில் புகத்தக்கவன் அல்லன். அப்படிப் புகுதல், தூயதல்லாதவற்றை மிதித்த காலோடு பள்ளி அறையில் உள்ள மஞ்சத்தில் கால் வைத்ததைப் போன்று அருவருக்கத்தக்கதே.

## 98. புல்லறிவாண்மை

அறிவின்மை, பேதமையைக் காட்டிலும் மிகக் கொடியது தான். அறிவற்றவனாய் இருந்தும் தன்னை ஒரு பேரறி வாளனாக மதித்து அறிஞர்கள் கூறும் நல்லறிவை ஏற்றுக் கொள்ளாத தன்மையே பேதைமை ஆகும். இதையே புல்லறிவாண்மை என்ப. ஏனெனில் இவ்வுலகில் வாழும் அறிஞர் பெருமக்கள் செல்வமில்லாத வறுமை நிலையை இழிவாகக் கருதுவதில்லை. ஆனால் அறிவற்ற நிலை

வினையே இல்லாமை பலவற்றுள்ளும் மிக இல்லாமை எனக் கருதுவார்கள்.

அற்ப புத்தியுள்ளவன் புல்லறிவாளன், ஒருகால் மன மாறிப் பிறர்க்கு ஏதாவது பொருள் உதவி செய்தானானால் அது அவன் இயற்கைப் பண்பன்று. அக்கொடையைப் பெறுபவன் செய்த தவப்பயனேயாகும். அதோடு அவர்கள் தம் அறிவின்மையால் தாமே தமக்குத் தேடிக் கொள்ளும் வருத்தத்தை, வருத்துதல் செய்தற்குரிய அவர் தம் பகைவர் களாலும் அவர்களுக்குச் செய்துவிட முடியாது.

நாம் மிக்க பேரறிவுடையோம் என்னும் அகந்தை உடையவனாய் இருத்தலே புல்லறிவாண்மை ஆகும். இப்படிப்பட்டவன்தான் நன்கு கல்லாத நூற்களையும் நன்கு கற்றறிந்த பேதையாகக் காட்டிக் கொள்ள முன் வருவது தான், கடைபோகக் கற்றறிந்த பிறவற்றுள்ளும் இங்ஙனமே இவன் அறிவற்றவன் போலும் எனும் ஐயத்தைப் பிறர்க்கு உண்டாக்கி விடும். எனவே, புல்லறிவாளர் தம்மிடம் உண்டாகும் குற்றங்களை அறிந்து அவைகளை மறைக்காமல், அழிக்காமல்—மறைக்க வேண்டிய பொருளின்மை ஆடை யின்மைகளாம் பிறவற்றை மறைத்தல் வெறும் புல்லறிவு தான் என்பது பெறப்படும்.

தனக்குக் கிடைப்பதற்கு அருமையான நல்ல நூல்களை, நல்ல கருத்துக்களை வாய்ப்பு கிட்டிய காலத்தும் ஏற்றுக் கொள்ளாத புல்லறிவாளன், அவைகளால் வரும்நல்வாழ்வை அறியாமையால், தன்னையறியாமல் தனக்குத்தானே பெரிய துன்பத்தை உண்டாக்கிக் கொள்கிறான். அவன் தன்னை ஓர் அறிஞன் என்று கருதும் செருக்கால் பிறர் கூறும் நல்லுரைப்படியும் நடக்க மாட்டான். தானாகவும் தெரிந்து தெளிந்து செயலாற்ற மாட்டான். இந்த வகையில் தன் உடலிலிருந்து தன் உயிர் நீங்கும் காலம் வரையும், இவ்வுலகத்திற்கும் தனக்கும் அவன் ஒரு பொறுத்தற்கரிய தீராத நோயாகவே ஆகிறான்.

மற்றும் மிக நுட்பமான உயர்ந்த கருத்துக்களை —ஆராய்ச்சிகளை—ஓர் அறிஞன் இந்தப் புல்லறிவாளனிடம் சொல்லப் புகுந்தால், அவன் மூளை அக்கருத்துக்களை ஏற்றுக் கொள்ள இயலாமையால் அவனால் பழிக்கப்பட்டு முட்டாளாவான். தான் தன் புல்லறிவால் வாதாடி நின்று தன்னைத்தான் அறிந்த விதத்தால் அறிந்தவனாகக் கருதிக் கொள்வான். மற்றும் இவ்வுலகிலே உயர்ந்தோர்கள் தம் அறிவாலும் ஆய்வாலும் கண்டு நிலை பெற்று நிற்கும் தத்துவப் பொருளையும் அறநூல் கருத்துக் களையும் இல்லையென்று சாதிப்பவனை அறிஞர் பெருமக்கள், உலகின் கண் உலவும் பேயே என்றுதான் முடிவுகட்டுவார்கள்.

## 99. இகல்

மக்களினத்துக்குச் சிந்திக்கும் திறன் உண்டு. சிந்திப்பவன் பல கோணங்களிலே உலக வாழ்க்கையைக் காணுவதால் மனிதனுக்கு மனிதன் கருத்திலே மாறுபாடு கொள்ளக் கூடும். கொள்கைகள் நம்பிக்கைகள் பலவற்றிலேயும் மாறுபாடுகள் உள. ஆனால் அறியாமை அதன் காரணமாகத் தோன்றும். அகந்தை, சினம் இவைகளால்தான் அறிஞனென்னும் செருக்குக் கொண்டவன் தான் கொண்ட பிடியை விடாமையால் ஏற்படும் உளத்தின் மாறுபாட்டையே இகல் என்று கூறுகிறோம்.

இதுவே பகை உணர்வின் அடிப்படை. இது பண்பின்மையை வளர்க்கும் ஒரு நோயைப் போன்றது. இதனால் பீடிக்கப்பட்டவர்கள் மற்ற உயிரினத்தோடு ஒன்றுபட்டுப் பொருந்தி வாழாமல் மாறுபட்டுத் தனித்து வாழ்வார்கள். இத்தீய பண்பையே அந்நோய் வளர்க்கும். இந்த இகலின் அடிப்படையிலே நம்மோடு கூடாமையைக் கருதி, தான் பிரிந்து வாழ அன்பற்ற செயலை ஒருவன்

செய்தாலும், அவனோடு மாறுபடுதலைக் கருதி அவனுக்குக் கெடுதியைச் செய்யாமையே சிறந்தது. இந்த இகல் என்னும் துன்ப நோயை நம்மிடமிருந்து நீக்கி விட்டாலோ அதுவே நமக்கு நிலையான புகழைத் தரும். அது மட்டுமன்று; துன்பங்களுள் கடுமை யான துன்பமாகிய இந்த இகல் என்னும் மாறுபாட்டிலிருந்து நாம் விடுதலையாகி விட்டாலோ நமக்கு இன்பங்களிலே சிறந்த இன்பம் உண்டாகும். மற்றும் தம் உள்ளத்தில்மாறுபாடு உண்டாகும் காலத்தில் அதை ஏற்றுக் கொள்ளாமல் வளைந்து கொடுத்து வெற்றி காணும் தன்மை வாய்ந்தவர்களை மேம்பட்டு வெல்லக் கூடியவர்களே இவ்வுலகில் இல்லை.

பகைப் பண்பாகிய இந்த இகலாலே பிறரோடு போராடியே வாழ்க்கைப் போரில் வெற்றி காண்பேனென்று அதனையே மேற்கொள்ளும் ஒருவனது வாழ்க்கை தேய்ந்து போய் தவறு மேம்பட்டு விரைவிலே அழிவெய்தும். மேலும் பகைத்து உளமாறு பாடு கொள்ளும் மாறுபாடு எனும் இத்துன்பம் தரும் அறிவையுடையவர்கள் மேன்மையும் எய்தார். உலகிலே வெற்றிக்குக் காரணமான உண்மையான நீதி நூல்பொருளையும் அறியமாட்டார்கள் என்க.

எனவே, தன் உள்ளத்தின் மாறுபாடாம் விரோத எண்ணம் தோன்றிய காலத்திலே அதனை எதிர்த்து ஒழித்துத் தலை தாழ்ந்து நடப்பவர்களுக்குத்தான் ஆக்க முண்டு. அப்படியின்றி விரோத மனப்பான்மையை மேலும் மேலும் வளர்த்து அதனால் பிறரை வெல்லக் கருதினால் அவனுக்கு நிச்சயமாகக் கேடுதான் உண்டாகும். இதனையே மற்றோர் கோணத்திலிருந்து நோக்குவாம். ஒருவனுக்கு ஆக்கம் உண்டாகும் காலத்திலே—நன்மை வருங்கால்—காரணம் இருந்த போதிலும் அவன் தன் உள்ளத்திலே மாறுபாடு எய்தான். பகைவர்களையும் பகையெனக் கருதான்.

ஆனால் அழிவு வரும் காலத்தில் அவன் காரண மின்றியும் பகை உள்ளத்தோடு இகல்கொண்டு பகைவரல்லா

தவரையும் பகையெனக் கொண்டு எதிர்த்து வெல்லக் கருதுவான். எனவே, பகை உள்ளத்தால்—விரோத மனப் பான்மையால் ஒருவனுக்கு எல்லா வகைத் துன்பங்களும் உண்டாகும். மாறாக நல்ல மாறுபாடற்ற நட்பினால் நல்லறமாம் மேம்பாட்டு நிலை உண்டாகும்.

## 100. பகைமாட்சி

உள்ளம் மாறுபட்டால் உண்டாவது பகை எனப்படும். அரசன் முதல் ஆண்டிவரை உள்ள அனைவருக்கும் பகை உண்டு. அந்தப் பகைவர்களின் தன்மை, பண்பு என்ன? எவரிடம் பகை கொள்ளலாம். எவரிடம் பகை கொள்ளக் கூடாது என்பதை ஆராய்ந்தால், தம்மைவிட வலிமை மிக்கவர்களிடம் மாறுபட்டு எதிர்த்தலைக் கைவிடுதல் வேண்டும் என்பதும், தம்மைவிட வலி குறைந்து நம்மால் வெல்லக் கூடியவர்மீது பகைகொண்டு போர் செய்தல் வேண்டும் என்பதும் பெறப்படும்.

ஒருவன் அன்பில்லாதவனாய் வலிமிக்க துணையில்லாதவனாய், தானும் வலியில்லாதவனாய் இருந்தால், தன் பகைவனுடைய வலிமையை எவ்வாறு அழிக்க இயலும். எவன் ஒருவன் பகைக்கு அஞ்சுகிறானோ, அறிவும் பண்புமில்லாமலும் இருக்கிறானோ, பிறர்க்கு ஈயாத லோபியாகவும், பிறரோடு பொருந்திய நட்பில்லாதவனாகவுமிருக்கிறானோ அவன் தன் பகைவரால் எளிதில் தோற்கடிக்கப் படுவான். அதோடு உள்ளத்திலே நீங்காத சினத்தை உடையவனாய், தன் உள்ளத்தை அடக்கி ஆளும் வன்மை இல்லாதவனாய் உள்ளவனை எவரும், எக்காலத்தும், எவ்விடத்தும் வெற்றி கொண்டு வீழ்த்தி விடுவர்.

மற்றும் எவனொருவன் நல்வழியை நாடாமலும் பொருத்தமானவற்றைச் செய்யாமலும், பழியைப் பாராம

னும், நற்பண்பைக் கருதாமலும் இருக்கிறானோ அவன் பகைவரால் எளிதில் வெல்லக் கூடியவனே.

இங்குக் கூறப்பட்ட குணங்களோடு அறிவை மறைக்கின்ற சினத்தை உடையவனாகவும், பேராசை பிடித்தவனாகவும் இருந்தால் அப்படிப்பட்ட பகையை நாம் விரும்பிக் கொள்ளுதல் நலம். இங்கு கூறியவை அனைத்துமே மனித இனத்துப் பலவீனங்கள் இவைகளை உடையவனை வெல்லுதல் மிக எளிது என்க.

இனி நட்போடு பொருந்தி இருந்தே நமக்குப் பொருத்தமில்லாத தகாத செயல்களைச் செய்பவனுடைய பகையை எவ்விலையைக் கொடுத்தாகிலும் நாம் கைக்கொள்ளுதல் வேண்டும்.

எவனுக்கு நல்ல குணமில்லையோ, எவனிடம் பல குற்றங்கள் மண்டிக்கிடக்கின்றனவோ அவனுக்கு நல்ல துணை அமையாது. அதுவே (துணையில்லாமையே) பகைவர்க்கு அவனை வெல்லக் கூடிய நல்ல வாய்ப்பாகி விடும். மற்றும் அறிவில்லாதவனாய் அஞ்சுகின்றவனாய் உள்ள ஒருவனைப் பகைவனாகப் பெற்றால், அவனை எதிர்க்கும் பகைவர்க்கு வெற்றியால் அடையும் இன்பங்கள் வெகு தூரத்தில் இல்லை. அதோடு கல்வி கல்லாத மூடனைப் பகைத்துக் கொள்ளும் மிகச் சாதாரண செயலைக் கூடச் செய்யாதவனுக்கு, எக்காலத்தும் புகழ் வந்தடையாது.

## 101. பகை திறந் தெரிதல்

பகை எப்படிப்பட்டது என்பதைக் கண்டோம். தான் ஏற்கக் கூடாத பகையை ஏற்பதால் வரும் குற்றம் யாது? முன்னர், பகை மன்னர்களில் யாரை நண்பராக்கிக் கொள்ளலாம், யாரைக் கொள்ளக் கூடாது என்பதையும் அவ்வக் காலங்களில் கொள்ள வேண்டிய நெறிமுறைகளையும் ஆராய்தலே பகைத் திறம் தெரிதலாம். இது பகையது

திறமும், பகையினிடத்துச் செய்யும் திறமும் பொருள்படும்.

பகை என்னும் பண்பு கெட்ட ஒன்றை எவ( விளையாட்டாகக்கூட விரும்புதல் கூடாது. ஏ( நேரங்களில் விளையாட்டே வினையாகி விடுட வில்லை ஏராகக் கொண்டு உழுகின்ற வீரர்களி( அதிகார பீடத்தில் உள்ள ஆட்சியாளர்கள் பல கொடிது. அதை விட மிகக் கொடிது சொல்லை கொண்டு உள்ளத்தை உழுகின்ற அறிஞர்கள எனவே, இந்த இருவகைப்பட்டவர்களின் ட கொள்ளல் ஆகாது என்பதாயிற்று. அதோடு எவ( தானே தனித்து நின்று துணை ஏதுமின்றிப் பலர் தேடிக் கொள்கிறானோ அவன் ஒரு பித்தனைக் மிக்க அறிவிலியே. ஆனால் இதற்கு மாறாகத் த பகைவர்களையும் தனக்குச் சாதகமான கால( நண்பர்களாக்கிக் கொள்ள வல்ல நற்பண்புள்ள யிலேதான் உலகமே அமைதியில் நிலைபெற்று நிற்

இனி, தனக்கு யாதொரு துணையுமில்லாத ( இருவர் அல்லது இருசாரார் பகையாகி நிற்( ஏற்பட்டது என்றால் அவ்விரண்டு பகைவர்களி( துணையாக்கிக் கொள்ள முடியுமோ அதைத் துணை கொள்வதே சிறந்த முறையாகும். அப்படியின் பகைகளில் திறமனைத்தும் ஆராய்ந்து தெ( அல்லது தெளியாவிட்டாலும் தனக்குத் தாழ்ச் அழிவு உண்டாகும் காலத்திலே முற்கூறிய நட்பாகவோ பகையாகவோ கொள்ளாமல் அயல தனித்து விட்டு வைத்தலே நன்மை பயக்கும்.

மேலும் நம் துன்பங்களைத் தாமாக அறிய நட்பினருக்கு நாம் நம் துன்பங்களைப் பற்றிக் கூற வேண்டும். அங்ஙனமே நாம் வலியற்றுச் சோர்ந்து

தருணம் பார்த்திருக்கும் பகைவர் முன்னே நம்முடைய மெலிவைக் காட்டாதிருக்கக் கடவன்.

எனவே ஒருவன் தன் பகைவன் கர்வத்தை அடக்க வேண்டுமானால் அவன், தான் மேற்கொள்ள வேண்டிய செயல் முறைகளை நன்கு ஆராய்ந்து, தானே அதை முன்னின்று நடத்தி, மறதியடையாமல் தன்னையும் காத்துக் கொள்ள வேண்டும். முள்செடி மிக இளையதாக உள்ள போதே பிடுங்கி எறிவது எளிது. அதைப் போலப் பகைவரை யும் ஆரம்ப நிலையிலே அழித்தல் நன்று. முள்செடி முள் மரமாகியபின் அழித்தல் கடினம். அதோடு அதன் முட்கள் தன் கையையும் குத்தித் துன்புறுத்தும். பகைவரும் அங்ஙனமே. எனவே பகைவரது மனச் செருக்கைத் தொடக் கத்திலேயே தொலைத்தல் மேல். அலட்சியப்படுத்துபவர் மூச்சு விடும் நடைப்பிணங்களை ஒப்பார்களேயன்றி மனிதர் களே அல்லர்.

## 102. உட்பகை

மனம் மாறுபட்டு வெறுப்புணர்ச்சியை வெளிக்காட்டி, புறப்பகையாக ஒழுகுபவர்களைக் காட்டிலும் உள்ளத்திலே பகையும் உதட்டளவிலே நகையுமாய் ஒழுகுபவர்களான வஞ்ச நெஞ்சம் கொண்டவர்களே மிக்க கொடியவர்கள், ஆபத்துமிக்கவர்கள். அவர்கள் நம்மவர்களாகவே இருப் பினும் நம் நட்பினர் சுற்றத்தார் என்னும் பேரால் அமை யினும் அவர்கள் தன்மை நமக்குத் துன்பமே தருவதாகை யால் அவர்கள் விலக்கப்பட வேண்டியவர்களே.

நிழலும் நீரும் நன்மை தருவனவே ஆயினும், சில மரத் தின் நிழல் நோய் உண்டாக்கும். புளியமரத்தின் நிழல் சூடு. சில வகை நீர், சுனை நீர், புது மழை நீர், கிருமி கலந்த நீர் உடல்நலத்துக்குக் கேடு விளைவிக்கும். இவைகளை நாம் விலக்குவது போலவே, உட்பகையை நாம் விலக்குதல்

வேண்டும். வாள் போல் வெட்டுவோமென வெளிப்பட்டு நிற்கும் வெளிப்படையான பகைவர்களால் வரும் கேடு நாம் அறியத்தக்க ஒன்று. அதற்கு அஞ்ச வேண்டியதில்லை.

ஆனால் நண்பர்களைப் போல உறவினர்கள் மறைந்து நின்று செய்யும் துன்பம் சிறிதும் அறியமுடியாதது. எனவே, அவர்கட்கு அஞ்சித் தன்னைத் தற்காத்துக் கொள்ளல் நலம். இல்லையேல் மண்வினைஞர் பானை வனைந்தபின் உள்ளேயிருந்து, அடியோடு சக்கரத்திலிருந்து பானையை அறுத்தெடுக்கும் சிறு கத்தியைப் போல நாம் தளர்ந்துள்ள காலத்தில் நாம் அறியாமல் அவர்கள் நம்மை அடியோடு நாசம் செய்வார்கள் என உணர்க.

ஒருவனிடத்துத் தன் உள்ளம் திருந்தாத உட்பகை தோன்றுமானால் அது அவன் சுற்றம் அவனுக்கு வசப்படாமைக்குக் காரணமான பல வகைப்பட்ட குற்றங்களை அவனிடம் உண்டாக்கி விடும். மற்றும் ஒருவனுக்குத் தன் உறவுமுறையிலே உட்பகை உண்டானால் அவன் தான் இறந்துதான் போக வேண்டும் என்னும் இக்கட்டான நிலையை அது உண்டாக்கி விடும். எனவே தன்னைச் சூழ்ந்து நிற்கும் நண்பர்கள் சுற்றத்தார் இவர்களுக்கு உள்ளேயே பொருந்தாத உட்பகை ஒருவனுக்கு உண்டானால் அவன் எக்காலத்திலும் நிம்மதியாக வாழ முடியாது. நாள்தோறும் அவன் செத்துச் செத்துப் பிழைக்க வேண்டியவனே.

உட்பகை உற்ற குடும்பம் செப்பும் மூடியும் போன்றது. புறத்தே செப்பும் மூடியும் ஒன்றுபட்டுப் பொருந்தியதாகக் காணப்படினும் பொருள் வாங்கும் போது மூடி அகன்று தனித்து நிற்பதைப் போல உட்பகை உற்ற குடியும் புறத்தே ஒன்றாகக் காணப்படினும் அகத்துள் கூடாது தனித்தே நிற்கும். அதோடு அக்குடும்பம் உட்பகை உற்ற காரணத்தால் அரத்தால் தேய்க்கப்பட்ட இரும்பைப்போலச் சிறிது சிறிதாகத் தேய்ந்து தன்நிலை கெட்டு அழிவெய்தும் என்க.

எனவே, பிளவுபட்ட எள்ளைப் போல மிகச் சிறிய உட்பகை ஏற்படுமாயினும் அதை உடனே விலக்கி விடுதல் நன்று. இல்லையென்றால் அந்த மிகச் சிறிய உட்பகையும் மிகப் பெரிய கேட்டை உண்டாக்கி விடும். அதோடு உடன் பாடில்லாத, மன ஒற்றுமையில்லாத, உட்பகையுற்ற இருவர் ஒன்று சேர்ந்து வாழும் வாழ்வு, ஒரு சிறு குடிசையிலே ஒருவன் பாம்போடு வாழும் வாழ்வைப் போல அச்சமும் ஆபத்தும் மிக்கது.

## 103. பெரியாரைப் பிழையாமை

ஆற்றல் மிக்க அரசனிடத்தும், அறிவின் மிக்க பெரியோர் களிடத்தும், தவறு செய்யாமல் ஒழுகுதல் நம் கடமை. ஏனெனில் இவ்வுலகில் செய்ய வேண்டிய நற்கடன்களை முற்ற முடியச் செய்யும் ஆற்றலும் வளனும் மிக்க உயர்ந்த வர்களின் வல்லமையை இகழாமல் இருப்பதுதான் தம்மிடம் தீங்கு வராமல் காத்துக் கொள்ளும் காவல்களிலெல்லாம் தலை சிறந்த காவலாகும்.

அரசனேயாயினும் மற்றவரே ஆயினும் ஆற்றல் மிக்க அறிஞர் பெருமக்களை அவமதித்து ஒழுகுவார்களாயின் அது அவர்கட்கே எக்காலும் தீராத துன்பத்தைத் தரும். எனவே வேற்று வேந்தரை வீழ்த்த வேண்டிய காலத்திலும் அல்லது தன்பால் பிழை செய்தவர் களைத் தண்டிக்க வேண்டிய காலத்திலும் விரைந்து செயலாற்றும் வேந்தன் பெரியவர் களிடத்துப் பிழை செய்யாமை நலம்.

ஆனால் தான் கெடத்தான் வேண்டுமென்று ஒருவன் நினைத்தால் மேற்கூறிய பெருமை, அறிவு, முயற்சி ஆகிய மூவகை ஆற்றலுடைய பெரியார்களிடம் தவறு செய்யலாம். அத்தவறுதான் என்றோ ஒரு நாள்தானே வரும் .எமனை

உடனே வலிய வரும்படி கை அசைத்துக் கூப்பிடுவதை
ஒக்கும்.

பகைவர்களுக்குக் கொடியவனான மிக்க வல்லமை
யுடைய அரசனால் கோபிக்கப்பட்டவர்கள் அவனிடம் தப்
ஓடி வாழ முயன்றால், அவர்கள் எங்கும் அமைதியா
வாழ்தல் இயலாது. அதைப் போலவே ஒருவன் பெரு
தீயால் சுடப்படினும் பிழைத்து வாழலாம். ஆனால் அறிஞ
பெருமக்களின் கோபத்துக்கு ஆளானோர் சிறிதும் எந்
வகையிலும் உய்தல் இல்லை. ஏனெனில், தகுதி வாய்ந்
ஒழுக்க சீலர்களும், ஞானிகளும் ஒருவனைச் சினந்தா
அவன் எப்படிப்பட்ட உயர்ந்த வாழ்வும், பெருஞ்செல்வமு
உடையவனாயினும் அவன் மண்ணோடு மண்ணா
வேண்டியவனே.

அது மட்டுமன்று. மலையொத்த நிலை குலையா
அருந்தவத்தினர் அல்லது பெரியோர் பிறரைக்கெட
நினைத்தாலே போதும். நிலைத்து நின்ற செல்வமுடைய
வரும் தம் குடியோடு இந்நிலத்தில் மாய்ந்து அழிவர்
எனவே ஆற்றல் மிக்க வேந்தனே ஆயினும் உயர்ந்
கொள்கைகளைக் கடைப்பிடிக்கும் அறிஞர் பெருமக்களா
வெகுளப்படின், தாம் தம் பதவி கெட்டு, இடை நடுவிலே
கெட்டு அழிந்து விடுவார்கள் என்பது திண்ணம்.

அது மட்டுமா, வேந்தனோ, வேந்தனை ஒப்பவர்களோ
தாம் மிகப் பெரிய அரண், பொருள், படை, நட்பு எனும்
பற்றுக்கோடு உடையவர்களே ஆயினும் அவர்கள் சிறப்பு
மிக்க பெரியோர்களால் கோபிக்கப்பட்டால் எவ்வகையிலும்
தாம் தப்பி வாழ்தல் இயலாது என்பதை உணர்தல்
வேண்டும்.

# 104. பெண்வழிச் சேறல்

அன்புளத்தோடு தன்னால் ஆளப்பட வேண்டிய மனைவியின் ஆணைக்குட்பட்டு அவளால், தான் ஆளப் படுதலே பெண் வழிச் சேறல் என்பது. சான்றோர் பெரியோர்களிடம் தவறு செய்தல் எவ்வளவு தீமையைப் பயக்குமோ, அதைவிடத் தீமையைப் பயப்பது தன் மனைவி யின் ஆணைக்குட்பட்டு அஞ்சி நடக்கும் குணமும் ஆகும். இப்படிப்பட்டவர்கள் மாட்சிமையுற்ற நல்ல அறப்பயன்களை அடையார். மற்றும் தொழில் சிறப்பெய்தி செல்வமோங்க நினைக்கும் ஊக்கமுடையவர்கள் பெண்ணுக்கு ஏவல் செய் யும் தன்மையை வேண்டாத செய்கையாகவே கருதுவர்.

செயலாற்றும் செயல் வீரர்கள் பெண்களுக்கு ஏவல் செய்வதை நிச்சயமாகவே விலக்கி விடுவர். அதலலாமல் தன்னிடமுள்ள ஆண்மையைக் கருதாமல், உரிமையைப் போற்றாமல் தன் பெண்மைக்கு அஞ்சிநடப்பவன் அடையும் பெருஞ்செல்வம், நல்லோர் முன்னிலையில் அவனுக்கு மட்டு மல்லாமல் ஆண் வர்க்கத்துக்கே பெருத்த அவமானத்தை உண்டாக்கி விடும். அந்த வகையிலே பெண்ணடிமைப் பட்டவன் தான் நல்ல அறிஞர் கூட்டத்திலே செல்லும் காலத்திலெல்லாம் வெட்கப்படுவான்; தலை குனிவான். மற்றும் பெண்ணடிமையாகி மறுமைப் பயனுமற்ற அவன் மேற்கொள்ளும் செயல் திறனெல்லாம் வீறு பெற்றதாகவும் அமையாது, சிறப்புமடையாது.

தான் ஒருவனுக்கு நல்ல உபகாரமான நன்மைகளைச் செய்ய வேண்டுமென்று விரும்பினால் ஆண்மை மிக்கவன் துணிந்து அதைச் செய்வான். ஆனால் மனைவிக்கு அஞ்சும் ஒருவனுக்கோ அதைச் செய்யும் சுதந்தரம் இல்லை. சுதந்தரமின்மையால் துணிவுமில்லை. அவனால் நல்லவர் களாம், தாய், தந்தை, உடன்பிறந்தார், நண்பர் அருந்தவர், சான்றோர் முதலிய யாவருக்கும் நன்மை

உண்டாகாது. ஒருவன் தேவர்களைப் போல் வாழினும் மனைவிக்கு அஞ்சுபவன் ஆண்மையும் பெருமையும் இல்லாதவனே.

தன் மனைவிக்கு அடிமைப்பட்டு அவள் கூறிய ஏவல் தொழில் செய்து பணிந்து வாழும் ஆண்மையைக் காட்டிலும் நாணத்தால் சிறந்து விளங்கும் பெண்மையே சிறப்பு மிகுந்ததாகும். ஏனெனில் அத்தகைய அவனிடம் ஆண்மை இல்லாமல் போக, அடிமைத்தனம் மிக, அது ஆண்மையும் பெண்மையுமற்ற பேடினத்தனமே மேலோங்கி நிற்பதால் பேடித்தன்மையினும் சிறப்புடைய பெண்தன்மையே மேலானது என்பது பெறப்படும். இவர்தாம் தம் நண்பர்களின் குறையை நிறைவேற்றவும் திறனில்லாதவர் ஆகையினால் அறச்செயலும், பொருள் முயற்சியும் பிற பொதுத் தொண்டும், கடமையும், இன்பநிலையும் பெண்ணேவல் செய்வானிடம் அமையா என்க.

எனவே, அறிவு மிக்க சிந்தனைத்திறனும் செல்வமும் அமைந்த செயல்வீரர்களுக்குப் பெண்ணடிமைப்பட்டு அவள் கூறும் ஏவல் வழி ஒழுகும் அறிவற்ற அடிமைத்தன்மை எக்காலமும் சிறிதும் உண்டாகாது.

## 105. வரைவின் மகளிர்

பெண்ணுக்கு அடிமை பூண்டு மனைவியின் தாசனாக இருப்பதால் ஏற்படும் குற்றங்களையும், தாழ்வையும் போலவே பொது மகளிராகிய கணிகையர்பால் ஒருவன் அன்பு பூண்டு ஒழுகுவதாலும் பலப்பல இன்னல்களும் இழுக்கும் உண்டாகும். உள் அன்பினால் காதல் செய்தவர்களாகிய அவர்கள் பொருளினால் காதல் கொள்பவர் அல்லரோ? இனிமையாகப் பேசும் அவர்தம் பேச்சால் மயங்காதவர்களும் உளரோ? அங்ஙனம் மயங்கும் மாந்தர்கள் பிற்காலத்தில் தம் வாழ்வில் தாழ்வையும் துன்பத்தை

யும் அடைவர். பொதுமகளிர் பிறரால் அடையும் பயனை ஆய்ந்து இனிமையாகவும் பண்போடும் பேசுவார்கள். ஆயினும் அவர்கள் சொல்லையும் பின்விளைவையும் அளந்தறிந்து விலகிவிடல் வேண்டும். ஏனெனில் கொடுப்பவரை விரும்பாது பொருளையே விரும்பும் பொருட்பெண்டிரை ஒருவன் அன்போடு தழுவுதல் இருட்டறையில் முன்பின் காணாத பிணத்தைத் தழுவுதலைப் போல உணர்வும் அன்பும் அற்ற ஒன்றேயாம் என உணர்க. பிணத்திடம் அன்பில்லை, உணர்ச்சியில்லை, உயிரில்லை. கனிவில்லை, காதலில்லை. தன்னிடம் செலுத்தப்பட்ட காதலைத் திருப்பித் தரும் ஈடுபாடில்லை. இந்த வகையில் பொருட்பெண்டிர் உயிரோடு இருப்பினும் பிணத்துக்குச் சமமே. ஆகையால் தன் அருளோடு கூடிய நற்பொருளை ஆராயும் அறிஞர் பெருமக்கள் இன்பத்தையல்லாமல் பொருளையே பொருளாகக் கொண்டு வாழும் கணிகையரிடத்துப் பெறும் அற்ப சுகத்திலே ஆழ்ந்துவிட மாட்டார்கள்.

இயற்கை அறிவு நலனில் மேம்பட்டவர்களாய் கல்வி கேள்விகளாம் மாட்சிமைப்பட்ட அறிவினை உடையவர்கள் தம் நலத்தைப் பொதுஉடைமையாக்கி விலைகூறி விற்பவர்கள் அற்ப நலத்தைத் தீண்டவும் மாட்டார்கள். அதை எச்சில் என விலக்கி விடுவார்கள். அது மட்டுமா? எவர் தம் அறிவு ஒழுக்கங்களால் தம் புகழை உலகில் பரப்புகின்றார்களோ அவர்கள் தம் கலையால், இசையால், நடனத்தால் செருக்கு மிகுந்து தம் இன்பத்தை விலை கூறும் மாதர்கள் சுகத்தை விரும்ப மாட்டார்கள்.

இவ் விலைமாதர்கள் நெஞ்சில் பிறவற்றை ஆசைப்பட்டு அவைகளை நிறைவேற்றுபவர்களை உடலால் தழுவுகின்றனர். அவர்கள் மாயமகளிர். இலட்சியவாதிகளாகும் உறுதி கொண்ட நெஞ்சில்லா மாந்தர்கள்தாம் இவர்களைச் சேர்வார்கள். ஆனால், பின்னால் வரும் துன்பத்தை அறியாத அறிவிலிகளோ, தம் அழகு, சொல், செயல்களால்

வஞ்சித்தலை உடைய இக்கணிகை மாதர்களைத் தெய்வ மகளிராக மதித்துப் போற்றுவார்கள். அத்தகைய அறிவற்ற இழ்மக்கள் வீழ்ந்து கிடக்கும் நரகமே, சிறிதும் உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்னும் வரையரையில்லாது யாவரையும் தழுவிக் கிடக்கும் விலைமகளிர் தம் மென்மையான அழகிய பூண் அணிந்த தோள்கள் ஆகும்.

யாரிடமிருந்து திருமகள் நீங்கி நிற்கிறாளோ யாரிட மிருந்து கல்வி, செல்வம், புகழ், பண்பு ஆகிய அனைத்தும் விலகி விடுமோ, அவர்களே இருவகைப்பட்ட மனம் (பொருளால் கூடி மனத்தால் கூடாதமாண்பு) உடைய விலை மகளிரோடும், கள்ளோடும், சூதோடும் தொடர்பு கொள் வார்கள் என உணர்க.

## 106. கள்ளுண்ணல்

உலகத்தின் சமநிலையை அழித்து அதன் நிலை கெட்டுப் பல தீச்செயல்களைச் செய்விக்கும் மயக்கப் பொருளாம் கள்ளுண்ணல், பலவகைக் குற்றங்கள், தீங்குகள், மறச்செயல் களுக்குக் காரணமாகி நிற்கின்றதாகையினாலே, இக்கள்ளின் மேல் காதல் கொண்டு வாழ்கின்றவர்கள் பிறரால் மதிக்கப் படார். பகைவரால் அஞ்சப்படார். அதோடு முன் தம்மிடம் பொருந்தி நின்ற புகழையும் இக்குடியால் இழந்து விடுவர். ஆகையினாலே ஒருவன் கள்ளை உண்ணாது ஒழித்தல் வேண்டும். இல்லை, கள்ளைக் குடித்துதான் ஆக வேண்டுமென்றால், அறிவுமிக்க — குண நலன் மிக்க சான்றோரால் தான் மதிக்கப்பட வேண்டியதில்லை என்றால் கள்ளை உண்க. உண்டு சான்றோரால் இகழப் படுக.

மேலும் எப்படிப்பட்ட தவறு செய்தாலும் சகித்துக் கொள்ளும் ஒருவன் தாயும், தன் மகன் கள் குடித்துவிட்டுத்

தன் முன் வந்தால் முகம் களிப்பாள்எனில், எக்குற்றத்தையும் பொறுத்தலாகாச் சான்றோர்கள் இதனால் கொள்ளும் அருவருப்புக்கும், வெறுப்புக்கும் ஓர் அளவுண்டோ? இந்தக் கள்ளை உண்ணுதலால் வரும் பெருங்குற்றம் உலகத்தார் நம்மைக் காணாது, அஞ்சி நீங்கும் தன்மை வாய்ந்தது. அவர்கள் மட்டுமல்லர், உயிரினும் சிறந்த நாணமும் கட்குடியர்களைக் கண்டு புறங்கொடுத்து ஓடிவிடும். எனவே, தன்னிடத்திலுள்ள பொருளைக் கொடுத்துக் கள்ளைக் குடித்து அதனால் தம் மெய்மறந்து விடும் மயக்கத்தைக் கொள்ளுதல்தான் செய்வதறியாத, வாழ வேண்டிய நல்லொழுக்க நெறி அறியாத தன்மையே ஆகும்.

அது மட்டுமன்றி கள்ளுண்பார் நஞ்சுண்டவர்களைப் போன்றவரே. நஞ்சு உயிரைப் போக்கும். கள்ளோ உணர்வைப் போக்கும். உயிர் போன பின் உடலில் உணர்வில்லை. நஞ்சு நிரந்தரமாகச் செய்வதை, கள் தற்காலிமாகச் செய்கிறது. உறக்கமும் சாவைப் போன்றதுதான். உறக்கம் தற்காலிகமான உணர்வற்ற நிலை. சாவோ மீளா உணர்வற்ற நிலை.

இனி மதுவை மறைவாகக் குடித்துக் களிப்பால் அறிவு சோர்பவர்களோ, அவன் கள்ளுண்ட நிலையை அறிந்து உணரப் பெற்றுக் கேலி செய்யப் பெற்று நகையாடப் பெறுவர். மற்றும் ஒருவன் தன்னோடு பழகுபவர்களிடம் தான் கள் குடியாதபோது, நான் எக்காலத்தும் மது உண்டறியேன் என்னும் பொய்யைச் சொன்னால் அடுத்துத் தான் கள் உண்ட காலத்தில் முன் தன் உள்ளத்திலே மறைந்துள்ள அக்குற்றம் முன்னையிலும் அதிகப்படும். எனவே, அங்ஙனம் கூறற்க. ஏனெனில் அது மறைக்கப்பட்ட குற்றமாம். அச் செயலும் செய்யற்க என்பதாம்.

மேலும் கள்ளுண்டு களித்தாடுகின்ற ஒருவனிடம் அதன் தீமையைக் காரண காரியங்களோடு விளக்கப் புகுத்தல், நீர்க் கீழ் உள்ளவனைத் தீக்கோல் (பந்தம்) ஏந்தி உள்

சென்று தேடுவதை ஒக்கும். அதனால் ஒரு பயனும் இல்லை.

கள் குடியன் ஒருவன் கள் குடியாத காலத்திலே வேறொரு கள் குடியனைக் காண்பான் அல்லவா? அப்போது நானும் கள் குடித்த காலத்திலே தன் நிலை குலைந்து பேசி ஆடியிருப்போம், மயங்கிச் சோர்ந்திருப்போம் என்பதை உணர மாட்டானா? அங்ஙனம் உணர்ந்தால் பின்னர் அவன் மதுவைத் தீண்ட மாட்டான் அல்லவா?

## 107. சூது

கள் குடிக்கும் தீய பழக்கத்தைவிடத் தீதானது பொருள் இன்பங்கட்கு இடையிடையே சூதாடுதலாகும். ஓரளவு குடித்த பிறகு ஒருவன் மயங்கிச் செயலற்று வீழ்வான். அதற்குப் பிறகு அவன் குடிக்க முடியாது. ஆனால் சூதாடு பவனுக்கு ஓர் எல்லையே இல்லை. சூதாடுபவனுக்கு பசி தாகம் இல்லை. நேரம் காலம் இல்லை. மனைவி, மக்கள், வீடு, தொழில் முதலிய சிந்தனையும் இல்லை. இத்தகைய சூதினை அது அடுத்தடுத்து வெற்றி தருமாயினும் விரும்பாது விலக்குக. ஏனெனில் அவ்வெற்றிதான், தூண்டிலில் கோத்த புழுவைத் தனக்கிரையாக எண்ணி விழுங்கிய மீனின் அவல நிலைக்கே தன்னைக் கொண்டு சேர்க்கும் என்க.

மற்றும் சூது களத்திலே சிலர் ஏதோ சில நேரங்களில் வெற்றி பெறலாம். ஆனால் பல நேரங்களில் அந்தச் சிலரும் இழந்துதான் ஆக வேண்டும். ஆக, ஒன்று அடைய நூறு இழக்கும் தன்மைதான் சூதின் தன்மை. இதைக் கைக் கொண்ட சூதாடிகளுக்கு நல்ல அறிவு நெறியான வாழ்வேது? இல்லவே இல்லை. உருளும் சூது கருவியால் அடையும் பொருள் ஓயாது. இடைவிடாது பந்தயம் சொல்லிச் சொல்லி உருட்டிச் சூதாடுபவர்களிடம்

முன்னரே அமைந்துள்ள செல்வமும் அவர்களை விட்டுப் புறம் சென்று மற்றோரிடத்தில் தங்கிவிடும்.

இந்தச் சூதுதான் துன்பங்கள் பலவற்றைத் தருதலோடு தன் மதிப்பையும் புகழையும் கெடுக்கும். இதைக் காட்டிலும் வறுமையைத் தரவல்லது வேறொன்றும் இல்லை. சூதாடு களமே கதி என்றும், சூதாடு கருவியே தன் ஆயுதம் என்றும், அச்சூதாடும் திறமையும் ஒழுக்கமுமே மேலானதென்றும் பெருமையாக எண்ணி ஒழுகுபவர்களே, இருந்தும் இல்லாத தரித்திரம் பிடித்தவர்கள் ஆவார்கள்.

இனி இந்தச் சூதினால் உண்டாகும் இன்னல்களைச் சிறிது காண்போம். சூது என்னும் மூதேவியால் விழுங்கப் பட்டவர்கள் தம் பசி ஆறப் புசிக்கும் பாக்கியம்அற்றவர்கள். அதோடு பலவகைப்பட்ட துன்பத்திலும் உழல்வார்கள். வழி வழியாக வந்த தம் பெருஞ்செல்வத்தையும் பரம் பரையாக நிலை பெற்ற பண்பாட்டையும் இச்சூதாடு களத்திலே அறம்பொருள் இன்பங்களைத் தேட வேண்டிய இளம் பருவத்திலே புகுந்தவன், முற்றும் இழந்துவிட வேண்டியவனே.

சூதாடும் ஒழுக்கமுள்ளவன் தன் பொருளை அழித்துக் கொள்ளுகிறான். பொய்யை மேற்கொண்டு ஒழுகுவான். அதனால் தன் உள்ளத்திலே எழும் அருளைக் கெடுத்துக் கொள்வதோடு துன்பத்திலும் உழல்வான். அவனிடம் உடையும், செல்வமும், உணவும், புகழும், கல்வியும் ஆகிய இவ்வைந்தும் நிச்சயமாக நிலைபெற்று நில்லாவாம்.

ஆயினும் இப்படிப்பட்ட தீமைகள் பல மண்டிக் கிடப்பினும், நலன்களை நாம் இழக்குந்தோறும் ஒரு சூதாடிக்குச் சூதின் மேல் பற்று அதிகமாகி அதிகமாகி நீடிக்கிறது. இதைப் போலவே இவ்வுடல் துன்பத்தை அதிகமாக அனுபவிக்கும் தோறும் உயிர் அதையே காதலித்து விடாப்பிடியாகப் பற்றி நிற்கின்றது.

# 108. மருந்து

இந்த உடல் பிணி வயப்படுகிறது. இதற்குக் காரணம் என்ன? மருத்துவ நூல் வல்லவர்கள், வாதம், பித்தம், சிலேத்துமம் ஆகிய இம்மூன்று பகுதியும் இவ்வுடலிலே இருக்க வேண்டிய அளவுக்குக் குறைந்தாலும் மிகுந்தாலும் உடலுக்கு நோய் உண்டாகும் என்று கூறுவர். இந்த மூன்றும் மிகாமலும் குறையாமலும் அவை அவை உடலிலே அமைய வேண்டிய அளவிலே இருக்கும்படி கண்காணிப்பது நம் கடமையாகும். இந்த உடல் அன்னமய கோசம் எனப்படுகிறது. அதாவது நாம் உண்ட உணவில் திரட்சியும் வளர்ச்சியுமே இவ்வுடல் ஆகும்.

எனவே, நாம் முன்னரே உண்ட உணவு செரித்து விட்டதா எனக் குறிகளால் அறிந்து உண்டால் இவ்வுடம்புக்கு மருந்து என வேறொன்று தேவையே இல்லை. அதோடு உணவு செரித்த பின்னரே உண்ணுதல் வேண்டும். பின் உண்ணப்படுவதும் அளவறிந்து உண்ணுதல் வேண்டும். அவ்வாறு உண்டால், பெறுதற்கரிய இந்த மனித உடம்பைப் பெற்ற நாம் நீண்டநாள் வாழ்வோமென்பது நிச்சயம்.

நமக்குச் சீரணம் ஆன பின்னும்கூட நன்றாகப் பசி உணர்வு ஏற்பட்ட பின்னரே உண்ணுதல் வேண்டும். பின் உண்ணப்படும் அதுவும் அறும் அளவினை அறிந்து அவ்வளவினதாக உண்ண வேண்டும். மாறுபாடில்லாத உணவு வகையினையே அற்றபடியை அறிந்து மிகப் பசித்தபின்னரே உண்ணுதல் வேண்டும். இங்ஙனம் மாறுபாடற்ற உணவை அளவு மீறாமல் உண்பவனுக்கு உயிர் இவ்வுடலிலே வாழ்வதற்கு இடையூறான நோய்களினால் துன்பம் ஒன்றும் உண்டாகாது.

இங்ஙனம் அளவிற்கும் குறைவாக உண்பவனிடத்திலே நோய் அணுகாமையினாலே இன்பம் நிலைத்து நிற்கும்.

ஆனால் அளவுக்கு மிகவும் அதிகமாக விலங்கைப் போல் இறையை விரும்புகின்ற ஒருவனிடத்திலே உடலை வருத்தும் நோயே நிலைத்து நிற்கும.

ஏனெனில் தன் வயிற்றில் ஏற்படும் பசித் தீயின் அளவினையும் உணவின் அளவினையும் விளையும் தீமையின் அளவினையும் அறியானாய் உணவின் உருசியையும் அருமையையும் நோக்கி அளவுக்கதிகமாக உண்பவனுக்கு, நோய் அளவின்றிப் பலவாக வந்து வருத்தும்.

ஒருவேளை தட்பவெப்ப நிலை வேறுபாட்டாலும், பிறவற்றாலும், ஒருவனுக்கு நோய் உண்டாயிற்று எனில், சிகிச்சை செய்யும் மருத்துவன், நோயையும் அதன் மூல காரணத்தையும், அது தணிக்கச் செய்ய வேண்டிய வழி வகைகளையும் ஆராய்ந்து தெளிந்து அறிந்து நோய் தணிப்பதற்கு உரிய வழியறிந்து, உடலுக்குப் பொருந்துமாறு தான் சிகிச்சை அளிக்க வேண்டும்.

மருத்துவ நூல் கற்றுத் துறைபோய ஒரு நல்ல மருத்துவன் நோய் கொண்டவன் வயது, பருவம் முதலியவற்றையும் பிணியின் அளவையும், தான் சிகிச்சை செய்ய வேண்டிய காலத்தையும் கருதியே சிகிச்சை செய்தல் முறையாகும்.

எனவே மருந்து எனும் பகுதி, நோயாளி, வைத்தியன், மருந்து, உடனிருந்து மருந்து ஈந்து துணை நின்று பணியாற்றுபவன் என்னும் நான்கு வகையினை உடைய, நான்கு திறத்தினை உடையதாகும்என்று மருத்துவ நூலார் கூறுவர். இதன் விரிவினை வல்லார் வாய் கேட்டுணர்க. இங்குச் சொல்லப்பட்ட நான்கு வகையினர் ஒவ்வொருவருக்கும் நான்கு கூறுகள் உள.

**நோயாளனின் நான்கு கூறுகள் :** பொருளுடைமை, நோயின் உண்மை உரைத்தல், மருத்துவன் சொற்படி நடத்தல்; துன்பம் பொறுத்தல்.

மருத்துவனுக்கு நான்கு கூறுகள் : நோய் கண்டு அஞ்சாமை, நூலறிவு நுண்ணறிவுடையனாதல், அனுபவ முடையவனாதல், அருளுடைமை.

மருந்தில் நான்கு கூறுகள் : பல நோய் தீர்க்கும் தன்மை, பயனுடையதாயிருத்தல், உற்ற நோயை எளிதில் தீர்த்தல், எளிமையாகக் கிடைப்பது.

துணைவன் நான்கு கூறுகள் : நோயாளியிடம் அன்பா யிருத்தல், இயல்பாகவே இரக்கமுடையனாதல், அறிவுடை யனாதல், மருத்துவன் சொற்படி நடத்தல்.

இப்பதினாறும் ஒருங்கே சேர்ந்ததே மருந்து எனப்படும்.

## 109. குடிமை

ஆள்பவனின் அங்கமாகிய அமைச்சன், தூதன், ஒற்றன், கொள்ள வேண்டிய நண்பன், விலக்க வேண்டிய நண்பன், பிறர் என அனைவரின் இயல்புகளையும் கண்டோம். இனி ஆளப்படும் குடிமக்கள் தன்மை என்ன? உயர்ந்த நல்ல குடியில் பிறந்தவர்கள் இலக்கணம் யாது என்பதை ஆராய் வோம். நல்லகுடியில் பிறந்தவர்களிடமே கருத்தும், சொல்லும், செயலும், ஒத்ததாகிய செப்பமும், பழி பாவங் களுக்கு அஞ்சும் நாணமும், இயல்பாக அமைந்திருக்கும்.

எனவே இவர்கள் நல்லொழுக்கங்களிலிருந்து தவறார்; வாய்மையிலிருந்தும் விலகார். நாணத்தைக் கடைப் பிடிப்பர். இவைகளோடு வறிஞர் தம்மிடம் உதவி கேட்டு வந்தபோது, முக மலர்ச்சியோடு ஈதலும் இன்சொல் பேசு தலும், பிறரை எக்காரணம் கொண்டும் இகழாமையும் அமையப் பெற்றவராகி இருப்பர். இவரே திரிபில்லாத நல்ல குடிப்பிறந்த குடிமக்கள் ஆவர்.

இனி, இயல்பான நல்ல குடியில் பிறந்தவர்கள் ஒரு வேளை வறுமையுற்றாலும் அவர்தம் குடிப்பிறப்பிற்கு மாசுண்டாகும் அற்பமான, கீழ்மையான செயல்களைச்

செய்ய மாட்டார்கள். தாம் உயரும்படியோ, தம் வறுமை நீங்கும்படியோ, பிறர் கோடி கோடியாகப் பொன்னும், பொருளும் கொடுத்தாலும், அவற்றில் தாம் மயங்கித் தம் ஒழுக்கம் குன்றும் செயலைச் செய்ய மாட்டார்கள். மற்றும் தம் வறுமை நிலையால் தம் ஈகைத் தன்மை சுருங்கிய காலத்தும், தொன்றுதொட்டுவரும் தம் பழங்குடித் தன்மையாம் பண்பாட்டிலிருந்து விலகிவிடவும் மாட்டார்கள். தாம் தம் குல நலனில் அக்கறை காட்டிப் பிறந்த குடிக்கு மாசுண்டாகாமல் வாழும் காரணத்தால் தம் வறுமைக் காலத்துச் சூழ்நிலை காரணமாக, வஞ்சனையைத் தம் உளத்திலே கொண்டு அறமற்ற கீழ்ச் செயல்களை அவர் செய்தல் இலர்.

நிலத்தின்மீது ஏற்படும் களங்கம், குறைபாடுகள், மாசுமறு, ஒரு சிலருக்குத்தான் கண்ணில் படும். ஆனால் விண்ணில் விளங்கும் நிலவில் உள்ள களங்கமோ எல்லார்க்கும் புலப்படுகிறது. இங்ஙனமே நல்ல உயர் குடிப்பிறந்தவர்கள், தாம் தவறி ஏதாவது குற்றம் செய்து விட்டாலோ அக்குற்றம் விண்ணிடத்தே காணப்படும் நிலவின் களங்கம் போலப் பலர்க்கும் நன்கு புறப்படும்படி பளிச்சென விளங்கித் தோன்றும்.

எனவே, குலநலமுடையவனது அற ஒழுக்கத்திலே கருணையின்மை காணப்பட்டால், அவன் குடிப்பிறப்பிலேயே சந்தேகம் ஏற்படும். இது இயற்கை. எங்ஙனம் மண் வளத்தையும் விதையின் தன்மையையும் பூமியிலிருந்து முளைத்தெழும் முளை தெளிவாகக் காட்டுமோ, அங்ஙனமே நற்குடிப்பிறந்தவனை அவன் வாய்ச் சொற்களே நன்கு விளக்கிக் காட்டும். மற்றொன்று எப்படி நலம் அனைத்தையும் தான் ஒருவன் பெறுதல் வேண்டுமாயின் அவன் நாணத்தைக் கடைப்பிடிக்க வேண்டுமோ, அப்படியே நற்குடிப் பிறந்தவள் என்றும் பாராட்டுத் தனக்கு நிலை பெற வேண்டுமானால் யாவரிடமும் பணிவுடையவனாக நடந்து கொள்ளுதல் இன்றியமையாததாகும்.

# 110. மானம்

நல்ல குடியில் பிறந்தவர்க்கு இன்றியமையாத குணம் மானமே. அதுதான் எக்காலமும் தன் நிலையிலிருந்து தாழாமையும், எதிர்பாராமல் தாழ்வு வந்தால், உயிர் வாழாமையும் ஆகும். எக்காலத்திலும் எச் சூழ்நிலையிலும் தனக்கு இன்றியமையாத அளவற்ற சிறப்பும் செல்வமும் பெறுதற்குத் தான் தன் நிலை கெட்டு மானம் அழிந்து குடிப்பிறப்பு குன்றி அழியத்தக்க செயல்களைச் செய்ய வேண்டுவதாயின், அவற்றைச் செய்யாதொழித்துத் தன் மானத்தைக் காப்பதே நம் கடன்.

நமக்கு நல்ல பேரும் புகழும் மேன்மையும் வேண்டியனவே. ஆனால் நற்குடிப் பிறந்து புகழுடனே மானத்தை நிலைநிறுத்த விரும்புகிறவர் மானம் அழியத்தக்க செயல்கள் செய்வதால் தாம் சீர் பெற்று உயரமுடியும் என்னும் நிலை உண்டானாலும், அதற்கான இழிவான செயல்களைச் செய்ய மாட்டார்கள். செல்வமும் பதவியும் பெற்ற உயர் காலத்தில், வாழ்வில் பதவியும் பெருமையும் மிக்கபோது, பிறரிடம் பணிதலாம் தன்மை வேண்டும்.

ஆனால் வாழ்வு கெட்டு வளமழிந்து தாழ்ச்சியடைந்த போது, பலரிடம் பணிந்து தாழ்ந்து நிற்றல் கூடாது. தன் குடிப்பெருமையைக் காக்கத் தன் மானத்துக்கு மாசுவராமல் பழைய உயர்சிக்கண்ணே தலைநிமிர்ந்து நிற்றல் வேண்டும். ஏனெனில் செல்வமற்றவர் பணிவு பிறரால் இகழப்படும்.

இனி, யாரொருவர் தம்மானம் கெட்டு நிலையிலிருந்து தாழ்கின்றார்களோ அவர்கள் தலையிலிருந்து கீழே வீழ்ந்த மயிரை ஒப்பாராய், பிறர் காலிலே மிதிபட்டு இகழப்படுவார்கள். ஆகையினால் குடிப்பிறப்பால் மலை போல் உயர்ந்தவர்களும் தாம் தாழ்வதற்குக் காரணமான செயல்களை ஒரு குன்றிமணி அளவேனும் தம் தரம் குன்றிச் செய்துவிட்டால் அவர்கள் நிச்சயம் தம் நிலையிலிருந்து தாழ்ந்தே விடுவர்.

ஒருவன் தன்மானத்தை விட்டு, தன்னை இகழும் பிறனொருவன் பின் சென்று அடிமையாகிக் குற்றேவல் செய்துதான் வாழ வேண்டுமெனில், அது அவனுக்குப் புகழைத் தருமா? அல்லது மேல் உலகத்தின் இன்பத்தைத் தான் தருமா? எதையும் தராது. அதனால் அவன் பெறும் பயன் ஒன்றுமில்லையே?

அங்ஙனம் ஒட்டார் (பகைவர்) பின் சென்று ஒருவன் பொருள் பெற்று உயிர் வாழும் நிலை ஒருவனுக்கு ஏற்பட்டால் தான் தன் நிலையில் தாழாமல், மானம் அழியாமல் இறந்து போனான் என்று செல்லப்படுதலே நன்று. உயர் குடிப்பிறப்புக்குத் தன் வலிமையான மானம் போகும்படியான நிலை வந்தபின்னும் இந்தப் பயனில்லாத உடலைக் காப்பாற்ற வாழும் வாழ்க்கை தேவாமிர்தமா என்ன? இல்லையே.

ஆகவே, தன் மயிர்த்திரளில் ஒரு மயிர் தன் உடலிலிருந்து உதிர்ந்தாலும் உயிரை நீத்துவிடும் கவரிமானை ஒத்தவர்கள். தம் மானத்திற்கு ஒரு சிறிது கேடு வரும் என்றாலும் உடனே உயிரை விட்டுவிடத் தயங்கார். இங்ஙனம் மானத்துக்கு ஓர் இழிவு வந்தக்கால் உயிர்விட்டு மானங்காத்த புகழையே உலகம் எக்காலமும் துதித்துப் போற்றி வழிபடும்.

## 111. பெருமை

தாம் வாழும் வாழ்க்கையில் பெருமையோடு வாழ வேண்டும் என எண்ணாதவர் யார்? செல்வமும் பிற சொத்துக்களும் தேயும், மாயும். ஆனால் நற்குணத்தால் செயற்கரிய செய்தலால் தருக்கின்மையால், பிறர் குற்றம் கூறாமையால், புகழோங்குகின்ற பெருவாழ்வு மிகவும் கீர்த்தியோடு விளங்கும் (பிரகாசிக்கும்) தன்மையாலேயே, இப் பெருமை, ஒளி என்று சொல்லப்படுகிறது.

இந்த ஒளிதான் யாதெனில் பிறரால் செய்தற்கரிய செயல்களைச் செய்வேன் என்னும் மன வெழுச்சியின் மிகுதியே ஆகும். மாறாக ஒருவனுக்கு மாசாவது, இழிவாவது, இந்த மனவெழுச்சியால் அடையும் ஒளி, பெருமையின்றி, உண்டு உடுத்து வாழ்ந்தால் போதுமென்று, தன்னளவில் வாழ்வதே.

மனிதனுக்கு மனிதன், பிறப்பினால் வேறுபாடற்றவனே. ஆனால் அவன் செயலாற்றும் வினைகளுக்கு ஏற்பவே, அரிய செயலைச் செய்து முடிக்கும் திறனாலேயே, பெருமை தரும் சிறப்பு அவனை வந்தடைகிறது. எனவே, செல்வம், வளம், குலம், பதவி, முதலியவற்றாலும், சூழ்நிலை காரணமாகவும், ஊழ் உய்க்கவும் ஒருவன் மேனிலைக்கண் இருந்தானாயினும் அவன் இயல்பாகவே பெருமைக்கு உரியவன் அல்லனாயின் கீழிருப்பவனே. அங்ஙனம் அரிய பெரிய செயலாற்றிய பெருமைக்குரியவன், எவ்வகையிலும் தாழ்ந்து கீழ்பட்டுக் கிடப்பினும் அவன் கீழானவனாகக் கருதப்பட மாட்டான். கற்பென்னும் திண்மை வாய்ந்த பிளவுபடா மனமுள்ள பெண்டிர் எங்ஙனம் தம்மைத்தாம் காத்துக் கொள்வார்களோ, அங்ஙனமே பெருமைக் குணமும், தன்னைத் தன் நிறைவிலிருந்து தவறாமல் காத்துக் கொள்பவரிடத்திலே தான், நிலைத்து நிற்கும். இவ்வகையில் பெருமை மிக்கவர்கள், தாம் வறியராய் வலி குன்றிய காலத்திலும், பிறரால் செய்தற்கரிய செயல்களைத் தக்க நெறியிலே செய்து முடிப்பர். அதனால் மேலும் மேலும் பெருமையே அடைவர்.

இந்தப் பெருமைக் குணம் தம்மிடம் அமையாது, சிறுமைக் குணம் உள்ளவர்களே, பெரியோர்களை வழிபட்டு அவரியல்பினை நாம் கொள்வோம் என்னும் கருத்து, தம் உள்ளத்தில் சிறிதும் இல்லாதவர்களாய் வாழ்வார்கள். இவ்வற்ப குணமுள்ளவர்களிடம் யாதானுமோர் வகையில் பெருமை சிறிது படிந்து விட்டாலோ, அவர்கட்குத்தான் என்னும் அகங்காரம்தான், தலை விரித்தாடிடும். தருக்கு மிகுந்து அதற்குரிய கீழான செயல்களைச் செய்வர்.

ஆனால் இயல்பான பெருமை அமையப் பெற்றவர்களோ, பணிவோடு தருக்கின்றி இருப்பர். சிறுமைக் குணம் உள்ளவர்களோ தருக்கையே அணியாகக் கொண்டு தம்மையே புகழ்ந்து திரிவர். அது மட்டுமன்று பெருமையுடையவர் பிறர் சீர் எல்லாம் தூற்றிச் சிறுமையைப் பேசாது காப்பார்கள். ஆனால் பெருமையற்ற சிறுமைக் குணமிக்கவர்களோ, பிறர் குணத்தை மறைத்து, புகழைப் பேசாமல் குற்றங்களையே பலரிடம் தூற்றுவர்.

## 112. சான்றாண்மை

சால்பு என்னும் சொல்லுக்கு நிறைவு என்பது பொருள். எல்லா நற்குணங்களும் நிறைவு பெற்று அவற்றை ஆளும் தன்மையே சான்றாண்மை ஆகும். விஞ்ஞானத்திலே மேதாவியாய் இருப்பினும், செல்வம் பதவி இவைகளில் உச்சநிலை அடைந்திருப்பினும் அரசியல் மேதாவியாயிருப்பினும் நற்குண நற்செயல்களில் முழுமை அடையாதவன் சான்றோன் அல்லன். இந்த உயர்ந்த பண்பாகிய சான்றாண்மையைப் பூண்டு ஒழுகுபவரே, தமக்குரிய கடமைகளை நன்கு ஆராய்ந்து அறிந்தவராவர். அவர்களுக்குக் கடமை எனப்படுவதெல்லாம் நல்ல நினைவு, சொல் செயல்களே ஆகும். அவர் தம் நலன் அல்லது அறம் எனப்படுவதோ குணநலன் மட்டுமே. அதுவோ வேறெந்த அறத்தின் பாகுபாட்டினும் அடங்காதது மேம்பட்டதாகும்.

இந்தச் சான்றாண்மைதான் சுற்றத்தாரிடம் அல்லாமல், பிறர் மேலும் உண்டாகும் அன்பும் நாணமும், இரக்க சிந்தனையும் கண்ணோட்டமும் வாய்மையும் ஆகிய ஐந்து தூண்களால் ஆகிய மணி மண்டபம் போன்றது. இவை ஐந்தும் பொருந்தி வாழ்பவனையே சான்றோன் என்று உலகர் கூறுவர், போற்றுவர். எங்ஙனம் நோன்பு என்று சொல்லும்போது அது கொல்லா நலத்தினை உடையது

எனக் கருதப்படுகிறதோ அதைப் போலவே சால்பு என்று கூறும்போது அந்தப் பண்பாடு பிறர் தீமையை, குற்றத்தைப் புறத்தே சொல்லாத தன்மையையே உணர்த்தி நிற்கும்.

இனி ஒரு செயலைச் செய்து முடிக்கத் தேவைப்படுவது செயல் திறம் மிக்காரைப் பணிந்து அவரைத் தலைவராகக் கொள்ளுதலே அல்லவா? இந்தப் பணிவுதான் சான்றோரிடம் மிகுந்திருக்கும். இந்தப் பணிவாகிய ஆயுதத்தால் அவர் தம் பகைவர்களையும் நண்பர்களாக மாற்றி விடுவார்கள். இந்தச் சான்றோர்கள் தன்மையை ஆராய்ந்து மதிப்பிடும் உரைகல் யாதெனில் அவர் தம்மினும் உயர்ந்தவர்களிடத்தில் தம் தோல்வியை ஒப்புக்கொள்வது போலவே, தம்மினும் கீழ்ப்பட்டவர்களிடத்திலும் தாம் தோற்றால் அதை ஏற்றுக் கொள்வதே ஆகும்.

பிறனொருவன் தனக்குத் தகாத செயல்களைச் செய்து காலத்திலும், தான் அவனுக்கு இன்றியமையாத நல்லன வற்றேயே செய்யாமல் தீமை செய்தானானால் அவன் பெற்றிருக்கும் நல்ல குணங்களால் என்ன பயன்? அவன் சான்றோனாக இருக்க முடியாது. தன் சால்புள்ளவன் என்பதற்கு அங்கு பொருளே இல்லை.

இத்தகு எல்லா நற்குணங்களும் நிரம்பிய சால்பாகிய மனவலிமை ஒருவனுக்கு நிறைந்திருந்தால் அவனுக்குப் பொருள் இல்லாமை,வறுமை ஒரு இழிவன்று. உலகே நிலை குலைந்தாலும் சான்றாண்மையாம் கடலுக்கு ஒப்பானவன் நிலையில் சிறிதும் மாறுபடான். ஏனெனில் சால்புடையார் தம் நிலை குலைந்து விடுவராயின் இந்த உலகமே நிலை குலைந்து, தான் தாங்கும் உயிரினங்களைத் தாங்காமல் அழிந்துவிடும்.

# 113. பண்புடைமை

சான்றாண்மை என்பது எல்லாக் குணங்களும் நிறைந்திருத்தல். பண்புடைமையோ அந்நிறைவோடும், பெருமையோடும் பிறரிடம் அவரியல்பறிந்து தன்மையோடு பழகுதல். பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகுதலே அல்லவா? இப்பண்புடைமைக்கு முதற்கண் தேவைப்படுவது யாவரிடத்தும் எளிமையாகவும் இனிமையாய்ப் பழகுதலே. இயல்பறிந்து எளிமையாய், இனிமையாய்ப் பழகுவார்க்குப் பண்புடையாம் சிறப்பு தானே அமையும். மற்றும் பண்புடையவர்களிடம் சிறந்து விளங்கும் குணநலன்கள் அன்புடைமையும் உலக இயல்பினை ஒத்த உயர் குடிப் பிறப்புமே ஆகும்.

கண் முதலிய உடல் உறுப்புக்கள் ஒத்திருக்கும் காரணங்களாலேயே பண்பற்ற ஒருவனை மக்களினத்தில் ஒருவனாக ஒப்பிட்டுப் பேசுதல் இல்லை. ஆனால், தகுதி, அறிவு, கல்வி, சால்பு அமைந்த பண்பு மிக்கவர்களையே நற்குணம் அமைந்த பண்பாளரோடு ஒப்பிட்டு, பாராட்டிப் பேசுவார்கள். எனவே, நீதியையும் அறத்தையும் இடைவிடாமல் இயற்றி அதனால் தமக்கும் உலக்கும் பயன் படும் பண்பாளர்களையே இந்த உலகம் பாராட்டிப் புகழும்.

விளையாட்டாக ஒருவன் நம்மை இகழ்ந்தாலும், அது தம் உள்ளத்தை எவ்வளவோ வேதனைப்படுத்துகிறது. நல்ல பண்பட்ட மனம் அமைந்தவர்கள் இந்தத் தன்மையை நன்குணர்ந்தவர்கள். எனவே, அவர்கள் விளையாட்டாக வும் பிறரை இகழ்தல் செய்வார்கள். மற்றும் பிறர் பாடறிந்து ஒழுகும் அவர்கள் தம் பகைவர்களிடம் நல்ல இனிய பண்போடுதான் நடந்து கொள்வார்கள். இத்தகையோர் இவ்வுலகில் வாழும் காரணத்தினால்தான் இவ்வுலகியல் நிலைத்து நிற்கிறது. உலகினர் பயன்பட்டு வாழ்கின்றனர். இப்பண்பாடு என்னும் நற்குணம் இல்லா

விட்டால் உலகியல் மண்ணுக்குள்ளே புகுந்து அழிந்து போகும்.

கல்வி கேள்விகளால் நுட்பமான அறிவைப் பெற்றிருக்கிறான் ஒருவன். அவன் அறிவோ அரம் போலக் கூர்மையானது. ஆயினும் மக்களினத்துக்கு இன்றியமையாத பண்பாட்டினைப் பெறானாயின் அவன் மரத்தை ஒத்தவனே. ஏனெனில் அவனிடம் அறிவுண்டு, மூளை வளர்ந்திருக்கிறது. ஆயினும் பண்பில்லை, குணமில்லை, ஈரமில்லை, கனிவில்லை. எனவே அவன் பண்பற்ற காரணத்தால் மனிதனல்லன்.

அதோடு நட்பு பாராட்டாமல், விரோதத்தால் தீங்கே செய்தொழுகும் மாற்றாரிடமும் நாம் மனிதப் பண்போடு நடந்து ஒழுகுதல் வேண்டும். பண்பற்றவராய்த் தவறி நடத்தல் அறிவுடையோர்க்கு இழுக்கு.

பண்போடு பழகுவதால், பலர் நட்பு கிடைக்கும். அதனால் மகிழ்ச்சியும் இன்பமும் பிறக்கும். உலகம் ஒளிமயமாகத் திகழும். அப்படியின்றிப் பண்பிலார்க்கு இந்தப் பெரிய உலகமும் பகற்காலத்தும் இருள் சூழ்ந்து பாழடைந்ததே. பண்பற்றவன் பெருஞ் செல்வம் பெற்றிருப்பினும் அது அவனுக்கும் உலகுக்கும் உதவாமையால், நல்ல பாலும் அது பெய்து வைத்த பாத்திரத்தின் தீமையால் கெட்டுப் போவதைப் போல அவன் செல்வமும் கெட்டொழியும்; பயன்படாது.

## 114. நன்றியில் செல்வம்

தன்னை அடைந்தவனுக்கும், பிறர்க்கும் யாதொரு பயனுமற்ற நன்மையைப் பயவாத செல்வமே நன்றியில் செல்வமாகும். செல்வத்தைப் பெற்றவன் அதனால் அறப்பயனோ, புகழோ, இன்பமோ அடைதல் வேண்டும். அப்படியின்றி நன்மையே பயவாத செல்வம் இருப்பதும்

இல்லாததும் ஒன்றே. தன்னுடைய மனையிடமெல்லாம் நிரம்பி வழியும்படி நிறைந்துள்ள பெரும் பொருளைச் சம்பாதித்து, உலோபத்தால் அதைத் துய்க்காமல் இருப்பவன் இருந்தும் செத்தவனே.

ஏனெனில் அதை அனுபவிக்கும் உரிமை அவனுக்கில்லை, மற்றும் பொருளாலேயே எல்லாச் செயல்களும் முடியும் என்னும் கருத்தினால், எவனொருவன் பேராசை கொண்டு. பிறர்க்கு நன்மை செய்யாது சிறிதும் ஈதலின்றி இறுகப் பிடித்து வாழ்கிறானோ, அந்த உலோபியின் உயர்ந்த மனிதப் பிறவியே, நிறைவற்ற இருள் சூழ்ந்த ஈனப்பிறவி ஆகும். அவர்கள் செல்வத்தை மட்டுமே விரும்புவார்கள். பிறருக்கு ஈயாது இறுகப் பிடித்துப் புகழை விரும்பாமல், யாருக்கும் உதவாமல், பொருளைப் புதைத்து வைப்பார்கள். இவர்கள் வாழ்வு நிலத்துக்குப் பாரமானது.

இங்ஙனம் புகழைச் சிறிதும் விரும்பாமல், எந்தப் பொருளையும் பிறர்க்குக் கொடுத்து அறிமையால், பிறரால் விரும்பப்படாதவன், தான் இறந்த பின்னர் இந்த உலகத்திலே தன்னுடைய அடையாளமாக எதனை விட்டுச் செல்வதாக எண்ணுவானோ? அவனுடைய எச்சமாக நிற்பது யாதொன்றுமில்லை.

உலோபிக்கு அடுக்கடுக்காகப் பொருள் நிறைந்திருப் பினும் ஏழையே. அவன் ஈவது மில்லை. தானும் அனுபவிப்பதும் இல்லை. இவ்விரண்டு தன்மையுமற்ற அவன் கோடி கோடியாகப் பொருள் பெற்றிருப்பினும் ஒன்று மில்லாதவனே. தானும் நுகராமலும், தகுதியுடையார்க்கு அவர் வேண்டிய தொன்றினைக் கொடுத்தல் தன்மை இல்லாமலும், வாழும் ஒருவனிடம் அடைந்த பெருஞ் செல்வம் அவனுக்குத் துன்பத்தையே தரும்.

இத்தகு தருமம் செய்யாக் கருமியிடம் உள்ள பெரும் பொருள், அழகிய ஒருத்தி திருமணமின்றி — கணவன்

அகமின்றி, கன்னி கழியாமல், தன் பருவத்தை வீணே கழித்து மூத்துக் கிழப்பருவம் அடைவதையே ஒக்கும்.

எட்டி மரம் பச்சென்றுதான் இருக்கும். பழங்களும் மிகக் கவர்ச்சியோடு பழுத்துக் குலுங்கும். பயன் என்ன? இதைப் போன்றதே ஒருவராலும் விரும்பப்படாத கருமி ஒருவன் செல்வமும். அது ஊர் நடுவே நச்சு மரம் பழுத்துக் குலுங்குவதையே நிகர்க்கும். எனவே, உலோபியின் செல்வத்தைத் துய்ப்பவர்கள் துன்பத்தையே அடைவர். எவன் ஒருவன் பொருளைச் சேர்க்க வேண்டும் என்னும் நோக்கத்தோடு, தன் பெற்றோர், சுற்றம் நட்பு ஆகியவரிடம் அன்பின்றி வாழ்ந்து, தானும் நுகராமல், அறவழியில் பிறர்க்கும் உதவாமல், தன்னைத்தானே வருத்திப் பொருளைச் சேர்த்து வைக்கிறானோ, அவனுடைய மிக்க பொருள் அவனுக்கு உதவாது. பிறர் அதை அபகரித்துச் சென்றே பயனடைவர்.

இதற்கு மாறாக, நற்குணம் அமைந்த சான்றோர்கள் வறுமை நிலையால் பிறர்க்கு உதவக் கூடிய நிலையிலிருந்து நீங்கினாலும், அதுதான் பெய்ய வேண்டிய காலத்தில் மழை பெய்யாமல் தவறியதைப் போன்றதே ஆகும். ஆயினும், அவர்கள் மீண்டும் வளமுற்றதும் மேகத்தைப் போலவே கைம்மாறு கருதாமல் பிறர்க்கு உதவுவார்கள்.

## 115. நாண் உடைமை

சால்பு, பண்பு, முதலிய குணங்களால் உயர்ந்தவர் தமக்கு ஒவ்வாத—தகாத—செயல்களில் (எண்ணம் சொல், செயல்களில்) ஏற்படும் பழி பாவங்களுக்கு அஞ்சி, அதற்கு வெட்கப்படுதலே நாணுடைமை ஆகும். பிறர்க்கு ஊறு பயக்கும் இழிவான செயல்களைச் செய்யக் கூசுவதே மிகச் சிறந்த ஒழுக்கமாகிய நாண் உடைமை ஆகும். பிறதொரு வகை நாணம் அழகிய நெற்றியினை உடைய குலப்

பெண்களின் வெட்கமேயாம். இந்த உலகில் வாழும் அனைத்துயிர்களும், உண்டு, உறங்கி, இனப் பெருக்கம் செய்து வாழ்கின்றன. மனிதனோ அவைகளோடு ஆடை அணியும் இயல்பும் பெற்றுள்ளான். ஊணும் உடையும் பிற இன்பமும் மக்களின் பொதுத் தன்மைத்தாம். ஆனால் மக்களின் சிறப்புப்பகுதியாகிய,நாணுடைமை இல்லையாகில் அவன் சிறந்த மனிதனாகான். எங்ஙனம் எல்லா உயிரினங் களும் தம் உடம்பினைத் தமக்கு இருப்பிடமாகக் கொண்டு உள்ளனவோ, அங்ஙனமே சான்றாண்மையும் நாண் என்னும் நற்குணத்தைத் தனக்கு அடிப்படையாகக் கொண்டு அதையே பற்றி நிற்கிறது.

எனவே, நல்ல குணநலன் வாய்ந்த சான்றோர்க்கு நாணுடைமையே ஒரு சிறந்த அணிகலனாகத் திகழும். இது இல்லாத பிறருடைய பெருமித நடை, பீடு நடையாகக் கருதப் படமாட்டாது. அது ஒரு வலிப்பு நோய் கண்டவன் நடக்கும் பிணிவாய்ப்பட்ட நடையாகவே கருதி எள்ளி நகையாடப் பெறும்.

யாரொருவர் பிறர் பழிக்கும், தம்முடைய பழிக்கும், (ஒருசேர ஒப்பமதித்து) வெட்கப்படுகின்றாரோ அவரை இவ்வுலகத்தவர் நாணின் உறைவிடம் என்று புகழ்ந்து பாராட்டுவர். இப்படிப்பட்டவர்களிடம் "நீங்கள் நாண மாகிய உங்கள் வேலியை அழித்து விட்டால் இவ்வுலகமே உங்கள் வசமாகி விடும்" என்று ஆசை காட்டினாலும், அவர்கள் உலகத்தைத் துறந்து விடுவார்களேயல்லாமல், தம் நாணத்தைத் துறக்க மாட்டார்கள். உலகை மட்டுமா? நாணத்தின் சிறப்பறிந்து அதைக் கடைப் பிடிப்பவர்கள் நாணமும் உயிரும் தம்முள் மாறுபட்டவிடத்து, நாண் சிதையாமைப் பொருட்டாகத் தம் உயிரையும் அல்லவா தியாகம் செய்து விடுவார்கள். உயிர் பொருட்டு நாணை விடார். பிறர் நாணத்தக்க சான்றோரால் விலக்கப்பட்ட தீச்செயலுக்குத் தாம் நாணவில்லையென்றால், தம்மைக்

கண்டு, அறமே வெட்கித் தலை குனிந்து விலகிவிடும் என்பதை நாணுடைமை மிக்கவர்கள் அறிவார்கள்.

மக்களின் ஒழுக்கமும் கொள்கையும் பிழைபட்டால், அவர்கள் பிறந்த குடிப் பிறப்பை அச்செயல் கெடுத்து விடும். ஆனால் ஒருவன் தான் நாணின்றி வாழ்ந்தால் அவன் அடைந்த அறனும் நலனும் முற்றக் கெட்டொழியும். அது மட்டுமின்றித், தம் உள்ளத்தில் நாணில்லா உயிரியக்கம் கொண்டு, உலகில் வாழும் வாழ்க்கையானது மக்கள் தம் இயற்கையான வாழ்க்கையைப் போன்றதன்று; மரப் பொம்மையைச் சூத்திரக் கயிற்றால் இழுக்கும் ஒரு பொம்மலாட்டம் போன்ற போலி வாழ்க்கையாகவே அது அமையும்.

## 116. குடி செயல்வகை

மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவனும் தன் குடி, தன் நாடு, தன் மொழி இவைகள் உயரத் தன்னால் ஆன தொண்டு செய்தல் வேண்டும். இந்தத் தொண்டுள்ளமே தன் கடனெனக் கொண்டு வாழ்பவனையே உலகம் மிகப் போற்றும். இத்தகு நற்செயல் ஒருவன் செய்து "என் குலத்தை, என் குடியை உயர்த்துவேன். இச்செயலை இடையிலே நிறுத்தமாட்டேன். இதிலிருந்து ஓயமாட்டேன்" என்னும் முயற்சிப் பெருமையாம் பெருந்தன்மையைக் காட்டிலும் மேம்பாடு மிக்கது வேறொன்றும் இல்லை. யார் ஒருவர் தளரா முயற்சி, மிகச் சிறந்த அறிவு, எனும் இரண்டினையும் பெற்றவர்களாய் ஓய்தலின்றித் தம் கருமத்தால் தம் குடியை உயர்த்தப் பாடுபடுகிறாரோ அவரால் அவர் பிறந்த குடி நிச்சயமாக உயரும். இங்ஙன மாகத் தன் குடியை உயர்த்துவேன் என்று அதற்கேற்ற செயல்களில் முயலும் ஒருவனுக்குத், தெய்வமும் ஆடையை இறுகக் கட்டிக் கொண்டு அவனுக்கு முன் சென்று நின்று வேண்டிய உதவியைத் தரும். இவ்வழித் தன் குடியை

உயர்த்த அயராமல் பாடுபவர்களுக்கு யாதொரு பிற வகையான ஆலோசனையுமின்றி அச்செயல் சிறப்பாகவே முடிவெய்தும்.

மற்றும் யாரொருவர் குற்றமானவைகளைச் செய்யாமல் தம் கண் குற்றமின்றி, தம் குடி உயரப் பாடுபட்டு நடக்கிறாரோ அவரையே இவ்வுலகம் தன் சுற்றமெனச் சூழ்ந்து பாராட்டும். எனவே நல்ல வீரமிக்க செயல் எனப் பிறரால் பாராட்டப்படுவது யாதெனில் தான் பிறந்த குடியை, குலத்தை ஆளுந் தன்மையைத் தனக்கு உளதாக்கிக் கொண்டு அதற்குத் தொண்டு செய்தலேயாகும். எங்ஙனம் படையெடுத்துப் போர் மேற்செல்லும் வீரர்கள் பலருள்ளும் போரை நடத்திச் செல்லும் வல்லமை வீரம் மிக்க ஒருவனைச் சார்கிறதோ, அங்ஙனமே குலத்தின்கண் பிறந்தார் பலர் இருப்பினும் அக்குலத்திற்கு வரும் இடுக்கண் களை வென்று, குடியைத் தாங்கும் திட்பமும், பொறுமையும் உடையவனே தன் குழந்தை உயரச் செய்யும் வல்லமை பெற்றவனாவான்.

இங்ஙனமாகத் தன் குடியை மேன் மேல் உயரச் செய்வேன் என்று பொறுத் தொண்டில் ஈடுபடும் பெரியவர்களுக்குப் பருவம் இல்லை. அதாவது இரவு, பகல், வெயில், மழை, பனி என்னும் பருவமோ, நான் இளையவன், நான் முதியவன் என்னும் பருவமோ இல்லை. அவர்கள் சோம்பித் கிடந்தாலோ, தம் மானத்தைக் கருதினாலோ, தாம் மட்டுமல்ல, தாம் மேற்கொண்ட குடியுயர்த்தலாகிய பண்பும் அழிந்துவிடும். இங்ஙனம் குடும்பத்தின் இன்னல் களைக் காத்து அதை உயர்த்தும் ஒருவன் உடல், துன்பங்களின் இருப்பிடமே; அவன் இன்பமாக இருத்தல் என்பது இயலாது.

எனவே, ஒரு குடியின்கண், அது வீழ்ச்சியடையும் போது முட்டுக் கொடுத்து அடுத்து ஊன்றிக் காத்துத் தாங்க வல்ல ஒரு நல்ல மகன் பிறக்கவில்லையேல் அக் குடியாகிய மரம் துன்பமென்னும் கோடரியுள் புகுந்து, தன் இனத்தை அடியோடு வெட்டிச் சாய்த்துவிடும்.

# 117. நல்குரவு

தன்குடி உயரப் பாடுபட்டுப் பல அல்லல்களுக்குள்ளாகும் ஒருவனுக்கும், பொதுவாழ்வில் ஈடுபட்டுத் தனக்கென வாழாமல் பிறர்க்குரியனாக உழைக்கும் பொதுத் தொண்டர்களுக்கும், விலக்க முடியாது விளங்குவது வறுமையே. யார் இலக்கியம், கலை, கவிதை, சாத்திரம் என்று இவைகளிலே மூழ்கிக் கிடக்கின்றார்களோ, அவர்களும் வறுமை நிலையில் வாட வேண்டியவர்களே. இந்த வறுமையை விடக் கொடியது வேறொன்றுமில்லை. இதற்கு நிகர் இதுவேதான். இந்த இல்லாமை என்பது ஒரு பாவி. இந்தப் பாவி ஒருவனை வந்தடைந்தால் அவனுக்கு இம்மை இன்பமுமில்லை. மறுமை இன்பமுமில்லை. இவ் வறுமையால் ஒருவனுடைய உள்ளத்துள்ளே எழுவது ஆசை நிலை. இது அவனது குடிப் பண்பினையும் புகழையும் கெடுக்கும்படியான இழி செயல்களில் ஈடுபட வைத்து அவமானச் சொற்களையும், அவன் மாட்டடைவிக்கும். எனவே, நல்ல குடிப் பிறந்தாராயினும் பொல்லாததாகிய இவ்வறுமைக்குட்பட்ட காலத்தில், அது தம் குடிப்பிறப்பிற்கு இழிவை உண்டாக்கும், அவமானச் சொற்களைப் பிறர் கூறவும், தன் வாயில் வரக் கூடாத சொற்களால் தானே பிறர் மாட்டுப் பேசவும் காரணமான சோர்வை அவரிடத்து உண்டாக்கும்.

அது மட்டுமன்று, இவ்வறுமை என்று சொல்லப்படும் துன்பம், ஒன்றனுக்குள்ளேயே ஒருவனுக்குப் பல வேறுபட்ட பலப்பல துன்பங்கள் அவன் வாழ்வில் விளையும். வறிஞன் ஒருவன் நல்ல கல்வி அறிவு மிக்கவனாகப், பிறர்க்குத் தாம் கற்ற மெய்ந்நூற் பொருளை, நன்கு எடுத்து விளங்கச் சொன்னாலும், அவன் வறிஞன் என்ற ஒரே காரணத்தால் அவன் கூறும் கருத்துக்கள் காட்டிலே காய்ந்த நிலவாகப் பயனற்றுப் போய்விடும்.

இங்ஙனமாக அறத்தோடு பொருத்தமில்லாத, இந்த வறுமையை ஒருவன் பெற்று விட்டானானால், அவனைப் பெற்ற தாயும் அயலானைப்போலவே அவனைக் கருதுவாள். தாயினாலும் (அவன் வறுமை நிலை கருதி) வேற்றாளைப் போல நினைத்துப் பார்க்கப்படுவான் என்றால் சுற்றத்தார் அவனை எங்ஙனம் கருதுவர்?

ஏழைக்கு, ஒவ்வொரு நாள் கழிதலும் ஒரு பெரும் பாடாகவே அமைந்துள்ள காரணத்தால் விடிந்து எழும் போதே, நேற்று நம்மை சித்ரவதை செய்த வறுமை, இன்றைக்கும் வந்து வாட்டுமே என்று அவன் அஞ்சி நடுங்கு வான். அவனுக்கு வறுமைத் துன்பம் நெருப்பைக் காட்டி லும் பெருந் தீயாகச் சுட்டெரிக்கும். சூழ்ந்த நெருப்பினிடை ஒருவன் உறங்கவும் கூடும். ஆனால் உள்ளத்தையே தீய்த்து விடும் வறுமையின் நடுவிலே அவன் எவ்வகையிலும் நிம்மதி யாகத் தூங்க முடியாது.

இவ்வண்ணம் எவ்வகைப்பட்ட வாழ்க்கை இன்பத்தை யும் துய்க்க முடியாமல், துறவியாகாது, விடாப்பிடியாக வறுமையின் கோரப் பிடிப்பிலே சிக்கி வாழ்பவர்கள், பிறர் வீட்டில் உள்ள உப்புக்கும் காடிக்கும் எமனேயன்றி உலகுக்கு அவர்களால் ஒரு பயனுமில்லை.

## 118. இரவு

வறுமையால் வாழ்க்கை நலிவுற்ற காலத்திலும் கூட, தம் மானம் அழியத் தக்க இரத்தல் தொழிலைப் பிறரிடம் செய்யாமலிருப்பதுவே நலம். அவ்வறுமைதான் பிறர்க்குத் தான் அள்ளிக் கொடுத்த கொடையாலோ, அறியாமை யாலோ, ஊழாலோ மற்றெதனாலோ உண்டானதாயினும் பிறரிடம் சென்று இரத்தல் தீது. மாறாக மானம் கெடாத படி பிறரிடம் இரத்தலும் இரவாமையையே ஒக்கும்.

நம் குறையைக் குறிப்பினால் அறிந்து, இலன் என்னும் எவ்வம் உரையாமல் ஈயும் வள்ளல்களிடம்—இரத்தற்கு

ஏற்றவரிடம்—நம் குறை தீர அணுகலாம். அக்காலம் ஒரு வேளை அவர்கள் மறுத்தால், அது அவர்கள் பழியே அல்லாமல் நம் பழி அன்று. அங்ஙனம்தான் கேட்டவைகளை எவ்விதத் துன்பமும் இல்லாமல் ஒருவன் அடையக் கூடு மானால் அப்படிச் சென்று கரவாதாரிடம் இரத்தலும் ஒரு வகையில் இன்பமே என்று சொல்லத் தக்கதாகும். ஏனெனில் கொடுப்பவரோ ஒளித்தலில்லா உள்ளத்தவர், அவர்கள், தம் கடமையையும் செல்வத்தின் பயனே ஈதல் என்னும் தர்மத்தினையும் உணர்ந்தவர்கள். அவர் முன் சென்று இரத்தல் நேருமானால் அதுவும் ஒருவகை அழகினை உடையதே.

இங்ஙனமாகத் தம்மிடம் உள்ளனவற்றை ஒளித்து வைத்துப் பாதுகாக்க வேண்டும் என்னும் எண்ணத்தைக் கனவிலும் கொள்ளாத வள்ளல்களிடம் சென்று இரத்தல் கூடக் கொடுத்தலுக்கு ஒப்பானதாகும். எனவே, உள்ளதை இல்லை என்று ஒளித்துக் கூறாத கொடையாளிகள் உலகில் உள்ளதாலேயே வறிஞர் செல்வர் முன் நின்று இரத்தலைச் செய்கின்றனர். எனவே தம்மிடம் ஒளித்தலாகிய நோய் இல்லாத பண்பாளர்களைக் கண்டவுடனே இரப்பவராது வறுமையாகிய நோய் கதிரவனைக் கண்ட பனிபோல் உடனே மறைந்துவிடும்.

வறிஞன் தான் பொருள் வேண்டிப் பிறரிடம் சென்று இரந்த காலத்தில், செல்வந்தன் அவனை அவமதித்து இகழாமலும், கேலி பேசாமலும் பொருள் கொடுத்து உதவி செய்வானாயின், இரப்பவன் உள்ளம் தன்னுள்ளே மகிழ் பூத்து விம்மிதமுறும். இரப்பவராகிய இம்மக்களை இவ்வுலகம் இழந்து விட்டால், உலகில் வறுமையற்று, இரப்பவர் இல்லையானால், குளிர்ந்த இடத்தையுடைய இவ்வுலக இயக்கமே சூத்திரக் கயிற்றால் இயங்கும் மரப்பாச்சியின் இயக்கத்தைப் போலாகும். வாழ்க்கையே உயிரற்றுச் சாரமற்றுப் போகும்.

அது மட்டுமல்ல செல்வர்கள், தம்மிடம் வந்து பொருள் யாசித்துப் பெற்றுச் செல்லும் வறியோர் இல்லாத காலத்

தில் அச்செல்வர்களுக்கு அச் செல்வத்தாலும் அதை ஈதலாலும் உண்டாகும் புகழ் இல்லையாகிவிடும். பிறகு அவர்களுக்குப் பொருளால் உண்டாகும் பயன்தான் என்ன?

இனி வறிஞனாகிப், பிறரிடம் சென்று இரப்பவனாகிய அவனோ தனக்குப் பொருள் உதவாவிடத்துக் கொடா தானிடம் சினம் கொள்ளாமை வேண்டும். ஏனெனில் பொருளரிது என்பதற்கு அவன் வறுமைத் துன்பமே அல்லவா, ஒரு சான்றாக அமைந்துக் கிடக்கிறது.

## 119. இரவச்சம்

வறுமையால் தன் நிலை கலங்கியவிடத்து மனிதன் தான் வாழப் பிறரிடம் இரத்தலைச் செய்கின்றான். அங்ஙனம் இரக்கும் காலத்தில் தன் குறை அறிந்து ஈயும் கொடை வள்ளலிடம் சென்று இரத்தல் நல்லதே ஆயினும், தன்னிடம் உள்ளனவற்றை மறைக்காமல், மன மகிழ்ச்சி யோடு பிறர்க்குத் தரும் கண் போன்ற சிறந்தவரிடத்திலும் ஒருவன் செய்ற இரவாமையே கோடி பங்கு மேம்பட்டதாம்.

இந்த உலகிலே ஒருவன் இரந்துதான் உயிர்வாழ வேண்டும் என்னும் நிலை உண்டாகுமானால், இந்த உலகத் துயிர்களை உடலோடு படைத்த அவனும், இரப்பவர்களைப் போலவே எங்கும் அலைந்து திரிந்து கெட்டொழிவானாக என்று சபிக்கிறார் வள்ளுவர்.

எவனும் தன் வறுமையால் தனக்கு வரும் துன்பத்தைத், தானே முயன்று நீக்க நினைக்க வேண்டும். மாறாகப் பிறரிடம் இரந்து அதனால் தீர்த்துக் கொள்வோம் என்று நினைக்கும் எண்ணத்தினைப் போன்ற கொடுமையானது இவ்வுலகில் வேறெதுவும் இல்லை. எனவே தாம் அனுபவிக்க வேண்டிய பொருளேதுமின்றித் தாம் வறுமையுற்ற காலத்தும், வாழ வழி இல்லாத காலத்தும்—பிறரிடம்

இரத்தலை உடன்படாத மனநிறைவின் பெருமைதான் உலகின் பரந்த இடத்தையெல்லாம் கொள்ளத்தக்க அளவுடைத்தாம்.

எனவே, தம் முயற்சியால் கிடைத்ததைக் கொண்டு கூழ் சமைத்துத் தண்ணீரைப் போலக் கலக்கிக் குடிப்பதைக் காட்டிலும் இனிமையானது வேறொன்றுமில்லை. அதற்கு மாறாக, தன் பசுவுக்காயினும் சிறிது தண்ணீர் தேவை என்று பிறரிடம் ஒருவன் கேட்டால்—இரந்தான்—என்றால் அதைக் காட்டிலும் நாவுக்கு இழிவானது அவமானமானது மற்றுப் பிற இல்லை.

ஆகையினாலே ஒருவன் இரந்துதான் உயிர்வாழ்தல் வேண்டும் என்னும் நிலை இருந்தால் அவர்களிடம் நான் ஒன்று கேட்டுக் கொள்கிறேன். "தம்மிடம் உள்ளதை ஒளிப்பவனிடம் சென்று நீங்கள் இரத்தல் வேண்டாம் என்பதே அது" என்று வள்ளுவர் தம் கூற்றாக இதைக் கூறியுள்ளார். ஏனெனில் வாழ்க்கை என்னும் கடலை இரத்தல் என்னும் பாதுகாவலற்ற படகைக் கொண்டு கடக்கக் கருதுவானானால், அவனுடைய படகு, உடைமையை ஒளித்து "இல்லை" என்னும் வலிய பாறையில் மோதிச் சுக்கு நூறாக உடைந்து அழியும்.

இங்ஙனமாக பொருள் உடையவர் முன் அஃதிலார் சென்று நின்று இரத்தலின் கொடுமையை நினைத்தாலே உள்ளம் கரைந்து உருகும். ஆனால் அவர்களுக்கு "இல்லை" என்று சொல்லித் தம் பொருளை ஒளிப்பவர்கள் கொடுமையை நினைத்தாலோ உருகும் அவ்வுள்ளமே இல்லாமல் அழிந்துவிடும். அந்தோ! செல்வந்தர்கள் தம் உடைமையை மறைத்து வைத்து இரப்பவர்களுக்கு "இல்லை" என்று சொல்ல, அதைக் கேட்ட அளவிலேயே இரப்பவரின் உயிர் போகின்றதே. இரப்பவன் தம்மிடம் வந்து இரந்த போது அவனுக்கு இல்லை என்னும் சொல்லைச் சொன்ன—

தம் செல்வத்தை ஒளிப்பவர்கள் உயிர்—உடலை விட்டுப் போகாமல் எங்குதான் ஒளித்துக் கொண்டிருக்கிறதோ? பரிதாபம்!

## 120. கயமை

மக்களினத்திலே நற்குண நற்செய்கையின்றி நல்லற இயல்புகளின்றி, வாய்மையும் இன்சொல்லும் இன்றி, மிகக் கீழ்ப்பட்டவர்களாய்ப் பலர் உள்ளனர். இவர்களே கயவர் எனப்படுவர். இவர்கள் உருவத்தால் மக்களைப் போலவே இருப்பார்கள். ஆனால் தீக்குணத்திலே இவர்களை ஒப்பானவர்கள் வேறு யாரும் இலர். இவர்கள் மக்களை ஒத்தாற் போன்று ஒப்புமையராதல் வேறெங்கும் நாம் காண முடியாது. மற்றும், இக்கயவர்கள் தாம், தமக்குறுதி யான அறமாகிய நன்மையை அறிந்தவர்களைக் காட்டிலும் நல்ல பேறு பெற்றவர்களே ஆவார்கள். ஏனெனில் இவர்கள் தம்முடைய நெஞ்சத்திலே அறத்தின் வழி நடக்க வேண்டும் எனும் கவலை என்பதே இல்லாதவர்கள் அல்லரோ? இது மட்டுமா, கயவர்கள் தேவர்களைப் போன்றவர்களுமாவர். ஏனெனில் தேவர்களைப் போலவே இவர்களும் தாம் விரும்புவதைச் செய்து மனம் போன போக்கில் நடப்பார்கள்.

இப்படிப்பட்ட கீழ் மக்கள் தம்மைக் காட்டிலும், மன அடக்கமில்லாக் கடை மக்களைக் கண்ட காலத்தில், தாம் அவர்களிலும் மேம்பட்டவர்கள் என்று தலை நிமிர்ந்து நிற்பார்கள். அதாவது கடைப்பட்ட கயவர்களில் தாம் மேம்பட்டவன் என்பதைப் போன்றது இது. இக்கயவர் ஏதாவது ஓரிரு காலங்களில் சிறிது ஒழுக்கத்தோடு நடந்து கொள்கிறார்கள் என்றால், அதற்குக் காரணம் அறமுமன்று, பண்புமன்று. சட்டத்தால், நீதியால், அரசால் தமக்குத் துன்பம் வரும் எனும் அச்சமே ஆகும். அதன்றி இப்படிப்

பட்ட ஒழுக்கத்தால் தாம் அவாவும் பொருளை அடையலாம் என்னும் அவாவாகவும் இருக்கலாம். அப்பொருளை அக்கயவர்கள் அடையும் வரையும் சிறிது காலம் அவ்வொழுக்கம் அவர்களிடம் நிலைத்திருக்கும்.

கயவர்களிடம் எந்த ஒரு மறைபொருளும்(இரகசியமும்) நிலைத்து நிற்காது. அறையப்படும் பறையைப் போல அவர்கள் வாய் தாம் கேட்ட மறை பொருள்களை எல்லாம் பிறர்க்குத் தம்பட்டம் அடித்து அம்பலப்படுத்தி விடும். கையாலே அறையப்படும் பறை போன்ற அவர்கள் குணம் பிறர்க்கு உதவுவதன்று. எச்சிற் கையையும் பிறர்க்கெனத் தெறிக்கமாட்டார்கள் அக்கயவர்கள். ஆனால் தம் தாடையை உடைக்கக் கை முஷ்டியால் குத்துபவர்களுக்குத் தாம் உதவுவது மட்டுமல்லாமல் அடிமையும் ஆகிவிடுவார்கள்.

மெலியவர்கள் சென்று தம் குறையைச் சொல்லிய அளவிலேயே, மேன் மக்கள் பிறர்க்குப் பயன்படுவார்கள் ஆனால் கயவர்களோ, வெட்டி நசுக்கிச் சாறு பிழிந்தால் தான் பயன்படும் கரும்பைப்போல, வலியார் அடித்துப் பிழிந்து எடுத்தால்தான் பயன்படுவார்கள்.

கீழ் மக்கள் பிறர் செல்வம் கண்டக்கால், பொறாமை மேம்பட்டவர்களாய், அவர் உடுப்பதையும் உண்பதையும் காணக் காண வயிறெறிந்து, அவர்மேல் குற்றமில்லை என்றாலும் குற்றம் சொல்ல வல்லவர்களாவார்கள். அது மட்டுமல்லாமல் தமக்குத் தாமொரு துன்பம் வந்துற்ற போது, கீழ்மக்களாகிய கயவர்கள் விரைந்து தம்மையே விற்று தம்மைப் பிறர்க்கு அடிமையாக்கி விடவும் தயங்கமாட்டார்கள். அதைத் தவிர அவர்கள் வேறெதற்கும் உரியராக உபயோகமற்ற உலுத்தர்களே ஆவார்கள்.

## 121. நீத்தார் பெருமை

இதுவரையில் பொதுவகையில் இல்லற நெறிக் கண் நிற்பவர்களின் பெருமைகளையும், பண்பாடுகளையும், அரசியல் நெறி நிற்பவர்கள் கைக்கொள்ள வேண்டிய ஒழுக லாறுகளையும், விளக்கமாகக் கூறிப் போந்த வள்ளுவப் பெருந்தகை, நல்லொழுக்கத்திலே நிலை பெற்று நின்று, பற்று அறக்கழித்தவர்களின் பெருமையை இவ்வதிகாரத்தில் கூறுகிறார்.

நல்லொழுக்கத்திலே நிலை பெற்று நின்று, நிலையாமை உணர்ந்து பற்று விட்டவர்களது உள்ளத் துறவின் பெருமையை மிகச் சிறந்ததாகப் போற்றிப் புகழ்வதே சிறந்த நூல்களின் துணிபாகும். இங்ஙனமாக இருவகைப் பற்றுகளையும் பற்றறத் துறந்தார்களது பெருமையை இவ்வளவினதென்று அறிந்து கூறுவது மிகமிக அரிது. இதுவரை இவ்வுலகில் இறந்து போனவர்களை நாம் எண்ணிக் கணக்கிடுவது போன்று இது மிக அரிது.

அதுவுமன்றி, பிறப்பு, வீடு என்னும் இரண்டினால் உண்டாகும் துன்ப இன்பக் கூறுகளை ஆராய்ந்தறிந்து அப்பிறப்பற, இப்பிறப்பின்கண் துறவறத்தை மேற் கொள்ளும் ஒருவர் பெருமைதான், இவ்வுலகின்கண்ணேயே உயர்ந்ததாகும். அந்தத் துறவறத்தை மேற்கொள்பவர் தம் மெய்யுணர்வைப் பெறும் மனவலியாம் அங்குசத்தால், ஐம்பொறி என்னும் யானையை அடக்கி ஆள்பவர் ஆவர்.

அவர்களே மேலான வீட்டுலகம் எனும் நிலைத்த நிலத்திற்கு விதையை ஒப்பவராவர். இங்ஙனமே புலன் வழிச் செல்லும் ஐந்து அவாக்களையும், ஆசைகளையும் அவித்தவரின் வல்லமைக்கு, இந்திரனே சான்றாவான்.

ஐம்புல நுகர்ச்சிகளை அடக்கி ஆளும் வல்லமை மிக்க அரிய செயல்களை, பிறரால் செயற்கரிய அருஞ் செயல்

களைச் செய்ய வல்லோரே பெரியராவர். மற்று அப்படிப் பட்ட செயற்கரிய செயலைச் செய்ய மாட்டாதவர் சிறியரே ஆவர்.

இந்த முறையிலே நிலம், நீர், காற்று, நெருப்பு என்னும் ஐந்தன் குணமாம் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐம்புல நுகர்ச்சியின், வகை தொகை கூறுபாடுகளையும், பிற தத்துவப் பொருள்களையும்அறிய வல்லவரிடத்தே தான் உலகம்அமைந்துள்ளது. இத்தகு துறவிகளே சான்றோர்கள். அவர்கள் வாய்மொழிதான் மெய்யறிவு வாய்ந்த பயன் மிக்க மொழிகளாகும். அந்தப் பயன் மிக்க மொழி வாய்ந்த மாந்தர்களுடைய பெருமையை, உலகத்தில் நிலைத்து நிற்கும் மறைமொழிகளே, பிறருக்கு உணர்த்தி நிற்கும்.

அவாவின்மை, மெய்யுணர்வு எனும் நற்குணங்களாகிய குன்றின் உச்சியில் நின்ற துறவியின் வெகுளிதான், அவர் களின் சினம் நிலைபெறுவது ஒருகணப் போதே ஆயினும் அச்சினத்தால் வரும் கேட்டினைக் காத்தல் பிறருக்கு அரிதாகும்.

இத்தகு அறவழி நிற்கும் துறவிகளே அந்தணர் ஆவார். ஏனெனில் அவர்கள் எல்லா உயிர்களிடத்தும் செம்மையான அருளை மேற்கொண்டு ஒழுகுவார்கள் ஆகலின் என்பதாம்.

## 122. அருளுடைமை

துறவு நெறியிலே வாழ்பவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய இன்றியமையாத பண்பு அருளுடைமையாகும். இந்த அருள் என்பது அன்பின் முதிர்ச்சி. அன்பு இல்லறத்தி லுள்ளவர்கள் கைக் கொள்ளும் சிறு வட்டம் போன்றது. அருளோ உலக உயிர்கள் அனைத்தும் தன்னுள்ளே அடக்கும் பெரு வட்டம் ஆகும் (அகண்டமாகும்). உலகத்துள்ள உயிர் கள் அனைத்தையும், தன்னுயிர் போல நினைத்துத் துறவிகள்

கடைப்பிடிக்கும் மனக் கசிவே இந்த அருள், ஈரம், கருணை என்பதாகும்.

இராமலிங்க வள்ளல் பாடிய "வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்" என்ற நிலைதான் அருள் நிலை. இதுவே எல்லாச் செல்வங்களுக்கும் தலையாய பெருஞ் செல்வமாகும். மற்ற பொருட் செல்வமோ இழிவானவர்களிடமும் இருக்கலாம். எனவே அது மேம்பட்டதன்று. இதனை நல்ல நெறியிலே நின்று ஆராய்ந்து அருள் உடையவர்களாக, அருளை ஆள்பவராக எவ்வுயிர்க்கும் அருள் செய்து விளங்குவதே துறவோர்தம் கடன். ஏனெனில் பல வகையில் ஆராய்ந்தாலும், அதுவே உயிர்க்கு உறுதுணையாகி நிற்பதாம்.

இந்த அருளுடையார்க்கு இருமையிலும் துன்பம் உண்டாவதில்லை. ஏனெனில் அருள் நெஞ்சுடையவர்கள் இருள் சூழ்ந்த துன்பமயமான உலகியலுள் ஆழ்வதில்லை. அதோடு அருள் நெஞ்சுடைய அருளாளர்க்குத் தம்முயிர்க்கு அஞ்சி வாழும் வாழ்க்கையும் ஏற்படுவதில்லை. இந்த வகையில் இவ்வுலகில் அருள் சேர்ந்த உள்ளத்தினை உடையவர்களுக்குத் துன்பம் என்பதே இல்லை. இதற்குக் காற்றியங்கும் வளமிக்க இவ்வுலகமே சான்றாகும்.

இனி, யாரொருவர் அருளின் நீங்கி அறமற்ற, தவிர்க்க வேண்டிய செயல்களைச் செய்து வாழ்கின்றார்களோ, அவர்களை நாம், "இவர்கள் உறுதிப் பொருள்களை மறந்தவர்கள். அதனால் தாம் துன்புறுகின்றமையும் மறந்தவர்கள். அறத்திலிருந்து விலகி வாழ்வின் குறிக்கோளையும் மறந்தவர்கள்," என நிச்சயத்து விடலாம்.

எடுத்துக்காட்டாகப் பொருள் இல்லாதவர்களுக்கு எங்ஙனம் இவ்வுலக வாழ்க்கை நன்கு நடைபெறாதோ அங்ஙனமே அருளிலார்க்கு மேலுலக (அவ்வுலக) வாழ்க்கையும் செம்மையாக நடைபெறாது. பொருளில்லாதார்

வறுமையில் வாடிய போதிலும் காலம் மாறி, ஒருவேளை செல்வந்தர் ஆதலும் கூடும். அவர்கள் வாழ்வு மறுமலர்ச்சி எய்தலாம்.

ஆனால் அருளில்லாதவரே தம் பாவம் அறாமையால் அடியோடு அழிந்து விடுவரேயன்றிப் பின் எக்காலத்திலும் அருளுடையார்களாக விளங்கார் என்பது நிச்சயம்.

அதுமட்டுமல்ல, உயிர்களிடத்துக் கருணை உள்ளம் இல்லாதவர்கள் செய்யும் பிற அறச்செயலினை ஆராய்ந்து நோக்கினால், மெய்யுணர்வும் ஞானமுமில்லாதவன் மெய்ப் பொருளைத் தேடி உணர்வதைப் போல அவ்வறச் செயல் பயனின்றி விழலுக்கு இறைத்த நீர் போல வீணாகும் என்க.

எனவே, அனைவரும் அருள் நெஞ்சினராய் வாழ்தல் அவசியம். அதைக் கைக்கொள்ள ஒரு எளிய நெறி தன்னைக் காட்டிலும் மெலிய உயிர்களை—மெலிந்தவர்களைத் தண்டிக்க, துன்புறுத்த நேரும்போது, தன்னிலும் வலியவர்கள் தன்னைத் துன்புறுத்த நேர்ந்தால், தான் அஞ்சி நிற்கும் நிலையைச் சிறிது நினைத்துப் பார்த்தால் போதும், எல்லோருக்கும் அருள் நிலை பிறக்கும்.

## 123. புலால் மறுத்தல்

அருளுடைமை உள்ளத்தின் செயல்—இது நுண்வடிவம். அதன் காரியமாக அமைந்து நிற்பது உடலின் செயலாகிய புலால் மறுத்தல் ஆகும். இது பருவ வடிவம் ஆகும். இந்த உடல் உணவின் பயன். உணவை உண்டுதான் உடலை ஓம்பு கிறோம். அத்தகு உடலை ஓம்பத் தன் உடல் தசையைப் பெருக்கிக் கொள்வதற்காகப் பிற உயிர்களின் தசையை உண்ணுகின்ற ஒருவன் அருளுடையவன் ஆகான்.

எனவே, எவ்வகையில் அவனால் அருளாட்சி செய்ய இயலும்? பொருளைக் காப்பவனுக்குத்தான் பொருளால்

வரும் பயனாகிய பொருளாட்சி உண்டு. அருள் ஆட்சியும் ஊன் தின்னாத அருள் உள்ளத்தாரிடத்தேதான் பொருந்தி நிற்குமேயல்லாது, ஊன் உண்பவரிடம்அருளாட்சி அமையப் பெறாதென்பது திண்ணம்.

எங்ஙனம் கொலைக் கருவியைக் கைக் கொண்டவர் நெஞ்சம் அதனால் செய்யும் கொலையை நோக்குவது அல்லது அருளை நோக்காதோ, அங்ஙனமே பிறிதோர் உடலை, உடலின் ஊனை, உண்பவர் நெஞ்சமும் அருளை நோக்காது, நல்லனவற்றையே நினையாது, அருளற்றவற்றையே நினைக்கும்.

ஆகையினாலேயே அருள் என்பது கொல்லாமையே எனவும் அருள் அல்லாத மருள் என்பது கொல்லுதலே எனவும் கூறப்படும். இவ்வருளற்ற வழியிலே கொல்லப்படும் ஓர் உயிரின் ஊனைத் தின்பதோ பெரும் பாவம் என்ப தறிந்து அதைக் கைவிடல் வேண்டும்.

நிற்க இவ்வுடலை நாம் பெற்று வாழும் வாழ்க்கையோ, ஊன் உண்ணாதிருக்கும் அறத்தையே ஆதாரமாகக் கொண்டது. ஆதலால் பிற உடலின் ஊனை உண்பவனை விழுங்கிய நரகச் சேறு அவனைத் தப்பிப் போகுமாறு வெளியே திரும்ப உமிழாது. ஊன் விலைக்கு விற்கிறார்கள்; வாங்கித்தானே நாம் உண்கிறோம். அதில் பாவம் ஏது என்றால், தின்பவர் இல்லையேல் ஊனை விலைக்கு விற்கும் அங்காடி ஏது? எனவே தின்னுதற் பொருட்டாகவே உலகம் உயிரைக் கொல்கிறது.

மற்றும் அந்த ஊன்தான் பிறிதோர் உயிரினைக் கொன்றதனால் கிடைத்த புண் என்று அதன் தூய்மையற்ற தன்மையை உணரும் உணர்ச்சி ஒருவனுக்கு உண்டானால் அவன் புலால் உண்ணவே மாட்டான். எனவே மயக்க மாகிய குற்றத்தின் நீங்கிய அறிவுடையவன் உயிர் பிரிந்த உடலின் தசையை உண்ண மாட்டான்.

தெய்வம் யாகம் முதலியவற்றின் பெயரால் உயிர்ப் பலி செய்து, நெய் பெய்து ஆயிரம் யாகம் செய்வதைக் காட்டிலும் ஒரு உயிரையும் கொல்லா நோன்பு கொண்டு ஒழுகுதல் மிகமிக மேம்பட்ட அறச் செயலாகும். இப்படிப் பட்ட இவர்களே அருளாளர்கள் ஆவார்கள்.

ஆகையினால் இவ்வுலகில் கொல்லா நோன்மையும் ஊன் உண்ணா நோன்பும் கொண்ட அருளாளர்களையே எல்லா உயிரும் கைகூப்பித் தொழும் என்பதை உணர்ந்து, ஊன் உண்ணா நோன்பைக் கைக்கொண்டு அருளாளர் களாகத் திகழ வேண்டும் என்க.

## 124. தவம்

உலக அவாவைத் துறந்து துறவு நெறியிலே நிற்பவர் தம் உள்ளம் பொறி வழி போகாமல், புலனடக்கம் பெற்றவர் கைக் கொள்ள வேண்டியது தவநெறியே ஆகும். தவம் ஒரு ஒழுக்க நெறி. அதற்கு உருவம்—பரு வடிவம்—யாதெனில் தனக்கு உற்ற துன்பங்களைத் தாங்கிக் கொள்ளுதலும் பிற உயிர்களிடத்தில் அன்போடும் அருளோடு பழகுதலே —அவைகட்குத் தீங்கு செய்யாதிருத்தலுமே ஆகும்.

இத்தவ ஒழுக்கமும், முற்பிறப்பிலே நிலையாமை உணர்ந்து, ஞானம் முதிர்ந்து, பண்பட்ட, முன் தவப்பயன் உடையவர்க்கே கைகூடும். இதன்றி மேற்சொன்ன தகுதி யில்லார் அதை மேற் கொள்வது வீண் முயற்சியேயாம்.

தவசிகளுக்கு உணவு உடை முதலியன தேவைப்படும் அல்லவா? அவர்களோ, பிற உயிர்களுக்கு அறநெறி காட்டி, அருள் ஊட்டி, உலகை உய்விப்பவர்கள் ஆவர். எனவே அவர்களுக்குத் தாம் உணவும் உடையும் பிறவும் நல்கவே இல்லறத்தில் உள்ள நல்லோர்கள், தாம் துறவிகளா கும்

அவாவினை விடுத்து அதை மறந்து இல்லறத்திலேயே நிலைத்து நிற்கின்றனர் போலும்.

தவத்தின் வல்லமைதான் யாதெனில், அது, தன் தவ நெறிக்கு இடையூறாகப் பகைத்து நிற்பவர்களையெல்லாம் அழிக்கவல்லது. அது அந்நெறிக்கு ஆக்கமளிக்கும் நல்லோர்களை எல்லாம் உயர்த்தவல்லது. தவஞ் செய்வார் எவை நினைப்பாராயினும், தம் தவ வலியால் அவை உடனே அவர்க்கும் எய்தும். அது மட்டுமன்று, வேண்டியவற்றை வேண்டியவண்ணமே அளிக்க வல்லது தவமே. ஆகையினாலேயே அத்தகு தவம் இப்பிறப்பிலேயே அறிவுடையோரால் ஏற்றுக் கொள்ளப்படும் என்க.

எனவே, தவம் செய்பவரே பிறப்பின் உண்மையறிந்து தமக்குரிய கடமையைச் செய்பவராவார். அல்லாத பிறரோ, ஆசை வலையுட்பட்டு, இன்ப வாழ்வுக்குரிய வீண் முயற்சியால், பயனற்ற செயல்களைச் செய்பவர்களே ஆவர். இங்ஙனமாகத் தவ முயற்சியால் தங்களை வந்து சாரும். துன்பங்கள், தம்மை வருத்த அவை யாவும் பொறுத்துத் தவ நோன்பு நோற்பவர் புடமிட்ட பசுந்தங்கத்தைப் போலத் தன் ஒளியோடு விளங்குவார்கள்.

அங்ஙனமாகத் தன் உயிர் என்றும், தான் என்றும் கருதும் அகந்தை நீங்கப் பெற்ற உண்மைத் துறவியைப் பிற எல்லா உயிர்களும் நிச்சயமாக வணங்கும். அதோடு தவ நோன்பின் ஆற்றல் மிக்கவர்கள் காலனையும் கடந்து வெல்பவராவர்.

இப்படிப்பட்ட தான் என்னும் செருக்கற்று, தம் கருமம் செய்யும் நோன்பாம் தவத்தினை மேற்கொள்ளாதார் பலராகவும், நோற்பார் சிலராகவும் இருப்பதாலேயே, உலகில் செல்வர் சிலராகவும் வறியோர் பலராகவும் உள்ளனர் என்க.

# 125. கூடா ஒழுக்கம்

புலனடக்கத்தோடு உலக அவாவைத் துறந்து தவ நெறி நிற்கும் ஒழுக்க சீலர்களே தவக் கோலம் பூணத் தக்கவர்கள் என்று கண்டோம். அதற்கு மாறாகத் தாம் கை விட்ட காம இன்பத்தை, உள்ளத் திண்மை இன்மையால் உலகில் தவக் கோலம் பூண்டு துறவிகளாகப் பேர் வைத்துத் திரிபவர் பலர் உளர். தம் நெஞ்சிலே வஞ்சம் பொருந்திய அவர்கள் அதை மறைக்கப் பூண்டொழுகும் புறவேடமாம் தவக் கோலத்தைக் கண்டு, உடலிலே நிலைத்து நிற்கும் பஞ்ச பூதங்களும் தமக்குள்ளே கேலி செய்து சிரிக்கும்.

ஏனெனில் தன் மனம் குற்றம் எனத் தெரிந்தும், ஒருவனது நெஞ்சம் அக்குற்றத்தின்கண் தாழுமானால், அக் குற்றத்திலே அவன் உள்ளம் நிலைத்து நிற்குமானால், அவன் கொண்ட, வான் போல் உயர்ந்து நிற்கும் தவக் கோலம் என்ன பயனை அவனுக்குத் தரும்? தன் உள்ளத்தைத் தன் வயப்படுத்தும் வலியில்லாதவன் வலிமை மிக்க தவக் கோலம் பூண்டு, உள்ளம் இச்சிக்கும் உலக இன்பங்களைத் துய்த்தல், பசு புலித் தோலைப் போர்த்துப் பயிரை மேய்வதையே ஒக்கும். அத் தவ வேடத்திலே மறைந்து அறமற்ற செயல் களைச் செய்தல், புதரிலே மறைந்து நின்று பட்சிகளைக் கண்ணி வைத்துப் பிடிப்பதையே நிகர்க்கும்.

தம்மைப் பிறர் நன்கு மதித்தற் பொருட்டுத் தாம் உலகப் பற்றுகள் அனைத்தையும் துறந்து விட்டோம் என்று தம்மைப் பற்றி பறை சாற்றும் பொய்த் துறவிகளின் வஞ்சக ஒழுக்கம், அப்போது இன்பம் போலத் தோன்றினாலும், பின்னர் ஆ! ஆ! என்ன செய்து விட்டோம் என்ன செய்து விட்டோம்? என்று இரங்கும் (வருந்தும்)படியான பலப்பல துன்பங்களையே உண்டாக்கும் என்பது நிச்சயம்.

உள்ளத்தின் பற்றறுத்துத் துறவு நிலை காணாத துறவி களைப் போன்று வஞ்சித்து வாழும் கொடியவர்கள், இவ்வுலகில் வேறு யாருமிலர். ஏனெனில் புறத்திலே குன்றி மணியைப் போல வெளிப்பார்வைக்குச் செம்மையானவர் களாயினும், அதன் மூக்கிலே தோன்றும் கருமையைப் போன்ற மனம் இருண்டிருப்பவர் இவ்வுலகிலே உளர். இத்தகையோர் உள்ளத்திலே மாசு மண்டிக் கிடக்கும். ஆனால் தவமாண்புடையவர்களைப் போல நீரில் மூழ்கி வாழ்க்கை நடத்துவார்கள். இப்படிப்பட்ட வஞ்சனை யாளர்கள் இவ்வுலகத்தில் பலர் உளர். இவர்கள் வளைவில்லாமல் நேராகத் தோன்றாமல் கொலை செய்யும் கணையை(அம்பை)ப் போன்ற கொடியவர்கள். ஆனால் தவ நெறிக்குப் புறவேடம் புனையாத நல்லோரும் பலர் உளர். அவர்களே யாழின் கோட்டைப் போல வெளிப் பார்வைக்கு வளைவாகத் தோன்றினாலும் இனிய பண்பாளர்கள் ஆவார்கள். தம் செய்வினையால்இனிமையே பயப்பவர்கள். இவ்விருவகைப் பட்டவர்களின் அரிய செயல் திறத்தைக் கொண்டு நாம் அவர்களைக் கண்டறிதல் வேண்டும்.

எனவே, யாரும் நல்லொழுக்கத்தையே ஓம்புதல் வேண்டும். இந்த உலகம் எவ்வெவற்றைப் பழித்தனவோ அவ்வவற்றை ஒழித்தவர்கட்குப் புறவேடமாம் தலை மயிரினை மழித்தலோ, வளர்த்தலோ தேவையற்றதென்க.

# 126. வெகுளாமை

மனிதனுக்குத் தான் என்னும் அகங்காரத்தின் உச்சக் கட்டத்திலே தோன்றுவது சினம். தன்னையறிந்த துறவி களுக்கு இது தோன்றாது. தோன்றினும் உடனே மறையும். இச்சினம் தன்னிடம் தோன்றா வண்ணம் மக்கள் தங்களைக் காத்துக் கொள்ளுதல் வேண்டும்.

இந்தச் சினத்தைத்தான், அது செல்லத்தக்க இடத்திலே பலிக்கத்தக்க இடத்திலே, செல்லாமல் தடுத்துக் காத்தல் வேண்டும். அப்படித் தடுப்பதே, அருளால் தடுப்பதாகும். பிற இடங்களிலே — பலியாத இடங்களிலே — காத்தலும் காவாமையும் பயனிலவாம். ஏனெனில் செல்லா இடத்தில் —தன்னினும் வலியார் மேல்—வெகுளி எழின் அது தனக்குத் தீமையைப் பயக்கும். மற்றுச் செல்லும் இடமாகிய தன்னின் மெலியார்மேல் சினங்கொண்டால், அச்சினத்தைப் போல் தீமை பயப்பது வேறு பிற இல்லையாம். ஆகையினாலே யாரிடத்தும் சினம் கொள்ளாமல் ஒழித்தல் வேண்டும். அதாவது சினத்தை ஒரேயடியாக மறந்து விட வேண்டும். ஏனெனில் தீய விளைவுகள் அதனால் பல உண்டாகும். இச்சினம்தான் முகத்திலே சிரிப்பையும் அகத்திலே களிப்பையும் மாய்த்து விடுகின்றது. எனவே இதைக் காட்டிலும் வேறு பகை ஒருவனுக்கு இல்லை.

சினத்தைக் காவாதவனை அச்சினமே கடும்துன்பங்களை அடைவித்துக் கொன்றுவிடும். எனவே தன்னைத்தான் துன்ப மெய்தாமல் காத்துக் கொள்ள வேண்டுமெனில் தன் உளத்தில் சினம் எழாமல் காத்தல் இன்றியமையாதது. அதோடு இந்தச் சினம் தன்னைச் சேர்ந்தவர்களையும் அழித்து விடும் நெருப்பு. இதுவே சேர்ந்தாரைக் கொல்லி. தனக்குப் பாதுகாவலாக உள்ள சுற்றத்தாரையும் இது சுட்டழித்து விடும்.

தரைமீது ஓங்கி அறைந்தவனுடைய கை அத்தரைமீது மோதி ஊறடைவதிலிருந்து தப்பாது, தன்னுடைய ஆற்றல் உணர்த்தும். இதைப் போலவே சினத்தைப் பொருளாகக் கொண்டவன் தன் ஆற்றலிழந்து நிச்சயமாக அழிவெய்துவான். எனவே, கொழுந்து விட்டு எரியும் நெருப்பிலே மூழ்கித் தோய்ந்தெடுப்பதைப் போன்ற துன்பத்தை ஒருவன் நமக்குச் செய்தாலும் அவனிடமும் கூடுமானவரை வெகுளாமையே நன்று.

ஏனெனில் துறவத்தில் இருந்து தவம் செய்பவன் தன் உள்ளத்திலே சிறிதும் சினத்தை நினையாதிருப்பானாகில் அவன் தான் நினைத்த நன்மைகள் அனைத்தையும் முழுமையாக அடைவான். எனவே, சினத்தை அளவு மீறி, கொள்பவர் உயிரோடு இருந்தும் இறந்தவரோடு ஒத்தவரே. மாறாக சினத்தை அடியோடு துறந்தவர்களோ பற்றற்ற முற்றுத் துறந்த துறவிகளோடு ஒப்பானவர்களே.

## 127. கள்ளாமை

இஃது தனக்கு உரியதல்லாத, தான் துய்க்கக் கூடாத, பிறர் பொருளைத்தான் அனுபவிக்க வேண்டும் என்று நினையாமையும், நினைத்தவழி களவு செய்யாமையும் ஆம். இவ்வகையிலே, பிறர் பொருள்களைக் கவர நினைத்தல், அதைப் பற்றிப் பேசுதல், செயலால் திருடல், மூன்றுமே, விலக்கப்பட வேண்டியனவாம்.

இவ்வுலகில் தான் பிறரால் இகழப்படாமல் வாழ வேண்டுமானால் அவன் எப்படிப்பட்ட, கிடைத்தற்கரிய பொருளாயினும், பிறரிடமிருந்து வஞ்சித்துக்கவர எண்ணாதபடி, தன் நெஞ்சைக் காத்துக் கொள்ளல் வேண்டும். ஏனெனில், பிறர் பொருளைக் கவர்வோம் என்னும்

குற்றத்தை உள்ளத்தால் நினைத்தலும் தீதே. எனவே தான் பிறர் பொருளை வஞ்ச நெறிக்கண்ணே அடைவோம் என்று பேசற்க. பேசுவதை விடத் தீங்கு பயக்கும் நினைத்தலும் செய்யற்க.

ஒரு வேளை களவு செய்வதால் ஒருவனுக்குச் செல்வப் பெருக்கு ஏற்பட்டாலும், அச்செல்வம் அளவுக்கு மீறி ஆவது போல் தோன்றி அழிவெய்தும். எனவே, ஒருவனுக்குக் களவிடத்து உண்டாகும் அளவு கடந்த ஆசை தான். அப்போது இனிமையாகத் தோன்றினும், பயன் நல்கும்போது முடிவற்ற துன்பத்தையே விளைவித்து விடும்.

ஆகவே, அருட்செல்வத்தையே உயர்ந்ததாகக் கருதி அன்புள்ளம் கொண்டவர்கள், பிறர் பொருளை வஞ்சித்து களவு செய்ய அவர்கள் ஏமாந்த நேரத்தினை எதிர்பார்த் திருப்பதில்லை. மற்றும் களவு செய்து பிறர் பொருளைக் கொண்டு வாழ்வதில் பெருவிருப்பங் கொண்டவர்கள், உயிர், உலகு, இறை என்ற முப்பொருள் இயல்புகளை அளவை நூல்களால் ஆராய்ந்து உண்மை நெறியினைக் கைக் கொண்டு ஒழுகமாட்டார்கள்.

களவு ஒழுக்கத்திற்குக் காரணமே, பிறர் பொருளைக் கவர்ந்து அனுபவிக்க எண்ணும் அறிவு மயக்கமாகும். இந்த அறிவு மயக்கந்தான் மேற்கூறிய முப்பொருள் இயல்பினை அளவைகளால் அறிந்து வாழ்க்கை நடத்தும் ஆற்றல் உள்ள அறிஞர்களிடத்திலே நிச்சயமாக இல்லை. அது மட்டுமன்று தத்துவ நூல் அளவைகளைப் பயின்று அறிந்தவர் நெஞ்சத் திலே, அறம் நிலை பெற்று நிற்பதைப் போலவே, களவு செய்து பழகியவர்களின் நெஞ்சத்திலே, வஞ்சனையும் நிலை பெற்று நிற்கும்.

வஞ்சனையால் பிறர் பொருளைக் கள்ள வழியே கவர்வோம் என்பதைத் தவிர, பிற நல்வழியை நம்பித்

தெளியாதவர்கள், தம் அளவுக்குமீறிய, சக்திக்கு அப்பாற்பட்ட செயல்களைச் செய்வதால் உடனே அழிந்து போவார்கள்.

இந்த உலகிலே உடலோடு பொருந்தி வாழும் உயிர் வாழ்க்கையும் களவு செய்வார்க்குத் தவறி விடும். ஆனால் களவு செய்தலின் நினைவே இல்லாமல் தூய எண்ணத்தோடு வாழ்கின்றவர்கள் தேவருலக வாழ்வையும் தவறாமல் எய்துவர்.

## 128. இன்னா செய்யாமை

பிறரிடம் சினம் கொள்ளுதல் உள்ளத்தின் செயல். இக்காரணத்தின் காரியமோ இன்னாத செய்தல் ஆகும். உடலுக்கு வரும் ஏதோ ஒரு பயன் நோக்கியோ, கோபத்தாலோ மறதியாலோ இன்னாத—தீயதான தீங்கு விளைவிக்கும் செயல்களைச் செய்தல், மிகத் தீயதாகும். அங்ஙனம் பிறர்க்குத் தீயவை செய்தல், சிறப்பினைத் தரும் செல்வத்தைப் பெறுவதாக இருப்பினும் அதைச் செய்யா திருத்தலே உளத்தின்கண், காம வெகுளி மயக்கமாகிய மாசற்றவர்களின் கொள்கையாகும்.

அத்தகைய காம வெகுளி மயக்கமற்றவர்கள், பிறர் தம்மீது கோபித்துத் தீங்கையே செய்தாலும் மீண்டும் தீமைக்குத் தீமை என அவர்மாட்டுத் தீங்கு செய்யாமையே தமது துணிபாகக் கொள்வார். அதுமட்டுமன்று பிறர்க்கு நாம் எத்தகைய தீங்கைச் செய்யாதிருந்த காலத்தும், அவர் நம்மீது கோபித்து நமக்குத் தீங்கு செய்தாலும் நம்மிடம் தவறு இல்லாதிருந்தும் தீங்கு செய்தானே என எண்ணிப் பதிலுக்குப் பதிலாக அவர்களுக்குத் தீங்கு செய்யவோமானால் அதனால் நமக்குத் தப்ப முடியாத துன்பங்களே

விளையும். எனவே நம்மிடம் இன்னாத செய்யும் அவர்களைத் தண்டிக்கும் முறை யாதெனில் அவர் செய்த தீமைக்குப் பதிலாக நாம் அவர்களுக்கு நன்மையைச் செய்து அவர்களை அதன் மூலமாக வெட்கப்பட வைத்து, பின்னர் அவர் செய்த தீங்கையும், மாறாக நாம் அவர்க்குச் செய்த நன்மையையும் நாம் மறந்து விடுதலே ஆகும்.

நாம் துன்பப்படும் போது வருந்துகிறோம். பிற உயிர் களும் தாம் துன்பப்படும் போது அங்ஙனமே வருந்தும் அல்லவா? இதை உணராது பிறிதோர் உயிர்க்கு உற்ற துன்பத்தைத் தமக்குற்ற துன்பம் போல் போக்க முயலாத போது நாம் பெற்ற அறிவால் பயன்தான் என்ன? எனவே, இவை பிற உயிர்களுக்குத் தீங்கு பயக்கும் என நாம் உணர்ந்தவைகளைப் பிறரிடம் செய்யாமையே ஒருவன் தன் கொள்கையாகக் கொள்ள வேண்டும். அப்படிக் கொண்டால் எக்காலத்தும், யாரிடத்தும் அறிஞர்களும் துறவோர்களும் ஒரு சிறிதும் மனம் அறிந்த துன்பச் செயல்களை மறந்தும் செய்ய மாட்டார்கள். இதுவே தலையாய பண்பு.

அப்படியின்றி, பிறர் செய்யும் தீங்கினால் தன் உயிர்க்கு வரும் தீமையை அனுபவித்து அறிபவன், தன் உயிர்க்குத் துன்பம் செய்பவை இவை இவை என அறிந்தும், தான் செய்யும் தீமையால் பிற உயிர்களுக்குத் துன்பம் செய்கிறான் என்றால், அது எக்காரணத்தால்? (அகந்தையும் அறியாமையுமேயன்றி வேறென்ன அதற்குக் காரணம்?)

எனவே, ஒவ்வொருவரும், தாம் பிற உயிர்களுக்கு முற்பகலில் ஒரு தீமை செய்வாராயின், அத்தீமை பிற்பகலி லேயே தங்களை வந்தடையும் என உணர்தல் வேண்டும். ஏனெனில் தீமைகளெல்லாம் அதைச் செய்பவர்களையே

அறிந்து சென்றடையும். எனவே தம் உயிருக்கு எந்தத் தீமையும் அடைய வேண்டாதார், பிறர்க்கு எவ்வகைத் தீமையும் செய்ய மாட்டார்கள்.

## 128. நிலையாமை

உலகில் உள்ள பொருள்கள் யாவும் நிலையற்றனவே. இவ்வுலகமும் நிலையற்றதே. இவை நாம் காண்கின்றவாறே நிலைத்திருப்பவை அல்ல. நம் யாக்கையும் இளமையும் செல்வமும் நிலையற்றனவே. இவ்வகையாக நிலையற்ற பொருள்களை எல்லாம் நிலையானவை எனக் கருதுகின்ற பேதமை மிக்க அறிவே கடைப்பட்டதாகும். உதாரணமாக ஒருவனிடத்தில் பெருஞ் செல்வம் வந்து சேர்கிறது; அது தான் நாடகம் ஆடும் மண்டபத்திலே ஒவ்வொருவராக வந்து சேர்வதை ஒக்கும். நாடகம் முடிந்த உடனே திரண்டிருந்த மக்கள் கூட்டம், ஒருங்கே மண்டபத்தை விட்டு விலகிப் போவதைப் போல, செல்வமும் ஒருங்கே பற்பல வாறாக, உடனே விலகி ஓடிப் போய் விடும். இந்த முறையிலே நிலையற்ற தன்மையினை உடையது பொருட் செல்வம். இத்தகு செல்வத்தை ஒருவன் பெற்றால், நீடு நிலைத்திருக்கும் அறச்செயல்களை அப்போதே செய்தல் வேண்டும்.

செல்வம் எப்படி நிலையற்றதோ அதைப் போன்றதே நம் வாழ்நாளும். இதை ஆராய்ந்தவர்கள் ஒரு நாள் என்பது ஒரு கால அளவை போலத் தன்னைக் காட்டிக் கொண்டாலும், அது உயிரை உடலிலிருந்து பிரித்து அறுக்கும் வாளாகும். அவ்வாளின் வாயிலே நம் உயிர் உள்ளது என்பதை அவர் அறிவர். எனவே நம்முடைய நாக்கு செயலற்றுப் போய் விக்கல் மேலெழும்பி வாழும் வாழ்வின்

மூடிவு நாள், நமக்கு வருவதற்கு முன்னே நாம் நல்ல நல்ல அறச் செயல்களை ஆற்றுதல் வேண்டும். ஏனெனில் நேற்றிருந்தவன் இன்று இல்லை இறந்து விட்டான் என்னும் நிலையாமையையே ஒரு பெருமையாக உடையது தாம் இந்த உலகம்.

இவ்வகையாக வாழ்நாளும் செல்வமும் நிலையற்றவை. இப்படிப்பட்ட வாழ்நாளில் தன்மையை அறிவிலார் ஒரு பொழுதும் ஆராய்ந்து அறிவிலர் ஆனால் வீணாக எண்ணுதலோ ஒரு கோடி பகற் கனவுகள் அல்ல, அவற்றிலும் மிகப் பல.

இந்த நம் உடலோடு உயிருக்குள்ள உறவுதான் கூடும் பறவையும் போன்றது. பறவை கூட்டை விட்டுத் தனியே எந்த நேரத்திலும் பறந்து சென்றுவிடும். அதைப் போலவே உடலின்கண் உள்ள உயிரும் எந்த நேரத்திலும் ஓடி விடலாம். அதுதான் உயிருக்கும் உடலுக்கும் உள்ள தொடர்பு. நாம் கண்மூடி உறங்கி விடுவதைப் போன்றது தான் இறப்பு. அதன் பின் பிறப்பு வருதல் உறக்கம் நீங்கிக் கண் விழிப்பது போன்றதே ஆகும்.

இந்த முறையிலே நோய்க்கு இருப்பிடமான உடம்பு எனும் வாடகை வீட்டிலே, ஒதுங்கிக் கிடக்கும் நமது உயிர்க்கு நிலையான, சொந்தமான, ஓர் இருப்பிடம் இது வரை அமையவே இல்லை போலும்.

# 130. துறவு

உடல், இளமை, செல்வம், உலகம், முதலியன யாவும் நிலையற்றன என உணர்ந்தவர்கள், நிலைமாறும் செல்வத்தின் மேற் செல்லும் புறப்பற்றையும் நிலையற்ற யாக்கையின் மேற் செல்லும் அகப்பற்றையும், அடியோடு துறந்து விடுவார்கள்.

ஒருவன் பொருள்களின் மேல் உள்ள பற்றிலிருந்து எவ்வளவு தன்னை விடுவித்துக் கொள்கிறானோ அவனுக்கு அவ்வப் பொருள்களின் பற்றுதலால் உண்டாகும் துன்பம் இலவாகும். இப்படியாக ஒவ்வொரு பொருளாக எல்லாப் பொருள்களிலும் உள்ள பற்றுள்ளத்தைத் துறந்து விட்டால், ஒருவனுக்கு இம்மையில் உண்டாகும் மனம் மொழி மெய் அலைதல் இல. நல் நெறிக் கண் நிற்றலால் வரும்நிலைத்த இன்பங்கள் பலவாம். அப்படிப்பட்ட இன்பங்கள்அடைய வேண்டின் இம்மையிலே காலத்தோடு துறவு மேற்கொள்ள வேண்டும்.

இத்துற வொழுக்கத்துக்குத் தலையாய பண்பு நாம் நம் ஐம்புல நுகர்ச்சி இன்பங்களுக்கு அடிமையாகாமல், அவற்றின் அவாவைக் கெடுத்துவிடவே ஆகும். அதோடு, அவை நுகர்தற் பொருட்டு நம்மால் ஈட்டப்பட்ட பொருள் களை எல்லாம் அடியோடு விட்டுவிடுதல் வேண்டும். இவையே துறவு மேற்கொண்டவர்க்குக் கடன் ஆகும். யாதானும் பற்றப்படுவதொரு பொருளிலும் ஒரு பற்றும் இல்லாதிருத்தலே துறவிகட்கு இயல்பாகும். மாறாக யாதானுமொரு பற்றுடைமையேனும் உண்டாகுமானால் அது அத் துறவு நெறியை அவமாக்கி மீண்டும் மயங்குவதற்கு ஏதுவாக்கிவிடும்.

இந்தப் பிறவியே வேண்டா; நாம் இப்பிறவிப் பிணியி லிருந்து விடுபட வேண்டும் என அதற்குரிய மேலான

நெறியை மேற்கொண்டவர்களுக்கு இன்பம் நுகர்தற்கு இடமாகிய "நான்" என்னும் இவ்வுடம்பும் ஒரு சுமையே. ஆகையினால் அதற்குப் புறமாக உள்ள எனது என்னும் பிற பொருள்களின் மேல் தொடர்பு கொள்வது ஏன்? எனவே "தான்" அல்லாத உடம்பை யான் என்றும், தன்னோடு இயைபில்லாத பொருட்களை எனதென்றும் கருதும் அகப்பற்று, புறப்பற்றுகளை அறுத்தவனே வானோர்க்கும் மிக அரிதாகிய வீட்டின்பத்தினை அடைவான்.

மாறாக மேற்கூறிய இருவகைப் பற்றுக்களையும் இறுகப் பற்றி விடாதவரைத் துன்பங்களும் இறுகப் பற்றிக் கொள்ளும், விட்டு விலகா.

இந்த வகையில் முற்றத் துறந்தவரே வீடு பேற்றினை அடையத்தக்க மிக உயர்ந்த நிலையினர். பற்றுள்ளங் கொண்டு முற்றத் துறவாதவரோ அறியாமை, பிறவி என்று மயங்கிப் பிறவி வலையில் பட்டவர் ஆவர்.

எனவே, இருவகைப் பற்றும் முற்றும் அற்ற ஒருவனுக்குப் பிறவித் துன்பம் ஒழியும். மாறாகப் பற்று முற்றும் அறவில்லையெனில் அவனுக்குப் பிறவித் துன்பம் மாறி மாறி வரும். உடம்பு உலகம் ஆகிய நிலையாமைப் பொருட்களே அவனுக்குக் காணப்படும்.

ஆகையினால் எல்லாப் பொருள்களினூடும் பற்றி நின்றும் யாதொரு பற்றுமற்ற இறைவன் மாட்டுள்ள பற்று மட்டுமே நல்நெறி எனப் பற்றுக. உலகப் பற்றை அடியோடு விட்டொழிப்பதற்கு அந்தப் பற்றே சிறந்த உபாயமும் ஆதாரமும் ஆகும்.

# 131. மெய்யுணர்தல்

பந்தம், பந்த நீக்கம், வீடு, இறை, உலகு, உயிர் இவை களை ஐயம் திரிபறத் தம் மெய்யறிவால் உள்ளவாறு உணர்தல் மெய்யுணர்தலாகும்.

நம் வாழ்க்கைக்கு இன்றியமையாத ஒன்று இந்த மெய்யுணர்தல். உள்ளதை உள்ளபடி உணரும் தன்மையே மெய்யுணர்தல் என்பது துறவிகளுக்கோ எனில் இதுவே அவர்தம் மூச்சாகும். வாலறிவால் இந்த மெய்யுணர்தல் துறவிகளிடம் அமைவதில்லையேல், விரதம், தவம், ஞானம், வீடுபேறு முதலிய எதனாலும் ஒரு பயனும் இல்லை.

உலகத்திலே நாம் காண்பன சில, காணாதன பல; அவைகளுள் "காண்பன எல்லாம் மெய்ப்பொருள் ஆகா. காணாதன எல்லாம் பொய்யாகிப் போகா" என்று உளங்கொண்டு, உண்மைப் பொருள் எது என்பதை உணர்தல் வேண்டும். உண்மைப் பொருள் அல்லாத பொய்ப் பொருள்களையே உண்மையானவை என்று மயங்கி அறியும் விபரீத உணர்ச்சிதான், பிறவித் துன்பத்தின் ஆணிவேர் ஆகும். அப்படியின்றி அறியாமையிலிருந்து நீங்கி, உள்ள வாறு மயக்கமில்லாமல், தெளிவாக அறியும் தன்மை உடையவர்களுக்கோ அம்மெய்யுணர்வு மயக்கமில்லாத இன்பத்தையே உண்டாக்கும். மேற்கூறியவாறு ஐயமில் லாத தெளிவான மெய்யுணர்வு பெற்ற அறிவாளர்களுக்கு இவ்வுலகைவிட வானுலகம் அண்மையிலே உள்ளதாகும் என்க.

துறவியோ, பிறரோ, தத்தம் புலன் உணர்ச்சிகளை எல்லாம் தம் வயப்படுத்திய வழியும் மெய்யுணர்தலாம். அறிவைத் தாம் பெறவில்லை எனில் அது பயனற்றதேயாம். எனவே, காணும் பொருள்கள் எவ்வியல்பினதாயினும்

எத்தன்மைத்தாயினும் அப்பொருளின் வழிநின்று அப்பொருளிலே உள்ள உண்மைப்பொருளை அறிதல்வேண்டும். இதுவே மெய்யறிவு.

இங்ஙனமாக ஞானநெறியினை அனுபவமுடையவர்பால் கற்றுணர்ந்து மெய்ப் பொருள் உணர்ந்தவர்களே மீண்டும் பிறவியின்கண் வாராத நெறியை எய்துவர். எனவே, எவருடைய உள்ளம் கற்றுணர்ந்த உண்மைப் பொருளை ஆராய்ந்து தெளிந்து உணர்கின்றதோ, அவருக்கு மறுபிறவி இல்லையென்பது திண்ணம். ஆகையினால் இந்தப் பிறப்புக்குக் காரணமாகிய அறியாமை விலகும்படியான வீடு என்னும் உயர்ந்த நிலைக்குக் காரணமான உண்மைப் பொருளைக் காண்பதே மெய்யறிவு என்னும் ஞானமாகும்.

இந்த மெய்யுணர்தல் இல்லாப் பொய்யறிவாம் மயக்கம் ஒரு நோயே ஆகும். உலகத் துன்பங்களுக்கு ஆணிவேராயும் வீட்டின்பத்துக்குத் தடையாயும் நிற்பது இந்த மயக்கமே. இது விலக, நாம் எல்லாப் பொருள்களுக்கும் சார்பாகிய உண்மைப் பொருளை உணர்தல் வேண்டும். உணர்ந்து நம் அகச்சார்பு, புறச்சார்பு, கெட நம்முடைய பற்றுள்ளம் அழியுமாறு உள்ளத்துறவோடு ஒழுக வேண்டும். அப்படி ஒழுகும் அவனை, அச்சார்பு, சாகக்கடவதாகிய துன்பங்களை அழித்துச் சார்ந்துள்ள துன்பங்களும் வந்து சேராதபடி செய்யும். அங்ஙனம் காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூன்றின் பெயரே அழியும்படி நாம் உள்ளத்துறவுடன் தவயோக ஞானத்தோடு ஒழுகினால், மேற்கூறிய பிறவித் துன்பமும், வினைத்துன்பமுமாம் நோயும் அழியும். மெய்யுணர்வாம் ஞானம்முதிர்ச்சியும் அடையும் என்பதாம்.

# 132. அவாவறுத்தல்

எல்லா வகைப்பட்ட துன்பங்களுக்கும் மூலகாரணம் ஆசையே (அவாவே). மற்று இந்த அவா ஒன்றுதான் எல்லா உயிர்களுக்கும் எக்காலத்திலும் ஒழியாமல் வரும் பிறவியை விளைவித்திடும் வித்தாகும். பிறவித் துன்பத்தை நன்கு உணர்ந்த ஒருவன் இந்த உலகத்திலே ஏதாவது ஒன்றை வேண்டிப் பெறுவதாயின் பிறவாமையைத்தான் வேண்டிப் பெறவேண்டும். அந்தப் பிறவாமையும், ஒன்றையும் தான் விரும்பாத வேண்டாமை என்னும் அவா அற்ற நிலையி னாலேதான் பெற முடியும். வேண்டாமையைப் போன்ற மேலான மேன்மைதரும் செல்வம் வேறு ஒன்றுமே இவ் வுலகில் இல்லை. வேறு எங்கும் அதற்கு நிகரான பொருள் இல்லை. நம் உயிருக்குத் தூய்மை என்று சொல்லப்படுவது அவா அற்ற நிலையே. அந்த அவா அற்ற நிலையும் உண்மை யான மெய்ப் பொருளை விரும்புவதால் மட்டுமே உண்டாகும்.

இவ்வகையில் பற்றற்ற துறவிகள் எனப்படுபவர் அவா அற்றவரே. அவா அல்லாத பிறவற்றை விட்டவரோ முழுமையாக அற்றவர் அல்லர். மக்கள் எதையும் பூரண மாகத் துறந்தவர் அல்லர். அவர்களுடைய சோர்வின் கண்ணே வஞ்சித்துக் கெடுத்துவிடுவது இந்த அவாவுடை மையே ஆகும். எனவே, தம் உள்ளம் ஆசையினால் கெட்டுப் போகாதவாறு அவாவுக்கு அஞ்சி வாழ்வதே அறவாழ் வாகும்.

இப்படி அடுத்துக் கெடுத்துவிடும் ஆசையினை முற்றும் கெடும்படி ஒழித்துவிட்டால், அவன் கெட்டுப் போகாமல் வாழ்வதற்குரிய நல்ல செயல்கள் அவன் விரும்பும்படியே அவனுக்கு வாய்க்கும்.

அல்லல்பட வேண்டும்? இரண்டையும் ஒருசேர அனுபவித்தல் அன்றோ வாழ்க்கை.

எனவே, ஊழைக் காட்டிலும் வல்லமை மிக்கது இவ்வுலகில் யாது உளது? அதை விலக்குதற் பொருட்டாக வேறு ஒரு உபாயத்தை மேற் கொண்டாலும் அங்கும் அதுவே முன் நின்று தன் பயனை விளைவித்துவிடும்.



# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 8 | 21 | நிற்கிறதோ | நிலவி நிற்கிறதோ |
| 13 | 15 | பாவையை | பார்வையை |
| 13 | 25 | இப்போதைக்கு | இப்பேதைக்கு |
| 17 | 19 | அவணையே | அவணையே |
| 20 | 17 | துற்றுகிறது | தூற்றுகிறது |
| 26 | 7 | மென்று | சென்று |
| 27 | 25 | பசலையே | பசலையை |
| 28 | 1 | பசலையே | பசலையோ |
| 35 | 4 | ஆற்ற மட்டாத | ஆற்ற.மாட்டாத |
| 38 | 6 | அறியாமல் | அழியாமல் |
| 42 | 22 | இரந்தானே | இரந்தாளே |
| 43 | 24 | என்பறிந்தேன் | என்பதறிந்தேன் |
| 44 | 10 | மறுத்துவிட்டா | மறுத்துவிட்ட |
| 46 | 30 | கூறினாள் | கூறினான் |
| 47 | 2 | அவளிடம் | அவனிடம் |
| 47 | 17 | நான் | நாள் |
| 48 | 17 | கொண்டாள் | கொண்டான் |
| 54 | 13 | விழும் | விடும் |
| 74 | 23 | அக் | — |
| 75 | 24 | நல்லவனாகிய | நல்லனவாகிய |
| 75 | 27 | உயர் | உயிர் |
| 87 | 20 | மனத்தை | மானத்தை |
| 89 | 4 | வீழ்த்தலும் | வீழ்த்திட |
| 91 | 29 | இன்மை | இம்மை |
| 97 | 28 | படையும் | படையையும் |
| 98 | 12 | தெளிந்து | தெரிந்து |
| 126 | 8 | ஆகுது | ஆகும் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 126 | 9 | செய்த | செய்து |
| 129 | 15 | மன்னன் மன்னர் | மன்னன் |
| 133 | 5 | பயிறுக்கு | பயிர்க்கு |
| 144 | 2 | யானுப் | யானும் |
| 144 | 9 | கொல்லுதலைப் | கொள்ளுதலைப் |
| 144 | 27 | கேவாமல் | கேளாமல் |
| 151 | 13 | பேதைக்காம | பேதையாம் |
| 152 | 1 | பொய்யானாகுப் | பொய்யனாகிப் |
| 153 | 13 | பேதையாகக் | மேதையாகக் |
| 154 | 7 | இள்வுலகிலே | இவ்வுலகிலே |
| 163 | 18 | பட்டவள் | பட்டவன் |
| 164 | 24 | செய்தவர் | செய்யாதவர் |
| 167 | 30 | புகுத்தல் | புகுதல் |
| 169 | 27 | நாம் | தான் |
| 173 | 30 | பிறந்தவள் | பிறந்தவன் |
| 176 | 13 | உரியவள் | உரியவன் |
| 177 | 26 | வாழ்பவணையே | வாழ்பவனையே |
| 178 | 18 | தன் | தான் |
| 178 | 25 | உலகதே | உலகமே |
| 179 | 18 | உலக்கும் | உலகுக்கும் |
| 179 | 23 | நன்குணர்ந்தவார்கள் | நன்குணர்ந்தவர்கள் |
| 179 | 24 | செய்வார்கள் | செய்யார்கள் |
| 181 | 16 | அறிமையால் | அறியாமையால் |
| 185 | 16 | குழந்தை | குலத்தை |
| 192 | 12 | உடைாக்கக் | உடைக்கக் |
| 197 | 8 | ஊணை | ஊனை |
| 199 | 13 | செவ்பவராவார் | செய்பவராவார் |
| 200 | 28 | நிச்சயம் | என்பது நிச்சயம் |
| 208 | 8 | அறிவிலர் | அறிகிலர் |
| 209 | 18 | கெடுத்து விடவே | கெடுத்துவிடலே |
| 210 | 13 | பேற்றினை | பேற்றினை |



அதுமட்டுமல்ல; அவா இல்லாதவர்க்கு எவ்வகைப் பட்ட துன்பமும் வருதல் இல்லை. மாறாக அவா உள்ளத் திலே நிலை பெற்று இருந்தாலோ எல்லா வகைத் துன்பங் களும் ஒழியாமல் முடிவின்றி அடுத்தடுத்து வந்தடையும்.

துன்பத்துக்குள்ளே மிகப் பெரிய துன்பமான அவா என்பது அழிந்து விடுமானால் இடையறாத இன்பநிலை ஒருவனுக்கு எப்போதும் வாய்க்கும்.

ஏனெனில் அவா என்பது எக்காலமும் நிரம்பாத திருப்தி யற்ற தன்மையை உடையது. அப்படிப்பட்ட அவாவினை ஒருவன் ஒழித்து விட்டால் அந்த நிலையே அவனுக்கு எக்காலத்தும் மாறாத இன்பத்தைத் தரும்.

## 133. ஊழ்

ஊழ், விதி, நியதி, பால், முறை இவை யாவும் நம் வாழ்விலே ஏற்படும் சூழ்நிலை, சொல், செயல் இவைகளால் ஆம் பயன் என்பவற்றுக்கு உற்ற பெயர்கள். இந்த ஊழ் தான், ஆகும் ஊழ் என்றும், போகும் ஊழ் என்றும் இரண் டாகப் பகுக்கப்பட்டுள்ளது. இதன்படி ஒருவன் பொருள் மிக்கவனாவதற்கு ஏற்ற ஆ கூழால் முயற்சி உண்டாகும். மாறாக போகும் ஊழ் அமைந்து நின்றாலோ சோம்பல் தான் அவனிடம் அமையும். அது மட்டுமன்று; ஒருவன் எத்துணை அறிவு வாய்ந்தவனாயினும் அவனுக்கு இழக்கும் ஊழ் அமையும் காலத்திலே அவன் அடைவது சோம்பல். அதனால் அவன் பெற்றுள்ள தன் அறிவையும் இழந்துவிட அந்த இழ ஊழ் அவனைப் பேதையாக்கும். மாறாக ஆகல் ஊழ் வந்துற்ற காலத்திலோ அவனுக்கு அறிவு மிக விசால மாகி அவனை மேம்படுத்தி விடும்.

இம்முறையிலே ஒருவன் மிக நுட்பமான நூல்கள் பல கற்றமைந்த போதிலும் அவன் செயல்படும்போது அவனுக் கென அக்காலத்தமைந்த ஆகும் ஊழ், போகும் ஊழுக் கேற்பவே அவன் உண்மை அறிவு மேம்பட்டுத் தோன்றும்.

இந்தப் பரந்த உலகிலே ஊழால் அமைந்த இயற்கை நியதி இருவகைப்பட்ட வேறுபாட்டினை உடையது. ஒரு வகை, செல்வம் அமைந்திருத்தல். மற்றொன்று அறிவுடைய னாக அமைதல்.

மற்றும் அச்செல்வத்தை ஈட்டும் முயற்சியிலே தீய ஊழ் வந்துற்றபோது நல்லன எல்லாம் தீயனவாகலும் உண்டு. நல்ல ஊழ் வந்தடையும் காலத்தில் தீயனவெல்லாம் நல்லனவாதலும் உண்டு. இது மட்டுமா? நமக்கு ஊழினால் வாராத பொருள்களை நாம் மிக வருந்தி முயன்று காத்தா லும் அவை நம்மிடத்துத் தங்காமல் போய் விடும். மாறாக ஊழ் வயத்தால் நமக்குரிய பொருள்களை நாம் வெளியே வேண்டாமென்று வீசினாலும் அவை நம்மை விட்டகலா.

இம்முறையிலே நுகர வேண்டிய பலப்பல பொருள் களைக் கோடிக்கணக்காகச் சேர்த்து வைத்திருந்தாலும், இறைவன், ஊழால் நமக்கென வகுத்த வகைப்படியல்லாமல் அவற்றை நம்மால் நுகர முடியாது. அவரவர் அனுபவிக்க வேண்டிய இன்பதுன்பங்களை ஊழானது ஊட்டாது விட்டு விட்டால், இவ்வுலகிலே இன்பத்தை அனுபவிக்க இயலாதவர்கள் துறவறத்தை நிச்சயம் மேற்கொண்டு இருப்பார்கள்.

நமக்கு ஊழால் நல்லன விளைகின்றன. அப்போது நாம் அதை இன்பம் என மகிழ்கின்றோம். மாறாக ஊழால் நமக்குத் துன்பம் விளைகின்றபோது மட்டும் ஏன் வெறுத்து